# சமயமும் சங்கத்தமிழும்



டாக்டர் புரட்சிதாசன் எம்.எ.

# சமயமும் சங்கத்தமிழும்

முத்தமிழ்ச்செம்மல்

**டாக்டர் புரட்சிதாசன் எம்.ஏ.,**

அமைப்பாளர் :
தென்னக இசைத்தமிழ் ஆய்வுப் பேரவை

தலைவர் :
தமிழ் எழுத்தாளர் பேரவை

பசும்பொன் பதிப்பகம்
17, வடக்குபோக்கு சாலை
தியாகராய நகர், சென்னை-17

## நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | சமயமும் சங்கத்தமிழும் |
| ஆசிரியர் | : | டாக்டர் புரட்சிதாசன் எம்.ஏ. |
| பதிப்பு | : | டிசம்பர் 1994 |
| உரிமை | : | ஆசிரியருக்கே |
| தாள் | : | 14.2.கி.கி. வெள்ளை |
| நூலின் அளவு | : | 14×21.5. செ.மீ |
| எழுத்து | : | 10.புள்ளி |
| பக்கங்கள் | : | 16+164=180 |
| படிகள் | : | 1, 200 |
| **விலை** | : | **ரூ. 50-00** |

நூல் கிடைக்குமிடம்:

**தென்னிந்திய சைவ சித்தாந்த**
**நூற்பதிப்புக் கழகம்**
15-A. டி.டி.கே சாலை
சென்னை-18

அச்சகம் :

**வேமன் பிரிண்டர்ஸ்**
ஜோசியர் தெரு, 19, நியூ காலனி
நுங்கம்பாக்கம், சென்னை-600 034.
போன் : 82 66 55 4-P.P.

வெளியீடு, விற்பனை, நூல் கிடைக்குமிடம் :

**பசும் பொன் பதிப்பகம்**
17, வடக்கு போக்கு சாலை
தியாகராய நகர், சென்னை-17.

# சங்கத்தமிழ்

சங்கம் வளர்த்த வரலாற்றுத் தமிழ் எவ்வாறெல்லாம் அந்த மக்களை அடிமை கொண்டு குருடர்களாகப் புலம்பி விழாவைத் திருக்கிறது, மேலாதிக்கத்தினருக்கு பட்டினிகிடந்தே கீழாதிக்கம் பணி செய்யும் வர்ணக் கெடுபிடிகள்; இவைகளுக்குக் காரண மான சமயவாத சம்பிரதாயச் சடங்குகள், சட்டம், அறிவுரை நூல்கள்—பயன்படுத்தப்பட்ட அடக்கு முறை ஆகியனவெல்லாம் தங்களின் இரத்தக் கறைகளை இன்றும் நிறங்காட்டிக் கொண்டிருக்கின்றன.

•

தமிழ் இயல் என்பதன் பெயராலும், தமிழிசை என்பதன் பெயராலும் தமிழ் நாடகம், நாட்டியம் என்பதன் பெயராலும் புராணப் பயமுறுத்தல்களைக் காட்டி அதன் பூசாரிகளாக நின்று புனிதம் என்ற பெயரில் தம்மை ஏமாற்றி அடக்கி வியாபாரி களாக வாழ்பவர்களையும் அவர்களின் அடிமைகளாக வாழும் கூலிக் கை நாட்டுகளையும் பற்றிச் சிந்திக்க வேண்டும்.

இன்றைய அகில இந்திய நிலவாரி மாநிலமாக ருக்வேதத் திராவிட மக்களை அடிமையாகக் கொண்ட முற்பட்ட மநுவாத பிரிவினையில் உத்திரப் பிரதேசம், மத்தியம், தட்சணம் என்ற மூன்று மண்வாரி எல்லைகளை உத்திரம், மத்திமம்—என்ற வடமாநிலங்களை ஆரியவர்த்தம் எனவும்—தட்சணப் பிரதேசம் என்ற தென்மாநிலங்களை மிலேட்ச, அடிப்படைச் சூத்திரர்கள் வாழும் கீழாதிக்கமாக வரம்பு கட்டி இருந்தனர். ஆனாலும் ஆரியமாயையில் திராவிடத் தமிழினத்தின் தனித்தன்மைகள் அறுத்துக்களையப்பட்டன. பஞ்சம் பிழைக்கவந்த ஆரியக் கூலிப் பட்டாளம்—சிறுகச் சிறுக பண்பாடு என்ற பெயரில் இந்து வெளி திராவிடரை அடிமைகொண்ட அனேக செய்திகள் ஆரிய ருக் வேதத்தில் மிகையாக அறியக் கிடைக்கின்றன.

மலைவாழ் மக்கள், பழங்குடியினர், மலை அருவிச் சாரல் வழியினர் என்று ஒதுக்கப்பட்ட திராவிட அடிமைகளை நசுக்கியே மேலாதிக்கம் செலுத்தியதுஆரியவர்த்த மானம். உண்மையான படை எடுப்புகள் என்று அறியப்படும்: கிரேக்க அலெக்சாண்டர், பாரசீகப்பட்டாணியர், கொள்ளைவழி மோகலாயர் வணிகவழி போர்ச்சு, டச்சு, பிரெஞ்சு, கும்பெனி ஆங்கிலேயர் அனைவருமே பலித்தவரை பயன் பெற்றனர். அவர்களுக்குப் பக்கத்துணை யாகப் பார்ப்பனர்கள் திராவிடச் சூத்திரர்களின் உழைப்பை ரத்தமாக உறுஞ்சிக் குடித்தனர். பிறருக்கும் கொடுத்தனர்.

வெளியார் ஆதிக்கம் ஒழித்தாலும் சுதந்திரம் பெற்ற நாடு, மக்களினம் தேசியம் என்று வாயளவில் பேசி, பார்ப்பனர் தங்களின் பரம்பரை வர்ண சாதிமதவாரிப் பாகுபாடுகளைச் சட்டமாகவே உறுதிப்படுத்தி அவர்களின் மேலாதிக்கத்தை அப்படியே தக்க வைத்துக் கொண்டனர்—பல நாடுகளில் ஏற்பட்டவாறு மக்கள் விடுதலை என்ற, ஏற்றதாழ்வில் போராட்டம் சமூகப் புரட்சி, என்றெல்லாம் ஏற்பட்டு விடாதபடி பார்ப்பனர்—மதவாத நூல்கள், கோயில் குளம், இராமாயணம், மகாபாரதம், போற்றப்பட வேண்டிய கலாச்சாரம் என அடிமை கொள்ளப்பட்ட மக்களை தரித்திர சமுதாயமாகவே தெய்வ பயம், பூச்சாண்டி காட்டி அடக்கியே வைத்திருந்தனர். அறிவுச் சுதந்திரம் பெறமுடியாத அனைத்திந்திய கண்ட நிலமக்கள் அனைவருமே பிராமணியத்தை வேதவாக்கென நம்பி மோசம் போனார்களேயொழிய மறுமலர்ச்சி என்றால் என்னவென்றே தெரியவிரும்பவில்லை. இந்தஅழிவுகளையும்,முரண்பாடுகளையும் வெளியுலகப் பயணிகள், இறக்குமதி ஆதிக்க நடுநிலையாளர்கள், பலர் பலகாலமாக விமர்சித்து வந்த ஒப்பீடு, வரலாறு,—பயனற்ற பழக்கவழக்கம், அறியாமை, இழப்பீடு—அனைத்தையும் எழுதி யும், பேசியும் வந்த சீர்திருத்த மறுமலர்ச்சியே அழுத்தப்பட்டி ருந்த பொதுமக்களைத் தூண்டியது. குறிப்பாக மதம், ஆன்மீகம் வேதம், என்பனவற்றை விமர்சித்த வெளியுலக அறிஞர்கள் எடுத்துக்காட்டுத் துணையுடன் அறிஞர் கோசம்பியின் கருத்து, இராகுல சாங்கிருத்தியாயரின் கண்டுபிடிப்பு--விவேகானந்தர் தத்துவம் ஆகியன தொடர்ந்து வடமாநில அம்பேத்காரும், தென் மாநிலத் தந்தை பெரியாரும் புரட்சிமலைகளாக அழுந்தப்பட்ட, முற்பட்ட திராவிட நாகரீகம்—அவை சிதைக்கப்பட்டு அடிமை கொள்ளப்பட்ட மதவாதம்—பௌத்தம், சமண விமர்சனம் ஆகிய தெளிவுகளை எடுத்தியம்பினர். ஆரம்ப காலத்தில் பழந் தமிழர்களிடையே சாதிப்பாகுபாடுகள் இல்லை. தொழில் வாரித் தலைப்புகளாகக் குறவன், ஆயன், உழவன், மீனவன்—

என்றே இருந்தனர். திராவிடர்களை அடிமைப்படுத்திக் கொண்டதைச் சொல்லும் ருக்வேதம்; பல திராவிட மாளிகை நில புலம், அடிமைகளைக் கொண்ட பெரிய தலைவர்கள் என மதிக்கப்பட்டவர்கள்—பின்னர் சத்திரியர்களாகவும், கொள்ளை யடித்த பொருள் குவிப்புத் தலைவர்கள்; வியாபார வைசியர் களாகவும், அடிமைப்பட்ட திராவிட மக்கள் சூத்திரர்களாகவும் —இம்மூவருக்கும் மூடிசூடாமன்னனாக புரோகிதப் பார்ப்பனர் என வகைப்படுத்தி வந்தமை கூறிய வகையிலேதான் அதைச் சட்டப்படுத்தியபோது சாதிவருணம் என்ற தலைப்புப் பெயர் பெற்றது.

> ''ஆரியம், தமிழ்நாட்டில் வேரூன்றிப் பார்ப்பனருக்கு தலைமை ஏற்பட்டபின் பல தமிழ் வகுப்பினர் தங்களுக்கு ஆரியத் தொடர்பு கூறுவதை உயர்வாகக் கருதினர் என்று தமது ஒப்பியன்மொழி என்ற நூலில் கூறும் பாவாணர்; சூத்திரர்களை ''தமிழ் நாட்டில் பூணூலணியும் தமிழர்களெல்லாம்ஏதேனும் ஒருவணிகத் தொழிலாளராவுகம் கம்மிய (கம்மா) தொழிலாளராக வும் இருப்பார்.'' எனவும்—அந்தக் கலப்படத்தால் ஏமாறக்கூடாது என்பதற்காக; ''கருத்தப்பார்ப்பானை யும் சிவத்த பறையனையும் நம்பக்கூடாது'' என்ற பழ மொழியைக் கூறினார்.

சங்கத்தமிழ் இலக்கியப் பாடல் வரிகளில் பார்ப்பனர்கள் தனித்தே—தனிப்பட்டு நின்றே தங்களை நடையுடை, உணவு, பழக்கவழக்கம்—அனைத்திலும் வேறு பட்டவர்களாகக் காட்டிக் கொள்வதிலும் கொடுப்பதிலும் கூட்டிக்கொள்வதிலும் பேசுவ திலும் மேலாதிக்க முன்னுரிமைகளில் கண்ணும் கருத்துமாகவே இருந்தனர் என்பதற்கு பல சான்றுகள் இருக்கின்றன.

குறிப்பாக;

| | |
|---|---|
| அய்ங்குறு நூறு: | 202, 384, 387, |
| குருந்தொகை; | 233 |
| பரிபாடல், திரட்டு; | 6,—2 |
| நற்றிணை | 321 |
| பதிற்றுப்பத்து | 63—24 |
| அகநாநூறு | 24, 391 |
| புறநானூறு | 125, 367, 9, 34, 15<br>122 |
| கலித்தொகை | 9, 69, 119,—130 |

குறிஞ்சிப்பாட்டு. முல்லைப் பாட்டு, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப் படை, பட்டினப்பாலை மதுரைக்காஞ்சி—ஆகியனவற்றால் அறியும் செய்தி கீழே கண்டவாறு தொகுத்துரைக்கப்பட்டிருக்கிறது.

முடிவளர்த்திருந்த தமிழர்களிடமிருந்து மாறுபட்டவர்களாக பார்ப்பனர்கள் தலையில் உச்சுக்குடுமி வைத்திருந்தனர். தமிழ் மக்கள் பார்ப்பனர்களைத் தொழுது அவர்களின் மதப் பொழிப்புரையைக் கேட்டனர்.

—ஐங்குறு நூறு: 202, 384, 387

மேலோர் என்பதன் பொருள் விளக்கமாக தேவர்களும், பார்ப்பனர்களும் ஒன்று என விளம்பரப் படுத்தப்பட்டன.

—குறுந்தொகை; 233

வையைப் புதுப்புனல் ஆண்டுவிழாவில் நீரில் கலந்த தமிழ் மக்களின் நறுமணப் பொருள்களாலும் கள்ளாலும் அந்தத் தீர்த்தம் களங்கமடைந்ததாக எண்ணி பார்ப்பனர்கள்—அந்த ஆற்று நீரில் வாயைக் கூடக் கொப்பளிக்கவில்லை.

வைதீகக் கடைப்பிடிப்புகளில் சிறப்பிடம் பெற்ற மதுரைத் தமிழ் மக்கள் ஆரியவேதம் ஓதுதலை நாட்டிற்கு நன்மை என்று நம்பினர்—வேதம் ஓதும் ஒலி கேட்டுத்தான் மக்கள் காலையில் கண் விழித்தனர் என்று கூறப்படுகிறது. யாகம் செய்யாத வேளாப் பார்ப்பானைவிட யாகம் செய்யும் வேதப்பார்ப்பானுக்கு சமூகத்தில் அந்தஸ்த்து, மரியாதை அதிகமாக இருந்தது. யாகம் செய்த பார்ப்பனர்கள் 'புரிநூல்' என்னும் பூணூல் அணிந்திருந்தனர்'

—பரிபாடல் 6. பாடல் திரட்டு, 2

''பார்ப்பனர்கள் மருதநிலங்களிலும், முல்லை நிலங்களிலும் தங்களுக்கென்று குடியேற்றி அக்ரகாரம் (சேரி) உண்டாக்கிக் கொண்டிருந்தனர்.

—நற்றிணை—321

மாற்றானுக்குத் தலைவணங்காத தமிழ் மன்னர்கள் பார்ப்பானுக்குத் தலைவணங்குவது ஆட்சியின் உயர்ந்த பண்பு என்று நினைக்கப்பட்டது. அறுவகைத் தொழில் புரியும் பார்ப்பானை வழிமொழிந்து நாடாண்டால் அந்த மன்னனை உலகமே போற்றும் என்று கூறப்பட்டது.

—பதிற்றுப்பத்து—24, 63

யாகம் செய்யும் வேதப்பார்ப்பானே அந்தப் பார்ப்பனரில் உயர்ந்த புரோகிதனாகப் போற்றப்பட்டான்.

வாடாத பூக்கள் அணிந்த வானத்துத் தேவர்கள் (காகிதப் பூ அணிந்திருந்தார்கள் போலும்) உண்பதற்காக யாககுண்ட நெருப்பில் ஆமையைத் தூக்கிப்போட்டு சுட்டு எரித்து வாடை பிடித்தார்கள்.

—அகநானூறு, 24, 391

ருக்வேத காலத்தில் மனிதனையும் விலங்குகளையும் வெட்டி பலியிட்டுச் சுட்டுத் தின்ற பார்ப்பனர்கள், அப்பழுக்கில்லாத உணர்வுள்ளவர்கள் என்ற பொய்யுரைக்கப்பட்டிருக்கிறது. இரு பிறப்பும், ஈரஉள்ளமும் கொண்டவர்கள் என உயர்த்திக் கூறப் பட்ட பார்ப்பனர்களின் வைதீக தர்மத்தில்புராணக் கடவுள்கள் குடி இருப்பதாகச் சொல்லப்பட்டது.

தொல்காப்பிய புறத்துறைப் போர்ச் செய்திகளில் திணித்து கூறியதுபோல பசுப்போல சாதுவானவர்கள் பார்ப்பனர்கள் என்று, போர் எச்சரிக்கைகளில் பசுக்கள், பெண்கள், முதியவர் குழந்தைகளை பாதுகாப்பான இடங்களுக்கு அழைத்துச் செல் வதில் பார்ப்பனர்களும் சேர்க்கப்பட்டனர். யாகப்புகையை தேவ ஆவுதி, அவிப்பலி என்றனர்.

•

நெம்மலி ஆவுதி என்றனர். கோயில்களிலுள்ள யாகப்பலியின் ஓமகுண்ட நினைவானதே யூபயாகஸ்தம்பம். இந்த வேதயாகப் பார்ப்பனர்களுக்கே, மன்னன் ஆளும் நாடே, உரிமையுடைய தெனத் தமிழ்ப் புலவர்கள் மிகைப்படுத்திப் பாடினர்.

—புறநானூறு 125, 367, 9, 34, 15, 122

காவி நிறக்கற்களை உடைத்துப் பொடி செய்து நீரிலிட்டு அதில் உடைகளை நனைத்துச் சாயம் ஏற்றிப் பார்ப்பனர் காவி யுடையணிந்திருந்தனர். ஓலைக்குடையை கையில் பிடித்து தோள்ப்பிடரியில் உறிச்சட்டியும், கரகமும் முக்கோலும் அசைந்தாடப் பார்ப்பனர் ஊர் ஊராக நடைபயணம் செய்தனர்

பார்ப்பனர்கள் மாலை நேரங்களில் யாகத் தீ மூட்டினர். வேதம் ஓதியபடியே யாககுண்டத்தைச் சுற்றிச் சுற்றி வந்தனர்.

—கலித்தொகை 9, 69, 119, 130

இவைகளன்றி கழனி வளமிக்க மருதநிலங்களில் வருவாய் மிகக் கருதி பார்ப்பனர் தங்கள் குடியிருப்புத் தனிச்சேரிகளுக்கு

ஆமூர் என்ற பெயர் வைத்துக்கொண்டனர். இவர்களுடைய வீட்டினை குறிஞ்சிப் பாட்டில் ஒரு புலவர் 'வளமனை' என்று குறிப்பிடுகிறார். பார்ப்பனர் சேரி என்றால், கன்று, பசுவுள்ள தொழுவும், சாணத்தால் மெழுகிய தரையும், சுவறுமாக உள்ள வீடுமாக இருந்தன. இங்கே சூத்திர மக்களுக்குரிய நாய்களும், கோழிகளுமில்லை.பிராமணர் வளர்த்தகிளிகளும் வேதம் பாடின என்றார் நமது புலவர்.

> "நான்மறை முதல்வர்" "அறிவுடை அந்தணர்"
> "மறை காப்பாளர்" "கேள்வி அந்தணர்" "ஆன்ற
> கேள்வி அடங்கிய கொள்கையர்," "பலவேள்வித் துறை
> போகிய தொல்லாணை நல்லாசிரியர்"

என்றெல்லாம் இந்தப் புரோகிதப் பார்ப்பனர்களை தமிழ்ப் புலவர்கள் புகழ்ந்து பாடிய தலைப்பு வரிகள் பட்டினப் பாலை, மதுரைக்காஞ்சி, என்பனவற்றில் அறியக் கிடைக்கின்றன.

இலங்கோவடிகள் கூறும் அவிர்சடை முனிவர் என்ற பெயருடைய பார்ப்பனர்கள், மறு உலகை அடையத் தகுதி பெற்ற இறு பிறப்பாளர் என்று பெரும்பாணாற்றுப் படையிலும், மதுரைக் காஞ்சியிலும் புகழ்ந்து போற்றப்படுகின்றனர். இவர்கள் காஞ்சி புகார், மதுரை"ஆகிய பெரும் நகர யாக சாலைப் புரோகிதர்கள் என்பதை சங்கப் புலவர்கள் பாடி இருக்கின்றனர். இவற்றை ஆரியம் கலவாத முழு சங்கத்தமிழ் இலக்கியங்கள் எனக்கொள்ள முடியவில்லையே?

தென்மா நிலத் தமிழகத்தில் சங்காலத்தில் வருணபேதம் வேரூன்றி மக்களை அடிமைப்படுத்திக் கொண்டிருந்த செய்திகளை மேலே சொல்லப்பட்ட இலக்கியங்களே எடுத்துக்காட்டுகின்றன. பல்லவர் காலம்—இடைப்பட்ட காலம் ஆங்கிலேயர் காலம்—ஏன் இன்றுவரை வேதகால அடிச்சுவட்டினை—மநு தர்மம் என்ற பெயரில் அந்தப் பாரப்பனத் தற்காப்பு, புனிதம் என்ற பெயரில்அமல் நடத்தி வருகிறது,

"நமது நாட்டிற்கு கி. மு. 2000—ஆண்டு காலத்தில் திராவிடம் என்ற பெயர் இருந்தது"—என்று கூறும் தந்தை பெரியார் அவர்கள்:

"சேர, சோழ பாண்டிய சாதியரான அரசர்கள் யோக்கியதையும் அவர்கள் மக்களுக்குச் செய்த நன்மையையும் சரித்திர ஆதாரப்படி—கவிராயர்களின் கவிப்படி பார்ப்போமானால் நம்

தமிழர்கள் யோக்கியதை எல்லாம்; பெருங்கோயில் கட்டி, சோம்பேறிகளும் அறிவற்ற நபர்களும் மக்களை வஞ்சித்து இங்கு மடையர்களாக்கி வாழ்ந்து வந்தார்கள் என்பதைத்தான் சரித்தி மூலமாகவும் பிரத்தியட்ச அனுபவ மூலமாகவும் காண்கிறோம்!'' —என்று ஆய்வு செய்த உண்மைகளைக் கூறுகிறார்.

சேரமன்னர்கள் வரிசை கூறும் பதிற்றுப்பத்தோ பார்ப்பனர்களுக்குக் கட்டுப்பட்டு தானதர்மம் செய்தவை கூறுகிறது. சேரன் பெருஞ்சேரல் இரும்பொறை தனக்குப் பிள்ளை இல்லை என்பதற்காக [புத்திரகா மேஷ்ட்டி யாகம் செய்தான் என்று (74) கூறுகிறது.

> சோழமன்னர்களைப் பற்றிக் கூறுமிடத்து; புறநானூறோ; யாகத்தூண் எழுப்பிய கரிகாலனையும் 'இராச சூயம், நடத்திய பெருநற் கிள்ளியையும் (43) பாராட்டுகிறது.

பாண்டிய மன்னர்களைப் பற்றிக் கூறுமிடத்து; பலயாகங்கள் செய்த; நிலம் தரு திருவிற் நெடியோன் என்ற பெயருடையவனையும், முதுகுடுமிப் பெருவழுதியையும், பூதப் பாண்டியன் என்ற மன்னன் இறந்த போது அவன் மனைவியை உடன்கட்டை ஏற வைத்துப் பொருள் பறித்த பார்ப்பனர் சூட்சிகளையும் அதே புறநானூறு புகழ்கின்றது,

ஏன்?

தனது ஆட்சிக்கு உள்பட்ட பகுதியில்: 64 கோபுரங்களைக் கட்டவும், தனது நாட்டு வருமானத்தில் 1000 பொன்கள் கோயில் வழிபாட்டுக்கும், 40, 000—பொன்கள் கோயில் விழாக்களுக்கும் என கசானாவை காலி செய்த மதுரைத் திருமலை நாயக்கரை உயிரோ சமாதி செய்த அந்தப் புரோகித வேதப் பார்ப்பனர்கள்; விசயநகர கிருஷ்ணதேவராயரைசும்மா விட்டார்களா? என்ன செய்தார்கள்? இராயர்வாசம் என்ற நூல் கூறும் விளக்கத்தில் 1000—பார்ப்பனக் குடும்பத்திற்கு குடியிருப்பு வீடுகள், அவர்களுக்கு பல லட்சக்கணக்கான பசுக்கள், 16 வகைத் தர்மங்களையும் செய்து 30,000...பொற்காசுகள் என கனகாபிசேகதானம், தனது எடைக்கு மூன்று மடங்கு தங்கம் கொடுத்த துலாபாரக்கொடை என அள்ளி வழங்கிய விஜயநகர கிருஷ்ண தேவராயரின் ஒரே செல்வமகனை அவனது 6—வயதில் கி. பி. 1524—இல் அதே ராயர் அமைச்சரவையில் முதல் அமைச்சராக இருந்த சாளுவப் பார்ப்பான் திம்மப்பன் மகன் தண்— நாயக்கன்

என்பவன் விசம் கொடுத்துக் கொன்றான்!—என்ன கொடுமை? சிந்தித்துப்பாருங்கள்'

இந்தப் பார்ப்பன வேதாகமம்—சாதிவருணப் பொருள் பறிப்பு சடங்கு சம்பிரதாயங்களை—அவற்றின் வாயிலாக மக்கள் படும் துயர்தீர்க்கவே தென்மாநில; ஆந்திரர், கன்னடர், கேரளர்கள் குறித்து தந்தை பெரியாரும் ''அவர்களுக்கு இனப்பற்றோ இன சுயமரியாதையோ பகுத்தறிவு உணர்ச்சியோ இல்லை; அவர்களுக்கு வருணாசிரம வெறுப்பு கிடையாது. சூத்திரன் என்பது பற்றி இழிவோ வெட்கமோ பெரும்பாலருக்குக் கிடையாது, மதமூட நம்பிக்கையில் ஊறிவிட்டவர்கள்''—என்றார்.

தமிழகம் பற்றிய பகுத்தறிவு விடுதலையைக் கூறுமிடத்து தந்தை பெரியார்; ''நம்நாட்டுக்கு, சமுதாயத்திற்கு, இனத்திற்கு 'திராவிடம்'என்று இருந்த பெயர் அது தமிழல்ல என்பதனாலும் நமக்கு அது ஒரு பொதுக் குறிப்புச் சொல்லும் ஆரிய எதிர்ப்பு உணர்ச்சிச் சொல்லுமாக இருக்கிறதே என்று வலியுறுத்தி வந்தேன். அதை ஆந்திர கன்னட கேரள நாட்டு மக்கள் அல்லாமல் தமிழ் மக்களில் சிலரும் எதிர்த்தார்கள், அவர்கள் மூவரும் (தனி மாநிலங்களாக ஆந்திரா, கன்னடம், கேரளம் என்று போன பிறகு) ஒழிந்த பிறகு அவர்களையும் சேர்த்துக் குறிப்பிடத் தக்க சொல் நமக்குத் தேவையில்லை என்றாலும் திராவிடன் (மூன்று மாநில மக்கள் கலந்த இனம்) என்ற சொல்லை விட்டுவிட்டு தமிழன் என்று சொல்லியாவது தமிழ் இனத்தைப் பிரிக்கலாம் என்றால் பார்ப்பான் (ஆரியன்) வந்து நானும் தமிழன்தான் என்று கூறிக் கொண்டு உள்ளே புகுந்து விடுகிறான்!''

என்ற நீண்ட பெருமூச்சு. விட்டவராக, தந்தை பெரியார் தொல்காப்பியம், சிலப்பதிகாரம் பற்றியும் தேறிய தெளிவினைக் கூறுகிறார்.

''நமக்கு இலக்கியமே இல்லை; மொழிப் பற்றுக் காரணமாகத் தொல்காப்பியம் என்று சொல்வார்கள். ஆரியத்திலிருந்து விலகி ஆரிய வர்ணாசிரமக் கருத்துக்களை எதிர்த்துச் சொன்னார்கள் என்ற முலறயில் அதில் ஒன்றுமே இல்லை!'' என்றார்.

''சிலப்பதிகாரத்தைக் கூடப் புகழுவார்கள். சுப்பிரமணிய பாரதியார் என்ற பார்ப்பனர்கூட ''சிலப்பதிகார மணி ஆரம் படைத்த தமிழ்நாடு'' எனப் புகழ்ந்துள்ளார்,, அதில் அறிவுக் கருத்துக்கள் என என்ன இருக்கின்றன? அதில் மூட நம்பிக்கை,

வேதப் பார்ப்பானுக்கு வேண்டியது எல்லாம் அதில் இருக்கிறது அதனால்தான் ஆரியப் பாரதி அதை 'மணியாரம்' என்று சொன்னார்'' (1958) என்று தொடர்ந்தார்.

மனிதப்பிறவியைச் சிறப்பித்துக்கூறிய தமிழ்ப் புலவர்;

''அரிது! அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது!
அதினும் கூன், குருடு, செவிடு, பேடு
நீக்கிப் பிறத்தல் அரிது! அதிலும்
மானமும், கல்வியும்
அமைதல் அரிது!''

என்றார்

அதிலும் தானமும் தவமும் வேண்டுமென்ற முடக்கு வாதத்தில் வந்தவர்களே மனிதனை உலக அடிப்படையில் ஏழ்மைப்படுத்தி இகழ்ச்சிக்குட்படுத்தி விட்டனர். யார் எப்படியானாலும் ஆகட்டும் பணத்தை அள்ளி வீசுவோம்! இரவு பகலாக நாடு நகரம், பட்டி தொட்டிகளில் மத விளம்பரம், ஆள் சேர்ப்பு— உணவு, உடை, படிப்பு என திருச் சபைத் தொண்டர்கள்— கிறுத்தவர்கள், பெருமைக்குரிய மனிதனை ''ஏ பாவிகளே! பாவ மன்னிப்புப் பெற்றுக் கொள்ளவாருங்கள்!'' •என்று அழைக்கின்றனர்.

இந்துமதம் என்ற பெயரில் அன்றைய சிவனிய நாயன்மார்களும், ஆழ்வார்களும்—பிள்ளைக் கறி சமைத்தும். துளசித் தண்ணீர் தெளித்தும்;

''நீங்கள் முற்பிறவியில் பாவம் செய்தவர்கள்! ஆகவே சூத்திர பஞ்சம சாதியில் பிறந்து தண்டனை அனுபவிக்கின்றீர்கள்! வைகுந்த பதவியடைய நாராயணனை வழிபடுங்கள்!''—என்று குரல் கொடுத்து மணியடித்து பசனை பண்ணுகின்றார்கள்.

மதவாதிகள் சொல்லும் பிறவிப் பாவத்தை எப்படிக் கழுவுவது? பிறவிப் பயனை— எந்தமதவாதி சொல்வதை நம்பி யாரிடம் கேட்டு அடைவது?

காந்தியார் சொன்னபடி இங்கு கண்களைமூடிக் கொள்வதா? காதுகளை அடைத்துக் கொள்வதா? வாயைப் பொத்திக் கொள்வதா? ஒடுக்கப்பட்டவர்களும் அடக்கப்பட்டு அழுத்தப் பட்டவர்களும் எப்படி? எவ்வாறு மூச்சுவிட்டு விடுதலை பெற முடியும்?

அடைக்கல வாதிகளான கிறுத்துவர்களுக்கு முன்னரே ''மதவாதிகளை நம்பாதீர்கள்! நான் சொல்வதையும் நம்ப வேண்டாம்! சிந்தித்து ஒரு முடிவுக்கு வாருங்கள்!'' என்றாரே அந்த புத்தர்! ஒரு வழியும் அறியாத அச்சுறுத்தப்பட்ட பொது மக்களைப் பாவ புண்ணியத்திற்கு அடிமைப் படுத்துகிறார்களே—அவரவர் மதக்கதைகளையே சொல்லி அதற்கு நியாய இலக்கணமும் இசையும், பாடலும், ஆடலும், பேச்சும், கூட்டமும் நடத்திக் குழப்புகின்றரே! இதற்கு விடிவே இல்லையா?

''இருக்கிறது?''

''என்ன?''

''பகுத்தறிவு!—ஆராய்ச்சி.

''புராணத்தை—மத விளக்கத்தை ஆய்ந்தவர்கள்—அது தான் பகுத்தறிவு என்று சூழலுக்கொப்ப அதைப் பொருள் படுத்திப் பிரித்துச் சொல்கிறார்களே? எதை ஆராய்ச்சி எனக் கொள்வது?''

''மதக் கருத்துக்களல்லாத சிந்தனையே மனிதனை—இனம், மொழி, நாகரிகம் என்ற பாகுபாட்டையும் கடந்து உலகலாவிய பகுத்தறிவின் பயனைத் தரத்தக்கதாகும்.''

சென்னை—17

—புரட்சிதாசன்.

# மேற்கோள் நூல்களும் தாக்கோல் ஆசிரியர்களும்

திருமூலர் திருமந்திரம், டார்வின், வாதாயணர், வேதாந்த சூத்திரம், பிளேட்டோ, —சங்கரரின் பிரம்ம சூத்திரம், (சங்கர பாடியம்) நம்மாழ்வார் திருவாய்மொழி, தந்தை பெரியார், கோபிச் செட்டிப்பாளையம், வழக்குரைஞர் கு. ச ஆனந்தன். திரு வி.க. (மாயூரம் சமரச சன்மார்க்க மாநாட்டுரை (7-5-1927) பேரறிஞர் அண்ணா. புத்தரின் அனாத்மவாதம். சிவஞான போதம். திரு.வி க. ஆரணி (3-6-36 விழாச் சொற்பொழிவு) சுவாமி விவேகாநந்தர்.

உபநிடதம், சாருவாக்க லோகாயதம், கபில சாங்கியம், கி.பி. 175. தெலுங்கு மகாயண நாகார்சுன சூன்யவாதம், பதஞ்சலியோகம், திருவாசகம், செர்மானிய மாக்ஸ்வேபர் எழுதிய ''இந்துமதம்'', டி. டி. கோசாம்பி, கோல்வால்கரின்— ''சிந்தனைக் கொத்து'', வி. டி. ராசசேகரின். ''இந்துமதம்'' கேரளப் பெரியார் நாராயண குரு, பரிமேல் அழகர், பெருந் தேவனார்—''பாரதம்'', குறுந்தொகை, திருக்குறள்.

அயர்லாந்து அறிஞர் கார்டுவெல் பாதிரியார், நாலாயிரத் திவ்யப் பிரபந்தம், திருமங்கை ஆழ்வாரின் ''ஆண்டாள் திருப்பாவை, தேசியப் பிரபந்தம், மதுர கவி பாழ்வார் அரிதாசர், கிருபானந்த வாரியார். மு. இராகவஐயங்கார். தமிழ் நாடு அரசுப் பதிவேடு 1971, டாக்டர் மு. வரதராசனார். டாக்டர் த. கோவேந்தன், தேவநேயப் பாவாணர், டாக்டர் கிரியர்சன், சர்ஜான்ஜோன்சு, டாக்டர் பர்குசன், யூ. ஆர். இராமச்சந்திர தீட்சிதர், டி ஆர்.சேஷகிரி சாஸ்திரி, கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி. எஸ். வையாபுரிப்பிள்ளை. கே எம்.சிவராச பிள்ளை, பேரறிஞர் ஹெச்.ஜி வெல்சு. அரிபிரசாத் சாஸ்திரி, சி. ஆர். சீனிவாச ஐயங்கார், ராய்ச் சௌத்ரி, சல்மான் ருஷ்டி

"ஆரிய திராவிடப் பண்பாட்டுத் தொடர்"—K.A.நீலகண்டர், பெசுகி, முசுறி நீலகண்டரின் இறையனார் அகப் பொருள் உரை, அடியார்க்கு நல்லார், வால்மீகி, சாணக்கியர், ஆய்வாளர் ஹெக்சல், சித்தலைச் சாத்தனார், இளம் போதியர், சீன யாத்திரிகரான பாகியான் எழுதிய பயண நூல் குறிப்பு, "இலங்கை மகாவம்ச" நூல், பங்களாதேஷ் தஸ்லிமா, லெனின் கார்ல்மார்க்ஸ், பெட்ரண்ட் ரக்சல், பெர்னாட்சா, நேரு, அல்பருணி—-இப்னுபதூதா பயண நூல்கள் (கி.பி. 1342-47)—கஜினியின் "தாரிக்—இ—யாமினி என்ற நூல், கே.எம்.பணிக்கர் இராங்கி, கார்வே—எழுதிய "கண்ணன் கற்பனைக் கடவுள்" என்ற நூல், வெபர், தத்தா என்ற இந்திய விஞ்ஞானிகளின் குறிப்பு, மகாத்மா காந்தி, சர்வப்பள்ளி இராதா கிருஷ்ணன், சமணமத நூல் "விவித தீர்த்த கல்பம்", வங்காள சைதன்ய கோசுவாமியின் "பசகோவிந்தம்" நூல், மெல்வில்லா டி-கென்னடியின் குறிப்பு, வில்லிபுத்தூரார் பாரதம், இத்தாலிய இராபர்ட் நொய்லியின் நூல்கள், சீகன் பால்கு (லத்தீன்-தமிழ் ஒப்பிலக்கணம், ரேனியஸ் (இலக்கண நூல்) எல்லிசரின் திருக்குறள் (ஆய்வு உரை) கிராலின் (குறள் செர்மன் மொழி) ஏரியல், லெமிலேசர் ஆகியோரின் மொழி பெயர்ப்பு, பாபரீசியர், (1779) தமிழ் அகராதி .லாசரசின் "பழமொழி (2000) திரட்டு", வீரமா முனிவர், வின்கிலோ, சாந்தலர், இராட்லர், இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம், பரதரின் நாட்டிய நூல், உ. வெ. சாமிநாத ஐயர், வங்காளி சுனித்குமார் சட்டர்ஜி கலைஞர், கி. வீரமணி, புரட்சிக் கவிஞர் பாவேந்தர், பேராசிரியர் அறிவரசு, இரா.க. சண்முகம் செட்டியார். கீழாத்தூர் சீனிவாசாச் சாரியார் எழுதிய "விவாக மந்திரார்த்த போதினி" என்று நூல், இராசாசி, நச்சினார்க்கினியர், பூர்வமீமாஞ்சை, உத்ரமீமாஞ்சை பவத்கீதை, மநுதர்மம் (நீதி) இராமாயணம், மகாபாரதம், அறிஞர் கே.எஸ்.பாண்டியன் எழுதிய "மறைக்கப் பட்ட மரபுச் செல்வங்கள்," ஆதிசங்கராச்சாரியார். சுவாமி சின்மயாநந்தா, ருக் வேதம், சாம வேதம், யசூர் வேதம், அதர்வண வேதம். அமெரிக்கப் பேராசிரியர். இராபர் எரின் பிரைகென்பர்க் குறிப்பு, "விவேகானந்த விசயம்" என்ற நூல்.

ந. சி. கந்தையா எழுதிய "திராவிட இந்தியா" வில்லியம் சோன்சு, பகீரதராமலிங்கர் தொல்காப்பியம், அறவாணரின் தொல்காப்பியக் காஞ்சியம், பேராசிரியர். காளிமுத்து எம்.ஏ, பேராசிரியர் ராஜ்கௌதன் திரு. க. ராசேந்திரன் திரு. நாராயணசாமி, சோசப் இடமருகு, சானல் இடமருகு ஆகியோர் கருத்துரைகள்,

—புரட்சிதாசன்

# சமயமும் சங்கத்தமிழும்

# 1

# அத்வைதம் என்ற பெயரில் ஆதிசங்கர மதவாதிகள்

ஒருமைப்பாடு என்பதே தேசியம் ஆகும். அவை மனித இனம் அல்லாத; ஊர்வன, பறப்பன, நடப்பன என்பவற்றில் அதனதற்குரிய உருவ மாற்றம்; சிறிது, பெரிது எனவாகநிறவேறு பாடும், வாழும் பகுதி இவை பொருத்து உறவும், பகையுமிருக் கின்றன. இனவாரிப் படைப்புகளுக்கு அடிப்படையான பஞ்ச பூதமாக: நிலம், நீர், நெருப்பு, காற்று, அண்டம் என்பனவற்றில், அடிப்படையான பூமியில் மேடு, பள்ளம், தாதுவளம், வறட்சி, கல், மண் என்ற வகைகள் இருந்தாலும்; அவை அனைத்தும் நில மென்ற பெயரில்த்தான் சொல்லப்படுகிறது.

**நீர் :** என்பதை எடுத்துக்கொண்டால் பெரிய உருவங் களாகக் கடல்; அவற்றில், கருங்கடல், செங்கடல், நீலக்கடல் எனப் பருவகாலத் தட்ப வெட்பத்தின் மாறுபாட்டில் பல நிறங் கொண்டாலும், மேகம் உதிர்த்த வெள்ளி நீர், மண்ணில் விழுந்து —கலவை நிறம் பெறுகிறது. ஆனாலும் அதன் பொதுப் பெயர் நீர் என்றே குறிப்பிடப்படுகிறது.

**நெருப்பு :** மஞ்சள், சிவப்பு, நீலம் ஆகியவை நெருப்பின் அடிப்படையான வண்ணங்களென அதன் தன்மை பல மாறுத லான இயக்குவித்தலில் காட்டப்பட்டாலும் மஞ்சள் நிறக் கலவையே நெருப்பாகும்.

**காற்று :** அழுத்தந்தால் புயலாகிறது! அதன் மென்மைத் தழுவலால்—தாலாட்டுதலால்—தென்றல் எனப்படுகிறது! பஞ்ச பூதப் பிண்டம்—படைப்பு—உயிர் பெற்றால் அந்தக் காற்று, மூச்சு, உயிர், ஆன்மா எனவாகின்றது. ஆனாலும் அது காற்று என்ற பெயரிலே தான் கூறப்படுகிறது.

அண்டம் : திறந்த வெளியோடு வானம், அதில் பல வண்ண மேகங்களின் நெடும் பயணம் நிகழ்கின்றன. கடலுக்கும், விண் வெளி அண்டத்திற்கும் நமது காட்சிக் கெளிதாகத் தெரிவது நீல வானமேயாகும்.

இத்தனையும் அடங்கிய — நாம் வாழுகின்ற இந்த வையகத்தில், முரண்பாடாகச் சிந்திக்கத் தொடங்கியபோது, மனித இனத்தில் ஒற்றுமையின்மை, ஏற்றத் தாழ்வு, இனவெறி, நிறவெறி, மொழி வெறி என்ற முனைப்புகளால், பல்லாயிரம் ஆண்டுகளாகப் பல கொள்கைகளில் நம்மை நாமே அழித்துக் கொண்டிருக்கிறோம் என்பது புலனாகிறது. சிறப்படைய வேண்டிய முன்னேற்றங்கள் யாவும் தடைப்பட்டு, பேச்சள விலேயே ஒற்றுமைக் கீதம் பாடி, நடைமுறையில் பிளவுபட்டு மனப்பக்குவம் பெற முடியாமல் அச்சுறுத்தப் படுகிறோம்.

இதற்குரிய அடிப்படைக் காரணம் என்ன? இதற்கு மத வாரிக் கொள்கைகளே யாகும். ஒருவரை யொருவர் அடக்கி, ஒடுக்கி, அதுவும்—அது பிறப்பிலேயே வந்தவை என்று பிதற்றிக் கடைப் பிடிக்கப்பட்ட—வேண்டாத படிப்பினையாகும்.

பஞ்ச பூதக் கூட்டணிப் படைப்புத்தான் மனிதப் படைப்பு. தனிப்பட்ட ஒரு சக்தி என்று எதுவும் இயங்கவே முடியாது. மனித சிந்தனை முதலில் தன்னைத் தானே அறிந்து கொள்ள முயன்றது. அவற்றோடு, கண்முன் காட்சியளிப்பவைகளைக் கொண்டும் நிர்மாணம் அறியப்பட்டது. அவரவர் எடுத்தாண்ட கால வளர்ச்சியில் வெற்றியும் வீழ்ச்சியும் என ஒருமித்தே நிகழ்ந் திருக்கின்றன. இருக்கும் வரையில் மனித ஒற்றுமை, வளர்ச்சி, உறவுகளில் பரிமாற்றம் என இதுவே தேசிய நேயம்.

ஒழுங்கான வாழ்வியல் திரித்துக் கூறப்பட்டதை ஆழ்ந்து அறிந்தால் நமது ஏழைமை ஒழிந்து ஒருமித்து வெற்றியைப் பெற முடியும்—பெறலாம்.

உயிர், ஆத்மா, ஆண்மை—என இவற்றிற்காக இதைத் தலைப்பிட்டு, சர்ச்சைக்குரியதாக்கி—ஆய்வில் ஆத்ம வாதம், ஆன்மீக வாதம் என இவற்றிற்கு எதிரிடையாகக் கொள்ளப் படுவது அனாத்ம வாதமாகும்.

அதாவது—இயற்கைத்தத்துவமாகும். இந்த அனாத்ம வாதம் என்ற புத்தரின் இயற்கைதத்துவமே தேசியம் என்ற ஒருமைப்பாடு. புத்தரின் வழி பற்றிய அசோகச் சக்கரமே

இன்றைய இந்திய அரசின் ஒருமைப்பாட்டுச் சின்னமாக விளங்கு கிறது என்பதைத்தெளிவு படுத்திக் கொள்ளவும்.

புத்தரின் காலத்திற்கு முன்னர் (அப்போது அந்தப் பெயரில்லை) அந்த அத்வைத தேசியம் முறியடிக்கப்பட்டு—ஐக்கிய தேசியம் என்ற பெயரில் நிறவேற்றுமைக் கொள்கை, இன வேற்றுமைத் திணிப்பு அதற்கு குரு மாணவப் படிப்பினை கள், ஒரு சார்பு நியாயங்கள்—தர்மங்கள் எனத் தழுவ வலியுறுத்தப்பட்டன. அதனால் எதிர்ப்புகளும், படை எடுப்பு களும் இந்திய மண்ணைச் செம்மையாக்கின. அச்சுறுத்தும் சாதி வர்ணத் திணிப்பில் நியாயப்படுத்தப்பட்ட ஒரு தலைப்பட்ட தர்மங்கள் தேசிய ஒருமைப்பாடு என்ற பெயரில் முரணாகக் கொள்ளப்பட்டன

இயற்கையின் பரிணாமம் கண்ட விஞ்ஞானி டார்வினுக்கும் முன்னர்—விளங்கிய—இருந்த ஒருயிர் அத்வைதம் தேசிய ஒருமைப்பாடு கொண்டதாகும். அவ்வழி மேற்கோள் நூலாக அறியப்பட்ட, பரிணாமமே; தோற்றம். இங்கு இறைமை இல்லை என்று கூறிய கபில சாங்கியம், பூர்வமீ மாஞ்சை, வைசேடிகம், லோகாயதம்—பிறகு பதஞ்சலியோகம் எனப் பலத் தத்துவக் கிளைகள் கூறப்பட்டன.

ஒருயிர்க் கொள்கையான அத்வைதமாக இருந்து, பின்னர் ஈருயிர்த் துவைதமாகத் திருத்தப்பட்ட, ஒரு சார்பு நியாயங் களுக்குத் துணை நிற்கும் நூல்களாக அறியப்படுவதோ; ஐதிக யோகம், வேதாந்தம். வேதத்தை வரையறுத்ததாக வியாசர் சொல்லும் கர்மகாண்டம், பூர்வமீ மாஞ்சை, பிரம்ம ஞான காண்டம், உத்திர மீமாஞ்சை, வேத கர்மம், சைதன்யம், ஏன் சிவனிய சாக்தம், காணபத்தியம், கௌமாரம், சௌரம், பைரவம், காளாமுகம் அத்வைத ஆதிசங்கரத் துவைத் மாகாத் மியம். பின்னர் வசிஷ்டாத்வைதம். "வேதாந்த சித்தாந்த மெய்யொன்றாக முடிந்த அருஞ் சுத்த் சைவமே" என ஏழாவது ஆகமம் கூறும் திருமூலரின் திருமந்திரம் ஆகிய அனைத்துமே ஈருயிர்த்துவைதம் கூறுபவைகளேயாகும்.

பாடியமை எல்லாம் பரம்பொருள் என்பதை சங்கர அத்வைதம், மத்துவதுவைதம், ராமானுச வசிஷ்டாத்வைதம் என மூன்று வகை பிரித்து, பிளவு படுத்தும் நிற வெறியில் அவர்கள் அதற்கு தேசிய ஒற்றுமையைச் சொன்னார்கள்.

அத்வைதம் என்ற பெயரில் உள்ள ஆதி சங்கரரின் பிரம்ம சூத்திர மகாத்மியம் என்ற அடிப்படைக் கோட்பாடுகளை அறிந்தாலே அவருக்குப் பிற்பட்ட, முற்பட்ட, நிறவெறி.

இனவெறி மிக்க துவைத மத்வாச்சாரியின் கோட்பாடு; வசிஸ்டாத்வைதம் (விசிஸ்டாத் வைதம்—வரிஸ்டாத் வைதம்) எனச் சொல்லிக் கொண்டு, சாதிவர்ணத்திற்குத் துணை நின்ற பலரில் ராமானுஜர் ஆகியோரின் நிறங்கள் ஆகியவற்றை— அவர்கள் கருத்துக்களைக் கொண்டே நாம் படிக்காமல் லகித்துக் கொள்ளலாம்.

வேதச் சுருக்கமான உபநிடதங்கள், தெளிவில்லாமலும், முரண்பாடு கொண்டதாகவும், இருந்ததாக "வேதாந்த சூத்திரம்" என அவர் வாழ்ந்த காலத்தில் (வாதாயணர்) பாத ராயணர் என்பவர் தொகுத்தார். அவருக்குப் பின் வந்த பலரும் பிழைபட்ட அவரவர் கருத்துக்களை அவற்றில் திணித்து, முடிவில் அது சங்கர பாடியமாக, முழு நிற வெறி சொல்வதாகச் சிறப்பிக்கப்பட்டது.

ஆனால், சங்கரரின் அந்த நூல் வேதாந்தமென்ற பெயரில் பார்ப்பன தர்மங் கூறும் ஒரு சார்புக் கருத்துடையவையாக மாறின. பிரம்ம காண்டத்தைப் பற்றிச் சொல்லும் பிராமண வேதாந்தத்தை—லோகாயத சித்தாந்தம் ஏற்கவில்லை.

மனித நேயம்—ஒருமைப் பாடுகளை விரும்பாத சாதி வருண சங்கராச்சாரியின் பிரம்ம சூத்திரத்தைப் பெரிதும் பாராட்டிய இந்திய சனாதிபதி என்ற பெயரில் இருந்த சர்வ பள்ளி இராதா கிருஷ்ணனை தத்துவ ஞானி என்று புகழ்ந்தவர்கள் பார்ப்பன அடி வருடிகளே ஆவர்.

கிரேக்க நாட்டில் அடிமைத்தனத்தை உறுதிப்படுத்திட முனைந்த பிளேட்டோவைப் போல—மனித சமுதாய முறை மையை தர்ம சாத்திரமென்ற பெயரிலுள்ள ஆரிய வருண தர்மத் தையே தீண்டாமை என்ற பாகுபாட்டிற்கே வழி சொல்லிக் கடைப் பிடித்தவர் சங்கரர். சூத்திரர்களை அடிமைகளாக நடத்த வேண்டுமென்பதில் மனுநீதியை வெகுவாக வலியுறுத்தி யவர் சங்கரர்.

இதோ! பிரம்ம சூத்திரமான சங்கர பாடியம் கூறுவதை அறிவோம்.

"சூத்திரன் தத்துவஞானம் பெற உரியவன் அல்ல. அவனுக்கு விடுதலையற்ற நிரந்தர அடிமை நிலையே. பிராமணர்களுக்குத் தொண்டு செய்யவே பிரம்மாவால் அவன் படைக்கப்பட்டதாக மனுவே சொல்லி விட்டார். சூத்திரனுக்கு எந்தச் சடங்கும் கிடையாது. அவன் சுடுகாடு. படிப்பதே பாவம். அதற்கும் தண்டனையுண்டு" என்றார்.

அத்வைதம் (ஒருயிர்க் கொள்கை) என்ற பெயரில் ஆதி சங்கரரின் கருத்துக்களை—இந்து தத்துவமென்ற பெயரில் சூடு, சொரணை, மானம், வெட்கம் இல்லாமல் வழி மொழிந்த மத வாதிகள்—உழைக்கும் மக்களை—ஆரியப் பிராமரல்லாதவரை ஏமாற்றினார்கள்.

சூத்திரனைச் சுடுகாடு என்ற சங்கரர்—அவன் உழைப்பினை மேல் குலமான பிராமண, சத்திரிய, வைசியரைப் பிடுங்கிக் கொள்ளச் சொல்கிறார். இவருக்கு என்ன நெஞ்சழுத்தமென்று சிந்தித்துப் பாருங்கள்!

ருக் வேதத்தைக் காலங் காலமாக திருத்தித் திருத்தி, சுருக்கியும், விரித்தும், எழுதிய பல நொண்டிகள், சாதி வருணம் என்ற அடிமைத் தனத்தையே வலியுறுத்தினார்கள். அந்த மதவாதிகளின் தீர்த்தம் குடித்தவர்களாக அத்வைத சங்கரமென்ற பெயர்ப் பலகையைக் கழுத்தில் மாட்டிக் கொண்டு கத்தித் திரிந்தவர்களில்—தமிழகத்தில் வைணவ நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் என்ற நம்மாழ்வாரின் திருவாய் மொழியைக் கூட அது 'வேதம்' என்றும், அதன் ஆயிரம் பாடல்களும் 'ஆயிரம் வேதமே' என்ற பார்ப்பனீய அடிமை தத்துவராயர், தாண்டவராயர், திருவேங்கட நாதர், நடராசர், அருணாசல சாமி, சச்சிதானந்த சாமி, நாராயணன், பொன்னம்பலம், புளியம்பலம்—என கந்தலும் சாம்பலும் பரக்கும் பல நொண்டிக் கோவணங்கள் வருகின்றனர். அந்த வரிசையில்; ''சாதியையும், வருண தர்மத்தையும் நிலை நிறுத்தவல்ல அத்வைதம், தமிழ் நாட்டில் மட்டும் எப்படி சாதியை ஒழித்து விட முடியும்? என்று கேட்ட பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனாரும் வருகிறார். என்னே அறியாமை!

''கழுதையாகப் பிறந்தாலும் காஞ்சிபுறத்தில் பிறக்க வேண்டும். என்ற மதமொழிக்கு ஒப்பவாறு காஞ்சி சங்கராச்சாரியார் (தினமணி 27-2-69)

''இந்து மதம் பழைமையானது. உலகம் தோன்றிய காலத்திலேயே தோன்றியது. இந்து மதத்திற்கு ஆதி கிடையாது. வேதம் உண்டான காலத்தில் ஏற்பட்டது, வேதம் எப்போது உண்டாயிற்றென்று சொல்லமுடியாது.'' எனப் பிடி கொடுக்காமல் இந்து மதத்தின் தர்மம் அவரவருக்கு விதித்தபடி நடந்து சனாதனத் தர்மத்தை நிலை நிறுத்த வேண்டுமென்ற அவருடைய கருத்துக்கு விளக்கம் தெரிவித்த தந்தை பெரியார்:

"இந்து மதம் எவரால் எப்போது உண்டாயிற்றென்று சொல்ல முடியாது என்பதை சங்கராச்சாரியாரே ஒப்புக்கொள்வதோடு உலகம் உண்டான காலத்திலேயே உண்டானது என்றும் சொல்கிறார். உலகம் உண்டான காலம் காட்டுமிராண்டிக் காலமாக இருந்திருக்க வேண்டும். அந்தக் காலத்தில் ஏற்பட்ட தர்மங்கள் இன்றும் தொடரப்படவேண்டும்; அதன்படி நடக்காவிட்டால் பாவம், கேடு ஏற்படும் என்றால்— இதில் அறிவுத் தெளிவு இருக்கிறதா எனச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்."

"எனவே இந்துமதம் என்பது பெரிய புரட்டு. பார்ப்பனர் சக்திக்கு ஏற்ப; பார்ப்பனரல்லாதவர்களின் முட்டாள் தனத்திற்கும், மனமாற்ற தன்மைக்கும் ஏற்ப அவ்வப்போது உண்டாக்கும், உண்டாக்கிக் கொள்ளும் திட்டங்களும், கருத்துக்களுமேயாம். அதுவும் தேசத்திற்கொருவிதம், ஊருக்கு ஒருவிதம், சமயத்திற்கு ஒருவிதம், சந்தர்ப்பத்திற்கு ஒருவிதம், ஆளுக்கொரு விதம், என்றெல்லாம் சொல்லலாம்."

"ராசாசியோ பஞ்சமர் வீட்டில் சாப்பிடுவார். சங்கராச்சாரியோ பஞ்சமரைக் கண்டதற்குக் குளிப்பார். சிலர் நிழல்பட்டதற்குக் குளிப்பர், சிலர் தொட்டதற்குக் குளிப்பர். சிலர் பஞ்ம ஆணையோ, பெண்ணையோ திருமணம் செய்துக் கொண்டு பார்ப்பனராகவே இருப்பார்கள். 'பலித்தவரை' என்பதுதான் பார்ப்பனியமும், இந்து மதமும்" என்று கூறினார்.

இன்றும் கூடப் பார்ப்பனர்கள் தங்களின் சிறுபான்மை இனத்தைக் காப்பாற்றிக் கொள்ள, அவர்களின் அடிவருடிகளான சூத்திரர்களைக் கொண்டே சிண்டு முட்டி விடுகின்றனர். பிராமணீயம் காக்கப்பட, வேதம் என்றார். அதன் செயல்பாடு யாகம் என்றார். வர்ண குல தர்மம், தீண்டாமை, ஆண்டான் அடிமை ஏற்ற பேதம் என்பவைகளை உறுதிப்படுத்தும் இந்திய அரசின் மனு தர்மச் சட்டம் கொண்டே நம்மைத் தலைகுனிய வைத்திருக்கின்றனர்.

பகுத்தறிவாளன், "ஏற்றத் தாழ்வு கூடாது" என்றும், தொண்டன்,—"அனைவரும் இந்நாட்டு மன்னன்" என்றும் கூறும் உண்மையான மனிதன், தன்னை இந்தியாவின் குடிமகன் எனச் சொல்லிக் கொள்ள முடியாது. அவன் பார்ப்பனப் பாதுகாப்புச் சட்ட வர்ண விலங்குகளால் அடிமைப்படுத்தப் பட்டிருக்கிறான். இந்திய அரசியல் சட்டத்தின் மூன்றாம் பகுதியான 25. 26, 27, 28, ஆகிய சட்டப் பிரிவுகள் மதச் சுதந்திர உரிமை, மதப் பழக்கம், செயல்பாடுகள், கடைப்பிடிப்பு, வழிபாடு என

பிராமணரல்லாத பிற எந்த சாதியினரும்—தெய்வ விக்ரகங்களைத் தொடக்கூடாது. அதனால் அந்த விக்ரகங்கள் தூய்மை இழக்கக் கூடிய எந்த ஒரு நடைமுறையை எந்த அரசு மேற்கொண்டாலும்; அது இந்து மதப் பழக்கங்களிலும், நம்பிக்கை, நடவடிக்கைகளிலும் தலையிடுவதாகக் கருதப்படும் எனவும்,

அரசியல் சட்டப் பிரிவு 25 (1) ஐ அது மீறுவதாக அமையும் என, ஒரு வழக்காடிய தீர்ப்பினை சிந்தனைச் செம்மல் கோபிச் செட்டிபாளையம் வழக்குரைஞர், கு ச. ஆனந்தன் கூறியவாறு "நீதி மன்றங்களே—பார்ப்பனீய மதவாத உடைமைகளை காத்துக்கொள்ளல் பொருட்டு—குறிப்பாக உச்சநீதி மன்றங்களே அவற்றிற்குப் பாதுகாப்பாக நிற்கின்றன." என்றார் மடச்சாமியார்களை வைத்துக்கொண்டு—நான் இந்து,—இந்தியக் குடிமகன் எனச் சட்டம் வகுத்த மகான் காந்தியும், நேருவும், யாருடைய தேசிய ஒற்றுமையினை மனத்திற் கொண்டு,—என்ன பொருள் கொண்டு இப்படிச் சட்டம் செய்தார்கள் என்பதைச் சிந்திக்க வேண்டும்!

"பிராமணரல்லாத எந்த மனித சாதியும் விக்கிரங்களைத் தொட்டால் அது தீட்டுப்பட்ட குற்றமாகும்" என்ற மேற்கண்ட சட்டத்தை முன்நிலைப்படுத்தி திரு.வி க வும் மாயவரம் சமரச சன்மார்க்க மாநாட்டில் 7-5-1927—இல்;

"கடவுளின் முன்நிலையிலுமா உயர்வு தாழ்வு? கடவுளை மரம், செடி, கொடி, பாம்பு, சிலந்தி, யானை முதலியன பூசித்ததாகப் புராணங்கள் புகல்கின்றன. கடவுளின் உருவங்கள் மீது ஈக்கள் மொய்கின்றன, பல்லிகள் ஓடுகின்றன, இவைகளுக்கெல்லாம் இறைவனைத் தொடும் உரிமை இருக்கும் போது ஆரறிவுடைய மனிதனுக்கா அவ்வுரிமை இல்லை? சாதியார் கொடுமை என்னே?" என்று மனம் புண்பட்டார்.

இவற்றையெல்லாம் அறிந்து துயர் தாங்கிய அறிஞர் அண்ணா அவர்களும் "இந்து மதம் என்பதிலே உள்ள கடவுள் முறை, சமுதாய முறை, மக்கள் வாழ்க்கை முறை ஆகியவைகளை அலசிப் பார்த்த பிறகு யாருக்குத் தான் தன்னை ஓர் இந்து எனக் கூறிக்கொள்ள மனம் இடம்தரும்? பாம்பை எடுத்துப் படுக்கையில் விட்டுக் கொள்வார்களா? விஷத்தை எடுத்து உணவில் சேர்ப்பார்களா? வீதிக் குப்பையை வீட்டிற்குள் கொண்டு போய்ச் சேர்ப்பார்களா? மதி துலங்கும் விஷயங்களை விட்டு; மதி கெடுக்கும் கற்பனைகளைக் கட்டி அழுவாரா?" என்றார்.

சாரதாச் சட்டம், தீண்டாமை ஒழிப்புச் சட்டம், கோயில் பிரவேசச் சட்டம், சூத்திர அர்ச்சகர் ஆகியனவற்றை முன் மொழிந்து,— பின் மொழிந்து சட்டமன்றங்களில் நிறைவேற்றி சனாதிபதியின் அனுமதி பெற்றாலும்; அவற்றை அமுல்படுத்த உச்ச நீதிமன்ற மனுச் சட்டங்கள் தடையாயிருக்கின்றனவே! இந்தச் சூழலிலும் சனாதன இந்து வர்ண தர்மங்களுக்கு ஆபத்து ஏற்படாமல் தடுப்பதாக 1934 சூன் மாதம் பார்ப்பனர் தமிழகம் முழுவதும் கொலை வேள்வி நடந்தினர்—இந்தக் கொடுமையைத் தாங்காத சைவப் பழம் திரு.வி.க.வும் குரல் கொடுத்தார் (ஆரணி—3-6-36). எப்படி?

1. ''கருத்தும், உண்மையும் இல்லாத வேதத்தைக் கடவுள் சொல்லி இருப்பாரானால், அப்படிப்பட்ட கடவுள் நமக்குத் தேவை இல்லை.''

2. ''இந்த யாகத்தினால் ஒரு நன்மையும் இல்லை. இது எல்லாம் மக்களை மயக்கும் பூச்சாண்டி. எந்தப் பெயரால். இந்தக் கூட்டத்தார், இந்த இழிதொழிலைச் செய்கிறார்கள்? வேதம் என்ற பெயரால் இந்தக் கொடுமை நடைபெறுகிறது.''

3. ''ஒரு காலத்தில் இந்த யாகக் கொடுமை இருந்தது. யாகம் பயம் காட்டுவதற்காகச் செய்யப் படுகிறது, என்று திரு. ராம. சாமியார் (தந்தை பெரியார்) சொன்னதை நான் உண்மை என்றே அறிகிறேன். காட்டுமிராண்டித் தனமாய் பயம் காட்டுவது அவர்கள் தொழில்'' என்றார்.

இவர்களுக்கு, ''அனைத்து மக்களும் ஒரு குடையின் கீழ் நிற்க வேண்டும்; எல்லோருக்கும், எல்லாப் பிறப்புரிமையும் வேண்டும்; மனித சமூகத்தில் உயர்வு தாழ்வு காட்டி, மூடக் கொள்கைகளை நிலை நிறுத்தும் இந்தச் சுய அதிகார வெறி ஒழிக்கப் படவேண்டும்'' எனப் போராடி, மதவெறியர்களால் முச்சந்தியில் நிறுத்தித் தீயிட்டுக் கொளுத்தப்பட்ட உலகளாவிய இத்தாலிய ஜியாடர் புருனோவைத் தெரியுமா? தெரியாது! மதவாதத்தை ஒழிக்கப் போராடிய கத்தோலிக்க போப்ஜீன் மஸ்லியர், வால்டேர், இங்கர்சால், லிங்கன், போன்ற சீர்த்திருத்த வாதிகள் யாரையேனும் தெரியுமா? தெரியாது! வேறென்ன தெரியும்? இங்குள்ள மதவாத ஞானசூனியங்களுக்குப் பொதி சுமக்கத்தான் தெரியும்.

பார்ப்பன அடிவருடியாக சாதியையும், வருணத்தையும் காப்பதற்கு தீர்த்தம் குடித்து, ஞானஸ்நானம் பெற்றவர்

தெ. பொ.மீ, அத்வைதம், துவைதம் என்பதற்கு அவரவர் கால வழக்கில் பிற்பட்ட போலி ஆன்மீக மந்திரச் சாமியார்கள்—தங்கள் பிழைப்பு—சுகபோகம் பல்லக்குப் பரிவாரம், மானியம், ஆகியனவாக சுரண்டிச் சேர்த்து அதைக் காப்பாற்ற அவர்களின் அறியாமையில் அதனதற்கு வெவ்வேறு பொருள் கொண்டு புலம்பி வாழ்ந்து முடிந்தனர். காஞ்சி சங்கர மடத்திற்கு வரிசையாகப் பட்டம் போட்டுக் கொண்டவர்களுக்கே, அவற்றின் உண்மைப் பொருள்கூற அடிப்படைத் தெளிவு இல்லை.

கேரளக்காலடி ஆதிசங்கரரின் தாய் சிவகாம்பிகையல்ல. ஆரியாம்பிகை. அவர்களே மதவழி ஐதீகங்களால் அழுத்தப்பட்டு சங்கரர் வட மாநிலம் போந்தார்.

தத்துவ பஞ்சபூதம் பரிணாமம், உடற்பயிற்சி யோகம் ஆன்மீகம் என்ற பெயரில் அவர்காலக் குருமார்களின் விளக்கப் பொருளில் அவர் குழம்பினார், ஆனாலும், விழிப்போடு சாரு வாக்க லோகாயதம் கபில சாங்கியம் காணாதவைசேடிகம், பூர்வமிமாஞ்சை, என்ற பெயர்கூறும் தலைப்புக்குரிய செய்திகளில் கலப்படத் திணிப்புகள் இருந்தாலும் வேதாகம உபநிடத அறிவிலும் சாங்கிய பரிணாம வாதமான கடவுள் மறுப்புவாத பஞ்சபூதக் கூட்டணிப்பிறப்பு—அழிவு என்பதில் அத்வைத நெறியை வலியுறுத்த முயன்றார். புத்தரின் அநாத்ம வாதமும் இவற்றையே கூறும். இதன் விளக்கமாகத் தந்தை பெரியார்.

1. ''பஞ்சபூதக் கூட்டினால் ஏற்பட்ட உலகத்தைத்தான் பிரபஞ்சபூதம் எனப் பெயரிட்டு அழைத்துக்கொண்டார்கள். இதற்கு ஒரு எஜமானக் கடவுள் வேண்டுமென்று யார் நினைத்தாலும். நினைக்காவிட்டாலும்—சங்கராச்சாரி—அதாவது சங்கர மதம் சிறிதுகூட நினைக்கவே இல்லை இன்றுகூட சங்கர மதத்திற்கு கடவுள் ஒன்று இருக்கிறது என்ற கொள்கையே இல்லை.''

2. ''உலகிலுள்ள எல்லா மக்களும், எல்லா நாட்டிலும் மதங்களின் அவ்வக்காலங்களின் போது காட்டு மிராண்டிகளாய் சிந்தனையற்ற முட்டள்களாகவே இருந்திருக்கிறார்கள். தென்னாட்டில் தமிழர்களிடத்தில் இன்றைய மதசம்பந்தமாக இருந்து வருகிற காட்டுமிராண்டித்தனங்களும், மூடத்தனங்களும் (அன்று) இருந்ததாகத் தெரியவில்லை.''

3. ''வேதத்துக்கு வியாக்கானம் செய்யப்பட்ட சங்கரர் இராமாநுசர், மாத்துவர் முதலிய மதக்குருமார் என்பவர்கள்

தனித்தனியாக அவர்களுக்கென்று செய்துகொண்ட வியக்கியானங்கள் கடவுளைப் பற்றி ஒன்றுக்கொன்று பொருந்தாத வகையில் கருத்துத் தெரிவிக்கின்றன.''

4. ''இந்த சங்கராச்சாரிக்கு சிஷ்யர்கள்; பார்ப்பனரில்; வைணவர்கள், மாத்துவர்கள், சைவர்கள், வடமாக்கள் என்கின்ற பலவகைப் பார்ப்பனர்கள் சங்கராச்சாரியை குருவாக ஒப்புக் கொள்வதில்லை. சங்கராச்சாரிக்கு இன்னும் மற்ற மதக்காரர்கள் இட்ட பெயர். பிரசன்ன பவுத்தர்— (காட்சியளிக்கும் புத்தர்) அதாவது **பச்சை நாத்திகர்** என்பது. எப்படியெனில் புத்தமதத்திற்கு கடவுள் இல்லை என்பது மாத்திரமல்லாமல் ''ஆத்மா'' என்பதும் இல்லை. (அனாத்மன்) என்பதும் கொள்கையாகும்.''

5. ''இன்று மதம் ஒழிந்தால் மனித சமுதாய உயர்வு. செல்வத்தில், அறிவில், அந்தஸ்த்தில், வாழ்வில் உள்ள பேதங்களும் ஒழிந்து கவலையற்ற சமநிலை ஏற்பட்டுவிடும். இந்த நிலை ஏற்படக்கூடாது என்பதற்காகத்தான் இன்று பார்ப்பனர்களும், பணக்காரர்களும் மதப் பூச்சாண்டிக் காட்டிப் போர் தொடங்கி இருக்கிறார்கள்'' என்றார்,

**துவைதம்** என்பது; **கடவுள், ஆத்மா** ஆகிய இரண்டு உண்டு என்பதான கொள்கையை உடையதாகும்.

**அத்வைதம்** என்பது மேற்கண்ட (கடவுள் ஆத்மா) இரண்டும் இல்லாதது. அதாவது பஞ்ச பூதக் கூட்டணியில் உலகம் அதில் உருவம், வளர்ச்சி, முதுமை, இறப்பு, பிறப்பு, அழிவு—எனச் சென்றுதான் அது மாறக்கூடியது. பொய்த் தோற்றம். இல்லாமல் போகக் கூடியதே என்பதுதான் இந்த அத்வைதம்.

ஆனால், **சிவனிய வாதிகள் துவைதத்தில்** சொல்லப்பட்ட கடவுள், **ஆத்மா** என்பதில்—**கடவுள்** என்பதற்கு **மட்டும் திருமூலரின் திருமந்திரம்** கூறிய;

> **''கடவுள் வரம்பில்லா பரிணாம உருவினர்**
> **இருந்தும் நமது சின்னஞ்சிறு இதயத்தின்**
> **அன்பில் அவர் தன்னையே குறுக்கிக் கொண்டார்''**

என்ற முடக்குவாதப் பொருளுக்குப் புனிதம் கற்பித்துத் தொடர் பொருள் வரைந்தனர்.

மேலே சொல்லப்பட்ட அத்வைத — கடவுள்—**ஆத்மா** என்பதில் ஆன்மா என்பதற்கு சிவஞான போதம். ''ஆன்மா

என்பது மனிதனின் ஆத்மாவாகும். அது உயிரினின்று வேறு பட்டதாகும். எப்படி? தாவரங்களும், மலைகளும் வளர்கின்றன. அவற்றிற்கு உயிர் இருக்கின்றது. ஆனால் அவற்றிற்கு ஆன்மா இல்லை'' என்று முரண்பாடான கருத்து விளக்கம் கூறியது கொண்டு, உடற்பயிற்சி, யோக நெறித் தத்துவத்திற்கும் பக்த கோடிகள் இந்த ஆன்ம நெறித் தத்துவத்தைப் புகுத்தினர்.

ஆனால் ஊர்வன, பறப்பன, நடப்பன என; எறும்பு, வண்டு, நாய் ஆகியவற்றோடு சிவனியம் சமப்படுத்தாத மனித ஆன்மாவை, வைணவம் சமப்படுத்தி—அதாவது இந்து சமயம் என்ற பெயரில் மனித ஆன்மா—மனித உயிருக்குள்தான் மீண்டும் பிறப்பெடுக்கும் என்று விளம்பியவற்றை—பார்ப்பன மதம் புறக் கணித்து, தசாவதார விளக்கத்தின்படி சிங்கம், பன்றி, ஆமை, மீன் ஆகியவற்றோடு மனித ஆன்மீகப் பிறப்பையே இணைத்துக் கூறிக் குழப்பி விட்டது.

சமஸ்கிருத மயமாக்கப்பட்ட புராண, இதிகாச வல்லொற்று மொழித் திணிப்பில் அத்வைதம், துவைதம், ஆன்மீகம், யோகம் என்பதெல்லாம் பார்ப்பனத் திணிப்புக் கருத்துக்களால் வெவ்வேறு பொருள் கூறுவதாயின.

இந்துத் தத்துவங்கள்—பகவத் கீதையில் கருச்சிதைவு செய்யப் பட்டு, தரக் குறைவும் செய்யப்பட்டன. பார்ப்பனீயத்தையே உயர்ந்ததாக்கி ஏற்றத் தாழ்வு சொல்ல; இந்து மதத் தத்துவத்தி லிருந்து அதை வேறுபடுத்திக் காட்ட; அத்வைத (ஒருயிர்) மதத் தையும் ஒன்றை மூன்றாக்கி, பல தெய்வ மயமாக்கப்பட்டது. பகவத் கீதை வாயிலாக துவைதத்திற்கும் சொர்க்கம்,நரகமென, கர்மம், ஞானமென,ஜீவாத்மா, பரமாத்மா என—அவ்வழிச் சரடு களாக—அவன், அவள், அது, பசு, பதி, பாசம் என்ற தொடர் பொருளும், விளக்க முடியாத கற்பனையும் காட்டி மிகைப் படுத்தப்பட்டன.

திராவிடச் சிந்தனைகளைச் சிதறடித்து — தங்களை முன்னுரிமைப் படுத்திக் கொள்வதில் ஆரியப் பார்ப்பனர்; தத்துவ மாவது அத்வைதம், துவைதமாவது என அவற்றின் உள்ளாளங் களைத் தலை தூக்க விடாமல் புதைத்து விட்டனர். அவர்கள் லட்சியமே சமஸ்கிருத மயமென்று முனைந்த போது, அவர் களுக்கு அறிவைப் பற்றிய கோட்பாடோ, ஒற்றுமை உணர்வோ இருந்திருக்க முடியாது. இல்லவே இல்லை

மேலே சொல்லப்பட்டு வந்த கலப்பட, வழித்தட அத்வைதம் துவைதமாகி—துவைதம் அத்வைதமாகி—அவற்றின் பொருள்,

கடைப்பிடிப்புகள், வியாபாரமாகி விட்டதால், அரசு மான்யப் பட்டா நில புலன்களுடன் ஒதுங்கிக் கொண்ட பல வட மாநில மடங்களில்—சங்கர மடங்கள் பழைய அத்வைத காஞ்சி சங்கர மடத்தை ஒரு பொருட்டாக எண்ணவில்லை என்பதற்கு அடிப் படை சங்கரர் சமண பௌத்த மட பிரசன்ன புத்தர் என்ற காரணத்தோடு, தற்பொழுது அது நாராயண ஸ்மிருதியை அது ஓதினாலும் இன்று அதைக் கேட்பாரில்ல. சுமார்த்த பிராமணர்களே வேளா வேளைக்கு அங்குபிராமண போசனம் செய்கின்றனர்.

உயிர்பலிச் சின்னங்களாக; குத்து ஈட்டிகள், முள்ப் பீப்பாய்கள் சூலாயுதம், கழுமரம், நெருப்புக்குண்டம் ஆகியவை யும், மதவழிபாட்டுக் காவியுடை உத்ராட்சம், கமண்டலம், எலுமிச்சம் பழம், கருப்புக் கயிறு, செந்நீர்க் குங்குமம் ஆகியவை கொண்ட ஆரியச் சிற்பம், ஊர்க் காவல் பிடாறி கோயில் எனப் பலவகை என்பதெல்லாம் ஆயிரக்கணக்கான வருடங்களாக அழுத்தப்பட்டு மூட மக்களால் விடமுடியாது அவைகளால் அச்சுருத்தப்படுகின்தனர். அந்த உடைகளில், தோற்றத்தில் மக்களிடம் அச்சமரியாதைக் குரியவர்களாக நடமாடும் மடச் சாமியார்கள், ஆதினம் கோட்டம் எனத் தெய்வப் பெயரால் கொள்ளை, கொலை, கற்பழிப்பு, கடத்தல், எனப்பலவற்றைச் செய்து ஏமாற்றுபவர்கள், நாடாளும் பல தலைவர்களின் தலை யில் தமது நிர்வாணக் கால்களை வைத்து சுப்ரபாதம் பாடச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். பிடிபட்ட சாமியார்களையும் அவர்கள் வாழும் மடங்களையும் விழித்துக் கொண்ட மக்கள் அவற்றை வெறுத்து ஒதுக்கும் நிலைக்கு இன்று முன்னேறி விட்டனர்.

திருச்சி பிரேமானந்தா நடத்திய படுகொலை, பாலியல் வன்முறை தொடர்ந்து தென்காசிச் சாமியார் மடம் தரை மட்டம் ஆக்கப்பட்ட ஒருமித்த உணர்வு தெற்கிலிருந்து வடக் காக வேலை வாய்ப்பிற்கு அதன் சதவிகித ஒதுக்கீடுகளுக்கு தடையாக இருப்பதாக காஞ்சிமடத்தையும் இடித்துக் தள்ள நூறுபேர் திரண்டு வந்த செய்தி மூடமதியினருக்கு சமாதி கட்டும் முனைப்பே என்பதறிய வேண்டும்.



# 2

# வேதகர்மம் என்ற பெயரில் வியாச வேதாந்திகள்

ஐதிக தர்மத்தை ஒப்புக் கொண்ட ஆதி வீரசைவமோ வேத பாராயணத்தில் தன்னைத் தழுவிக் கொண்டது. அதுவே அத்வைத சச்சிதானந்த பிரம்மம் ஆயிற்று. வேதங்கள் காலம் காலமாகப் பாடிச் சேர்க்கப்பட்டு குறிப்பிட்ட ஒரு காலவரையில் நின்று விட்டது. அதனைத் தொகுத்து உரைத்த உபநிடதங்கள் விரித்துக் கூற முற்பட்ட போது அனைத்து மதத். தத்துவங்களையும் ஒருமைப்பாடு என்ற பெயரில் பிழையாக முகப்படுத்தி விட்டன.

அவை காலத்திற்கு ஏற்று, பல பொருள் விளக்கினாலும், ஏற்றத் தாழ்வு, பிளவு, ஒரு சார்பு நீதி, ஒற்றுமையின்மை என்ற அடிப்படையிலேயே நிற்கிறது. வேதாந்த வியாசரோ; மகா பாரதம்—அதாவது அவர் பெயரில் அப்படித் தொகுத்தார்களோ காலங்காலமாக எழுதினார்களோ என்ற கேள்விக் குறி இருக்க—மறைந்த காஞ்சிப் பெரியவரோ கணபதிப் பிள்ளையார் தனது கொம்பில் (தந்தம்) ஒரு கொம்பையொடித்தே மகாபாரதம் எழுதினார் என்று அவர் காலத்தில் ஒரு புதுக் கதை விட்டார்.

ஜீவாத்மா வேறு, பரமாத்மா வேறு என்ற பாரத பகவத் கீதைப் பார்ப்பன துவைதக் கொள்கைக்கு மாறுபட்டவைகளான சம்ண—வர்த்தமானங்களும்,பௌத்த திரிபீடகங்களும்அனைத்து இந்திய மக்களின் தேசிய ஒருமைப்பாட்டிற்கு வித்திட்டவைகளே. ஆனாலும், இன்பத்தால் இன்பம் கிடைப்பதில்லை. இன்பத்தால் பேரின்பம் கிடைக்கும், உடலை வருத்தும் துயரம் பாவத்தைக் கழுவுவதாகும் என்பது 24-ம் தீர்த்தங்கர மகாவீர வர்த்தமானர் கொள்கையாகும்.

நீரைக் குடித்தால் அதிலுள்ள உயிரணுக்களைச் சாகடித்த பாவம்; காற்றைச் சுவாசித்தால் அதிலுள்ள உயிர் அணுக்களைச் சாகடித்த பாவம்; என்ற தலைகீழ்சமணத் திகம்பரதத்து வத்தை திசை திருப்பி தனது அனாத்ம வாதச் சொற்பொழிவைத் துவங்கி அவர் காலத்திலேயே வெற்றி கண்டவர் புத்தர்.

விரிந்து படர்ந்து கிடக்கும் இயற்கையில் செழுமையான உலகில் விடுதலைப் பறவைகளாக மனிதன் வாழ்ந்தாலொழிய, அவன் வாழும் வயதிற்குள் பெற வேண்டிய இனிய இன்பங்களை வேண்டாத கொள்கைக் கட்டுப்பாட்டில் இழந்து அழிந்து போகின்றான்.

பொருள் இழப்புச் சடங்குகளை மனிதன் தனது பூர்வீகச் சொத்து என்று தன் தலையில் சுமந்து; தன் வருங்காலத் தலை முறையினருக்கும் அதைச் சுமத்தி; அதில் அவன் ஆறுதலடைவ தால் வாழ்வும் வளர்ச்சியும் கைகூடாமல் போய் விடுகிறது.

நன்மை நிகழ்ந்ததாகக் கூறும் ஒரு சார்புக் கதைகளை நம்பியவனுக்குத் தீமை வந்த போது 'கர்ம வினை—விதி' எனச் சமாதானம் சொல்லப்பட்டது. பிடிப்பில்லாதவற்றில் தங்களை அடிமைப்படுத்திக் கொள்ளும் அறியாத ஏழை மக்கள் அழுகை யிலும் அது சென்ம பயன் என்று ஆறுதலடைகின்றனர்.

கிரேக்கத் தத்துவத்திற்கு முன்னரே நமது இந்துத் தத்துவ உயிர் மரண இயற்கையின் பரிணாம ஆய்வு தொடங்கி இருந்தும், இடைத் தழுவலில் அவை துவைதம் என்ற ஈருயிர் வேதாந்த மாயின.

அத்வைத தேசிய புத்தர் காலத்திலேயே அதற்குச் சரிவு ஏற்பட்டாலும்—இயற்கையை ஆத்மா என்று கூறிய கபில சாங்கியக் கோட்பாடுகளைத் தழுவிய ஆதிசங்கரர், புத்தரின் ஆய்வுச் சித்தாந்தங்களை மறைவாக ஒப்புக் கொண்டார்.

சீவாத்மா, பரமாத்வான வைகுண்ட துவைத வாதிகளுக்கு இந்து தர்மம் என்ற பெயரில் நிறங்காட்டிக் கொண்டிருந்தவர் களுக்கு அது பிடிக்கவில்லை. ஆனாலும் சங்கரக் கருத்துக்கள் முழுக்க முழுக்க பிராமண துவைதம் என்பர் சுவாமி விவேகானந்தர்.

கண், மூக்கு, காது, வாய், மெய் என்ற ஐம்பொறிகளுக்கும், ஐந்து வெவ்வேறான புலன்கள் உண்டு ஆனால் இவற்றை ஒருமைப்பாட்டுடன் இயங்க வைப்பது மனம். ஐம்புலன்களும் தாம் பெற்றதை மனதிற்குத் தெரியப் படுத்துகின்றன. எல்லா

உறுப்புக்களையும் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொண்ட மனம் அதுவாகவே சிந்தித்து செயல்பாட்டைத் தூண்டும். அது ஏதோ ஒரு முடிவையும் எடுக்கின்றது.

அந்த மனம்; உணர்ச்சி மயமாக இருப்பதனால்தான் பலன்கள் கொடுக்கும் அறிவுச் சிந்தனையை அப்படியே தன்னுள் கிரகித்து ஒன்பது வகையான மெய்ப்பாட்டு வகைகளையும் பெறுகின்றது.

அதனதன் தன்மைகளை அவிநயத்திலும், பேச்சு மொழியிலும் வெளிப்படுத்துகிறது. இந்த அடிப்படைத் தத்துவ உண்மைகளிருக்க, உடலை இயக்குகின்ற பஞ்ச பூதங்களில் ஒன்றான உயிரோ—உடலின் அழிவோடு அழியும் தன்மை பெற்றிருக்கும் உண்மையும் இருக்க, அதற்கு முதன்மை கொடுத்து, அது நிரந்தரமானது என எப்படி ஒப்புக் கொள்வது?

புத்தரின் அனாத்ம வாதமான அந்த ஒருயிர் அத்வைதம் என்பது தேசியம். ஈருயிர் என்பது துவைதம். இவற்றின் விளக்கமாகச் சொல்லப்படுவதே சொர்க்கம், நரகம், பரமாத்மா, சீவாத்மா, ஞானகாண்டம், கர்மகாண்டம், என ஒருசார்பு நியாயம் சொல்லும் தயாரிப்புகளாகும். இங்கேதான் பிளவே. உண்டாகின்றது. அடிப்படையான ஏற்ற, இரக்கம், வேண்டாத நெறியில் அடிமைப்படுத்தும் சாதி வர்ணப் பூசல்கள்; ஆண்டான் அடிமைக் கடைப்பிடிப்புகள், அனைத்தும் இவற்றின் வாயிலாகப் பாவ புண்ணியம் எனச் சொல்லப்படுகிறது.

உடம்பில் சூடும், அறிவு பூர்வமான செயல்பாட்டுத் திறனும் இருக்கிறது. உடல் குளிர்ந்து விட்டால் ஆன்மா செயலற்று விடுகிறது. உடலை அதனால் இயக்க முடியாமல் போகிறது. இன்று கூட எதிர்பாராது மூச்சு நின்று விட்ட உடம்பிற்கு—அதன் வாயில் பிறர் வாய்வைத்து ஊதியும், இழுத்தும், நவீன மருத்துவக் கருவிகள் கொண்டும் பிராண வாயு (உயிர் காற்று) செலுத்தியும், செத்தவரை உயிர்ப்பிக்க முனைவதைக் காணுகின்றோம். அப்படியானால் உயிர் என்ற தலைப்பிட்ட அந்த உடலில் இருந்த சக்தியின் தன்மை அழிந்து விடுகிறது.

உயிர் அழியாது என்பதில் யூதர், அராபியர், எகிப்தியர், ஆகியோர்கள் கூட இன்னும் நம்பிக்கை வைத்திருக்கின்றனர். புத்தர் கூறியது போல ஸ்கந்தங்கள் எனக் கூறப்படும் சொல், ஸ்பரிசம், உருவம், ரசம், நாற்றம் ஆகியவற்றின் கூட்டுக் கலப்பினால் ஏற்படும் சக்தியே ஆத்மா என்ற உயிர்க்காற்று. இந்த சக்தி அடிப்படையான—இயற்கையின் ஐந்து படைப்புகளான பஞ்சபூத

நிலம், நீர், நெருப்பு, காற்று, அண்டம் ஆகிய இவற்றால் தோற்றுவிக்கப்பட்டதாகும்.

அதன் அணுச் சேர்க்கைகளும் நொடிக்கு நொடி மாறுபட்டுக் காட்சியளிக்கும் தன்மையுடையன. ஆன்மீகவாதமென்ற இந்த உயிர்த்தத்துவத்தில் மூக்கு, விழி வைத்து மக்களை அடிமைப் படுத்தும் பல கொள்கைகள். அதற்குப் பல கதைகள் கட்டப் பட்டிருக்கின்றன.

இதன் உண்மைக் கண்டுபிடிப்பு விளக்கமே புத்தரின் அனாத்மவாதம். அதுவே இரண்டாயிரத்து ஐநூறு வருடத் திற்கு முந்தைய இந்தியாவின் விஞ்ஞான மறுமலர்ச்சியாகும். புத்தர் மக்களின் சிந்தனையைத் தூண்டினார். கடுமையாக உழைக்குமாறு சொன்னார். போலிகளை நம்ப வேண்டாம் என்றார். இன ஒற்றுமையோடு, தேசிய ஒருமைப்பாட்டுக் கொள்கைகளுடன் ஒரு சார்புத் தன்மைகளுக்கு அடிமையாகாமல் விழிப்பாக இருக்கும்படி குரல் எழுப்பினார்.

"சூத்திரப்புத்தா" என்று அவர்காலப் பார்ப்பனக் குரு குல வேதப்பாட சாலை மாணவர்கள் புத்தரை ஆங்காங்கு பார்க்கும் போது எள்ளி நகையாடினாலும் அன்றையச் சாதி வர்ணக் கெடுபிடி அமுலாக்க அதிகாரங்களில் தன்னை எதையும் தாங்கும் இதய முள்ளவராக்கிக் கொண்டு பார்ப்பன மதக்கட்டுப்பாட்டுச் சட்டவிதிகளுக்கு, புரோகிதர்களுக்கு உடன்பட்டே புத்தர் கடவுள் மறுப்பு வாதம் (அனாத்மவாதம்) பேசினார். தீண்டாமை, ஏற்ற தாழ்வுகளால் அடிமைகளாகவே வாழ்ந்து செத்து மடியும் கடைநிலை மக்களுக்காக, அவர்களின் ஞான மான உணர்வுகளுக்காக. கருத்துச் சுதந்திரத்திற்காக ஆளும் வர்க்கத்திடம், மக்கள் கூட்டத்தில் எடுத்துரைத்தார். சாவுக்குப் பின் சொர்க்கம், சமணபவணம் என்ற பார்ப்பன சனாதனி களுக்கும், வண்ண வண்ண ஆடையில் வரும் வைசாலி இராசாங்க வழித் தீர்த்தங்கர மகாவீரரின் கடுமைக்கும் பணிந்து கொடுத் தாலும் நாசுக்காகவும், நகைச்சுவையாகவும் பிறரின் எதிர் வாதங்களுக்கு பதில் கூறினார். அறிவுபூர்வமான பதிலை அவர்கள் ஏற்கமாட்டார்கள் என்பதறிந்து அவைப்பற்றி காரசார மாகிப் பேசினால் வாய்க்கும் பூட்டுவருமென்று' உயிர்வாழும் மனிதன் அவன் காலத்தில் சுயமரியாதை, சிந்தனை, சீர்திருத்தம் பெற வேண்டும் இறப்பிற்குப் பிறகு நடப்பதென்ன? என்ற கேள்வி அநாகரிகமானது என்றும் குரல் கொடுத்தார்.

★

3

# துவைதம் என்ற பெயரில் பதஞ்சலி யோகிகள்

உலகில் பெரும்பாலான துன்பங்களுக்கு முரணான கொள்கையும். சுயநலமும் தான் காரணம் என்ற புத்தர், மனிதர்கள் சிந்தித்து நுண் அறிவைப் பெற வேண்டுமென்றால் தேசியப் பிடிப்பில்லாத வேதாந்த ஆன்மீக வாதத்தை விட்டொழிக்க வேண்டும் என்றார்.

சமணம் தழுவியவராக உடலை வருத்தும் உண்ணா நோன்பு, தவம் என்று ஆறு வருடங்கள் தனித்திருந்தும் பயன் காணாததால் ஞானமாவது,— மார்க்கமாவது என அவற்றை வெறுத்தார். அவர் இறந்து போய்விடுவார் அதை வைத்து— அவர் பெயரைக் கூறி பிழைப்பு நடத்தலாம் என்றிருந்த அவருடைய சில மாணவர்களும் கூட ஏமாற்றமடைந்து விலகிப் போயினர்.

ருக்வேத சிருஷ்டி உபநிடதம்; "ஆன்மா மட்டும் தனியாக இருந்தது. பிரம்மா உலகைப் படைக்க விரும்பினார். பிறகு படைத்தார். மக்கள் பெருக்கம் உண்டாயிற்று. வர்ணம் தர்மம் வகுக்கப்பட்டது," என்று கூறுகிறது.

"அந்தத் துவைத வாதிகளை—அதாவது ஈருயிர் —சீவாத்மா, பரமாத்மா என்று சொல்லும் அவர்களை நம்பாதீர்கள்" என்றார் புத்தர். தமிழ் மொழியை 'தரமி', 'திரமின்' என்று கூறுகின்ற; "ருக்வேதத்தில் பாடல்கள் எழுதிய அட்டகர், வாமகர், வாமதேவர், விசுவாமித்திரர், வசிட்டர், ககியப்பர், பரத்வாசர், யமதக்கினி, அங்கிரர், ஆகிய ரிசிப்பிண்டங்களே அந்த பிரம்மாவை நேரில் பார்க்க முடியவில்லை. இவர்கள் பிரம்மா

யைப் பார்க்க நமக்கு வழி சொல்கிறார்களா'' எனக் கேட்டவர் புத்தர்.

இயற்கையின் பரிணாம வாதத் தத்துவம் கூறிய சாருவாக்க லோகாயதம், கபில சாங்கியத் தத்துவங்களை எடுத்துக் கூறி மக்களிடம் மறுமலர்ச்சி, ஒற்றுமைகளை நிலைநாட்டப் பெரும் பாடு பட்டவர் புத்தர்.

கி.பி. 175 தெலுங்கு தேச மகாயண நாகார்சுன சூன்ய வாதம் கூட, ''உலகமும் அதிலுள்ள எல்லாவித சடப் பொருள் களும், உயிர்களும், சூன்யமாகவே இருக்கின்றன. இந்த உலகம் நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் காட்டும் திரட்டே தவிர—பொருள் களின் திரட்டு அல்ல'' என்றே கூறுகிறது.

பொருட்கள் எல்லாமே ஒவ்வொரு விநாடியும் புதுப்புது உருவங்கள் — தோற்றங்களைப் பெறுகின்றன. கண்கள்— புலனால் ஈர்க்கப்படும்போது, உள்ளத்தில் ஏற்படும் பற்று, தனது உணர்வாகக் காட்சியளிக்கிறது. ஒரு பொருள் அழிகிறது. புதிதாக ஒன்று பிறக்கிறது. ஆகவே எந்தப் பொருளின் உருவமும் நிலையானதல்ல. இவற்றை எல்லாம் ஆதிசங்கரரும், ஆரம்பத்தில் ஒருயிர்க் கொள்கையான அத்வைதியாக இருந்து— ஈருயிர் கொள்ளல் பொருட்டு பிரம்மமும், ஆன்மாவும் ஒன்று, என்றஞானத்தினால் பிறப்பு—இறப்பு என்னும் துன்பத்திலிருந்து பரமாத்மாவாக வெளிப்படுகிறோம் என்று வைகுண்ட நாராயண ஸ்மிருதியில் துவைதக் கோட்பாடும், ஒரு சார்புத் தர்ம தேசியமும் சொன்னார்.

ஈருயிர்க் கொள்கையான துவைத கர்ம காண்டம், ஞான காண்டம் என்ற வர்ண தர்மச் செயல் விதிகள் வேண்டாத கொள்கைகளின் மூலமாக ஏற்றதாழ்வு என்ற முரண்பட்ட தேசிய ஒற்றுமை கூறுகிறது. ஒருயிர்க் கொள்கையான அத்வைதம் உண்மையான இயற்கைப் பிறப்பியல் கூறி, பிளவு இல்லாத கூட்டணிப் பொருள் விளக்கமாக தேசிய உணர்வை வலிமைப்படுத்துகிறது.

துவைத வாதியோ எல்லாத் துன்பங்களுக்கும் ஒற்றுமை இன்மைக்கும், முன்சென்மத்தில் செய்த வினைதான் காரணம் என்பான்.

அத்வைத வாதியோ மனிதனாகப் பிறந்தவன் சுயசிந்தனை கொண்டவன். சொல்லுக்கும், அவன் செய்யும் நல்லகாரியங் களுக்கும், கெட்ட காரியங்களுக்கும் அவனே பொறுப்பேற்றுக் கொள்கிறான். இது மனித வாழ்வில் சராசரி நடக்கும் உண்மை.'' எனக்கூறுகிறான்.

"உணர்வு என்பது மெய்யறிவு. அதில் முயற்சி என்பதால் தளராத உறுதி ஏற்படுகிறது. அதில் ஏற்படும் ஆர்வம் ஊக்கம்—மனதைத் தெளிவு படுத்துகிறது," என்ற பதஞ்சலி யோகத்தைக் கடைப்பிடித்து வலியுறுத்தியவர் சுவாமி விவேகானந்தர். அந்தப் பதஞ்சலி யோகமும், அது கூறிய இயற்கைத் தத்துவமும்—பின்னர் ஈருயிர் துவைத மார்க்கமாக பரமண்டல ஞான காண்டத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டு விட்டது.

ஈனாயனப் புத்தருக்குப் பிறகு அவ்வழியே மகிந்தன், சங்க மித்திரையை அக்கொள்கை பரப்புதற்கு இலங்கைக்கு அனுப்பிய அசோகன் மறைந்தான். நாகார்சுனர் தொடங்கிய ஆடம்பர மகாயான பௌத்தத்தை குசானவம்சத்துக் கனிஷ்கர் பரப்பினார். அந்த மகாயன பௌத்தமும் மாறுபட்ட பௌத்தக் குருமார்களால் தந்திர பௌத்த வச்சிராயனமாயிற்று—அப்போது அதில் ஈருயிர்த் துவைத வாதிகள் புகுந்தனர். புத்தரின் தேசியஉணர்வு சிதைந்தது. பிறகுமௌரிய சுங்கமித்ர—புஷ்யமித்ரர்களால் வேதகால அசுவமேத யாகமே நடந்தது. இங்கே ஈருயிர்த் துவைதமே அரசோச்சியது. ஓருயிர் அத்வைதம் நலைதூக்க முடியவில்லை.

அடக்கப்பட்ட இந்திய மனித இனத்தில்; இனவாரி, சாதி வாரி, ஏற்றத் தாழ்வுப் பாகுபாடும்—அவற்றில் பூர்வவினை, சொர்க்கம், நரகம், என்ற துவைதம் மக்கள் அறிவை அடிமைப் படுத்திக் கொண்டது.

ஆன்மீக வாதத்தை—அந்தப் பெயரை அடிப்படையாகக் கொண்டு அவற்றில் ஈருயிர்க் கொள்கை திணித்ததை மறுத்த, புத்தத்தின் அனாத்ம வாதமான இயற்கை, அறிவியல், அனைவருக்கும் அனைத்தும் உரிமை, விடுதலைச் சிந்தனை இவற்றிற்கு அடிப்படை ஓருயிரக் கொள்கையான விளக்கமே அத்வைதம் எனக் கூறிற்று.

"ஊன் கெட்டு—உயிர் கெட்டு—உணர்வு கெட்டு என் உள்ளமும் போய்" என்ற திருவாசகம் கூட புத்தர் சொன்ன தீர்க்க தரிசனமான அனாத்ம வாதத்தையே கூறுகிறது. வேண்டாத திணிப்பு, கூடாத சிந்தனை இவைகளெல்லாம். இந்திய ஒருமைப்பாட்டிற்கு இடையூறாக நம்மையும் அறியாமல் நிற்கிறது. அறியாத மக்கள் இடர்படும் நம்பிக்கையிலிருந்து விடுபட்டுத் தெளிவு பெறப் பயப்படுகின்றனர். அச்சம் தவிர்த்தலும் அறிவியல் ஆய்வுத் தெளிவுமே வருங்காலத் தேசியமாகும்.



# 4

# தேசியம் என்ற பெயரில் தீண்டாமை உபதேசிகள்

இந்தியாவில் இரண்டாயிரத்து ஐநூறு வருடங்களுக்கு முன் வடமாநிலத்தில் தோன்றி வாழ்நாள் முழுதும் மனிதநேயத்தையும் தேசிய ஒருமைப்பாட்டையும் மதித்து; பிழவுபட்டு ஏற்றதாழ்வுகளில் நசித்துப்போன மக்களை சிந்திக்கச் சொல்லி வாழ்ந்து பெரும் புரட்சி செய்து மறைந்தவர் கருணை வள்ளல் மகாபுத்தர்.

இவரின் சீரிய சொற்பொழிவை பின் பற்றிய உலகளாவிய தமிழ் மறை வள்ளுவரும், ஏசுகிருஸ்த்துவும் அதே தேசிய ஒருமைபாட்டிற்குக் குரல கொடுத்தவர்கள் ஆவார். திருவள்ளுவரின் அரிய சிந்தனைகளில் மக்கள் நலனையும், வாழ்க்கை நெறிகளையும் தெளிவாக அறியலாம்.

வேண்டாத ஒரு சார்புக் கொள்கை பரப்புதல், உழைப்பின்றி வாழல், அவற்றால் அறியாமைத் துன்பம் அவற்றைப் பயன் படுத்தி அதிகார முதலாழித்துவம், ஆராய்ச்சி இன்மை, கண்மூடிப் பழக்கம் ஆகியவைகள், அவ்வப்போது நாடாண்ட ஆளுகையில் மனிதநேயம், தேசியம், என்ற பெயரில் அடக்கி ஒடுக்கப்பட்டது.

வெளியார் படை எடுப்பாக இந்தியாவில் நுழைந்தவர்களும் ஐந்தாம் படையான கைக் கூலிகளையே அதற்குப் பயன் படுத்தினார்.

அவர்கள் அரசுரிமை அதிகாரம் கொண்டு நமது ரத்தத்தை உறிஞ்சியபோதும், அச்சுறுத்தும் கொள்கைகளுக்கு உயிர்விட்ட

ஆண்டான் அடிமை, உடன்கட்டை ஏறும் கொடுமை, கடை நிலை மக்கள் படும்துயரம் அனைத்தும் ஒரு சார்பு நெறித் தாக்கம் என இந்த மன்னின் மைந்தர்கள் வந்தேறிய இஸ்லாமிடம் முசல்மான்களாயினர். கம்பெனிக் கூட்டத்திடம் கிருஸ்த்தவர்களாயினர். மக்கள் உழைப்பினை இனவாரிக் கூட்டம் பங்கு போட்டுக்கொண்டதை உணர்ந்து, படிப்பில்லாத அறியாமைக் கொள்கைக் கூட்டணியிலிருந்து விடுபட்டும், அது முடியாமலும் தேசிய உணர்வில் விடுதலை பெற அனைவரும் வீரு கொண்டெழுந்தனர்.

ஆனாலும் ஒடுக்கப்பட்டவர்களை உட்கார வைப்பதற்கு ஒருமைப்பாட்டை விரும்பாதவர்கள் சம்மதிக்கவில்லை.

கட்டை வண்டியில் போனாலும் வண்டி குடம் சாய்த்துவிட பட்டது, அதன் சக்கரங்கள் கழற்றிவிடப் பட்டன.

இவற்றில் துயரப்பட்ட ஏழைகளின் தலைவன் அம்பேத்காரின் போராட்டமோ, வேண்டாத அடிப்படைக் கொள்கைகளை விலக்கி ஆலயங்களைத் திறந்துவிட்டு ஜனநாயக ஒற்றுமையைத் திரட்டின.

ஒரே ரத்தம் என்ற உணர்வில் இந்து முஸ்லீம் ஒற்றுமை வேண்டி காந்தியடிகள் உயிரைவிட்டார். தேசியம் என்ற உணர்வின் நேரு ஒற்றுமை தேடி காசுமீரத்திரன் மலைமுகட்டில் நின்றார்.

அந்த தேசியம் காக்கப் பட வேண்டுமானால், அந்த ஒற்றுமை உணர்வு படிப்பிக்கப்பட வேண்டுமானால், ஏற்ற தாழ்வு அறியாமை நீங்கி எழுத்தறிவு அதில் நுண்ணறிவு விஞ்ஞான அறிவு, மறுமலர்ச்சி அறிவு என, அரசு மக்களைக் கட்டாயப்படுத்த வேண்டும்.

இந்தியா சுதந்திரமடைந்து பல வருடங்களாகியும் பிற படை எடுப்பு ஆளுகை அதிகாரங்களில் வாயை மூடிக்கொண்டிருந்த மூடநம்பிக்கையாளர்கள், இன்று விழிப்படைந்தவர்களாக அடிமைத்தனத்தின் மீதுள்ள மோகத்தையும், பழைய சாதிவர்ண சடங்குகளை இனவாரி ஆதிக்கத்திற்கு பெரும்பான்மை வழங்கி அதுவே தேசியம் என்ற கவிழ்ப்பு நடவடிக்கைகளில் நம்மை ஒன்றுசேர விடவில்லை. மாநிலவாரி வாக்கொடுப்புகளே சாதி அடிப்படை. ஏழை எளியவர்களின் அன்றாட வயிறு நிறைவுக்கு வழங்கும் திடீர் நிவாரணக் கூலிகள் மூலம் முட்டாள்களும் புத்திசாலி ஆகிவிடுகின்றனர். பல கொள்கையுடைய கட்சிகளின்

களை எழுத்தில் பதிவு செய்து வெளியிடுவதற்கு ஒருபோதும் அவன் கவலை கொண்டதே இல்லை'' என்றார்.

டி. டி. கோசாம்பியும் ''சமஸ்கிருத மயமாக்கிய ஆரியமய திருத்தந்தான் பகவத் கீதை அது பிராமணியத்தின் சாறு என வாயிற்று'' என்று கடுமையாக விமர்சிக்கின்றார்.

வரலாற்றில் ஆரியர் சிந்து வெளிக்கு வந்த முன்னூறு ஆண்டு களுக்குப் பிறகே வழிப்பறி, கொள்ளை, கொலை, முரண்பாடு—ருக்வேதம் ஆகியனவெல்லாம். அதுஇந்திரனுக்கு, கஞ்சா, சோம பானம் ஊற்றிக்கொடுத்து, திராவிடர்களைப்பழித்தும், அவர்கள் செல்வங்களை அபகரிக்கவும் பாடப்பட்டது. ஆனால் திராவிட ரிடமிருந்து அறிந்த யோகம், பௌதிகம்—ஆரிய உபநிடதங்களில் தழுவிக்கொள்ளப் பட்டபோது, சமஸ்கிருத மயமாக்கி அதில் ஒரு சார்பு முனைப்பில் வேண்டாத...ஒவ்வாத பொருள் கூறப் பட்டது.

நேரடியாக எதிர்த்த யுத்தம்,—பிற்பட்ட காலத்தில் அதன் கொள்கைகளையும் தழுவிய ஆரிய நியாயம் என உரைக்கப் பட்டது. ஆரிய புரோகிதர்களுக்குக் கிடைத்த மக்கள் சமூகத் தற்காப்பு மடங்கள், சிந்தனையைத் தூண்டும் சமதர்மம் பகுத்து அறிவதற்கல்ல. இவற்றின் உண்மைத் தத்துவம்—பகை, பழி, வஞ்சம்—இவற்றில் மறைக்கப்பட்டு, போட்டி, பொறாமை, நியாயப்படுத்தப்பட்டு; அறியாத மக்கள் தலையில்—அதிகார அரசின் இரும்புப் பிடியில் ஒப்புக்கொள்ளவும் வைக்கப்பட்டன.

ஆரியர்களுக்கு மொழி இலக்கணமில்லை. அது அவர் களுக்குத் தேவையும் இல்லை—தங்கள் ஆக்ரமிப்பினை பரவலாக மக்கள் அறிந்த கலப்பட மொழியில்—அதுவும் தாங்கள் திராவிடரிடம் கற்றுக் கொண்ட மொழியிலேயே சொல்லிவிட வேண்டுமென்ற எச்சரிக்கையே அவர்களின் தற்காப்புச் செயல் பாடுகளாகும்.

சிந்து முதல் குமரிவரை அனைத்து மொழிகளுமே சமஸ் கிருதத்திலிருந்தே வந்தவை என நம்பவைத்தனர். பழங்குடி மக்களின் மரபு, முறை, நிகழ்வு, உறவு என தொடர்புக்குரிய அவரவர் வாழ்வுத் தொகுப்பு, அறவுரை இலக்கியங்களும் கூட மறைக்கப்பட்டு ஆரியப் புராணக் கதைகளும் ஆரியக் கதைகளும், பாடல்களுமே அதற்குப்பதிலாகப் படிப்பினையில் கூட திணிக்கப்பட்டன.

அவ்வாறே தென்னிந்திய—தெலுங்கு, கன்னட மொழி களையும் சிதைத்தனர். மணிப்பிரவாள நடை என்பதன்

மூலமாக மலையாளத் தமிழ்மொழி சமஸ்கிருத மயமென்ற பெயரில் சிவனிய—மாலியக் கட்டுமானங்கள்—பூதிரி, நாயர்களால் கொடிகட்டிப் பறந்தன.

தமிழ்வழி காரைக்காலம்மையார்—திருமூலர், பிறகு வந்த ஆழ்வார்கள். நாயன்மார்கள், சேக்கிழார் தொகுத்த குழந்தைக் கறி சமைத்த சிறுத்தொண்டர்கள் எல்லாம், ஆழ்வார் பஜ கோவிந்தம் எல்லாம் சமஸ்கிருத மயமாக்கப்பட்ட கலப்பட ஆராதனைக் குழுவினங்களே.

வேதம் என்றால் என்ன? அதன் பொருள் என்ன? என்றே மற்றவருக்குத் தெரியாமல்—தெரிந்து கொண்டால் காதில் ஈயத்தைக் காச்சிஊற்றிவிடுகிறார்களே—ஏதோ சொன்னதைத் திரும்பச் சொல்லுதல் என—அவர்களுக்குள்ளேயும் நான் பெரியவனா? நீ பெரியவனா? உன் சாமி பெரிதா? என் சாமி பெரிதா? என—நாற்றமெடுத்த ஆரியமயச் சூத்திர பிராமணர் சண்டைகளில்—சிலை உடைப்பும்—நூல் எரிப்பும்—ஏடுகளைத் தண்ணீரில் விடுப்பும்—கழுவேற்றமும் எனப் பல படுகுழிகளில் அழுகிய பிணங்களும், சமண, பௌத்த சிவனிய, மாலிய சிலைகள் புதைப்பு—கண்டுபிடிப்பு எனத் தொடர்ந்த சமஸ்கிருதம்ஆக்கப்பட்ட ஆரிய சிந்தனைகள், பலரைப் பலவகைகளில் அடிமை கொண்டு வினா எழுப்பியவரை வேல் கொண்டு தாக்கியும்; அவரவர் விரல்களாலேயே அவரவர் கண்களைக் குத்திக் கொள்ள வைத்தன. எஞ்சி இருந்த அருந்தமிழ் நூல்களுக்கும் அப்போது உரை எழுதியவர்களோ—அதற்கு ஆரிய வேதப் பொருளும்—புராணக்கதை எடுத்துக்காட்டும்—தத்துவ விளக்கங்களுக்கு மனுதர்மப் பரமபதம் கலந்த பதஞ்சலி விளக்கமாக எழுதித் திணித்து எடுபிடிகளாகிவிட்டனர்.

இங்கே தான் நல்ல தமிழ் புழக்கடையில் தள்ளப்பட்டு பார்ப்பனக் கொச்சைத் தமிழ்—கலப்படச் சொற்களாக உ. வே.— சாமிநாதய்யர் சொன்ன; போசனம், உபன்யாசம் என்பன போன்றவெல்லாம் அவர்களுக்குள் —அவர்களாலேயே அதாவது மேலே கண்ட சொல்லுக்கு உணவு என்றால் போசனம்—உபந்யாசம் என்றால் சொற்பொழிவு என்று விளக்கப்பட்டன.

ஆனால் இதையே நாம் உணவு, சொற்பொழிவு என்று சொன்னால்; இன்றும் மேடைகளில் — பட்டுக்கோட்டை வெங்கட்ராமன்—காஞ்சி சங்கரமட அங்கப்பிரதிஷ்டம்—சொல்வது போல நம்மை மொழி வெறியர்கள் என்றனர்.

சமஸ்கிருத மயமாக்கப்பட்ட ஆரிய மாயையில்தான் சங்க நூல்களில் பல புகுத்தியும்; திருக்குறள்,தொல்காப்பியம் போன்றவற்றிற்கு உரை எழுதியவர்களும்—பந்திப் பெருமையில்—தொண்டிக் குதிரைகளாக நின்றாலும் பரவாயில்லை எனக் கனைக்கின்றனர்.

தற்பொழுதைய இந்தியாவில் உள்ள—அரசு, நிர்வாகம், தலைமைப் பதவி, தொழில்—அதாவது மாநிலவாரியாக உள்ள இந்தி வெறியர்கள் யார். இந்தி மொழியை ஆட்சி மொழியாகத் திணிக்க நேரடியாகவும், ரகசியமாகவும் அலுவல் துறை, மக்கள் தொடர்புத்துறை என்பன வாயிலாக சிறுகச் சிறுகப் புகுத்திக் கொண்டிருப்பவர்கள் யார்?

தமிழ்மொழி பேசும் பெரும்பான்மை மக்களை இதுவரை மேற்கூறிவந்த சமஸ்கிருத மயமாக்கத்தினால் சமூக அந்தஸ்து என்று தனித்து நாமம் போட்டுக்கொண்டு நம்மை ஏமாற்றி நிற்பவர்கள் அந்த வர்ண தர்ம ஆரியப் பார்ப்பனர்களே ஆகும்.

தமிழகத்தின் தாய்மொழி தமிழ். அதைத் தமிழக அரசு மொழியாக்கவிடாமல் பல்லாண்டுகளாக முட்டுக்கட்டை போட்டுக்கொண்டு வருபவர்கள் யார்?

மத்திய ஆளுகையின் இந்திமொழி வெறியர்களே! அவர்கள் யார்? ஆரிய சமஸ்கிருத மயமாக்கப்படடவர்கள்—இன்றைய கர் சேவாக்காரர்களேயாகும்!

மாநிலச் சட்டமும், ஆளும் குழுவினர் தீர்மானமும் மத்திய ஒப்புதலில் அல்லவா நிறைவேற்றப்பட வேண்டும். அங்கேயும் அதற்குத் தடையாக நிற்பவர்கள் யார்?—சிந்தியுங்கள்!

தமிழ் அல்லாத இந்திய பிறமாநில மொழிகள் அனைத்துமே சமஸ்கிருத மயமாக்கப்பட்டவை. அங்கே இந்தியைத் திணித்தாலும்—திணிக்காவிட்டாலும் அவ்வழி முன்னோடி சமஸ்கிருத சமுதாயக் கருத்துக்களை ஆங்காங்கு முழுமையாக அவர்களால் அவை கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன.

தமிழகத்தில் மட்டும் ஆரம்ப முதல் எதிர்ப்பும், மொழிப் போராட்டங்களும், உயிர்மூச்சாகத் தொடர்ந்து நடந்து வந்திருக்கின்றன — ஏன்? உலகெல்லாம் பரவிய முதல் மொழியும்—கிளை மொழிகளும் பிறந்த இடம் தமிழகம்.

இந்தி மொழி வெறியர்களின் அந்தத் திணிப்பிற்கு தமிழகத்தில் எப்போதும் கடுமையான எதிர்ப்பே இருந்து வந்திருக்கிறது.

காங்கிரஸ் ஆட்சியில் தமிழ் மட்டுமே ஆட்சிமொழி என்ற சட்டம் 1956-இல் நிறைவேற்றப்பட்டது. 1968 வரையில் அது நடைமுறைப்படுத்தப்படாதது கண்டு அந்த நாள் தி. மு. க. ஆட்சியில்;

''இன்னும் ஐந்தே ஆண்டுகளுக்குள் அனைத்து எற்பாடுகளையும் செய்து 1973—க்குள் தமிழை ஆட்சி மொழியாக்கி விட வேண்டும்'' என்று 1968-இல் தமிழகச் சட்டப் பேரவையில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதன் பிறகு இன்று, 26 ஆண்டுகள் ஆகிவிட்டனவே என்னவாயிற்று அந்தத் தீர்மானம்?

அவரவரும் பதவிக்கு வந்ததும் தற்காப்புக்காக சில சுறுசுறுப்புச் சமாதானம் சொல்லி—கண் துடைப்புப் பேச்சுக்களில் காலங்கடத்திவிட்டனர். பூனைக்கு யார் மணி கட்டுவது?

தமிழன்—தன்னைத் தமிழன் என்று சொல்லிக்கொள்ள முடியவில்லை. தமிழ் நாட்டிலே—தமிழ் ஆட்சி மொழியாக இல்லை — ஆட்சிமொழியாக்கும் முயற்சியும் மேற்கொள்ளவில்லை. ஆனால் புறநானூற்றையும், அகநானூற்றையும் திரும்பத்திரும்பப் பேசி கைத்தறி ஆடைகள் போற்றப்படும் அற்ப நிறைவுகளில், முழுமையானவற்றை யார் நினைக்கிறார்கள்? அப்படியே நினைத்தாலும் என்ன செய்யமுடியும்? சமஸ்கிருத மயமாக்கப்பட்ட அந்தக் கர்சேவா சூத்திரத் தமிழர்கள் சிந்தித்து—திருந்தும் வரை தமிழ் ஆட்சி மொழியாக வரவே முடியாது.

இவற்றையெல்லாம் முன் எச்சரிக்கையாக தெளிவாகத் தெளிந்து உறுதிப்படுத்தியவராக—சூத்திரத் தமிழர்களை காலில் போட்டு மிதித்துக் கொண்டவராக, இந்தியைத் தமிழ்நாட்டில் திணிக்கும் எக்களிப்பில்—அந்த நாளை எதிர்பார்த்தவர்களாக '**கோல்வால்கர்**' என்பவர் ''**சிந்தனைக் கொத்து**'' என்ற தமது நூலில்;

> ''ஆட்சி மொழிப் பிரச்சனைக்கான ஒரு தீர்வு என்கின்ற வகையில்—இந்த இடத்தை சமஸ்கிருதம் எடுத்துக் கொள்கின்ற காலம் வரையிலும் வசதி என்கின்ற காரணத்தின் அடிப்படையில் இந்திக்கு நாம் முன்னுரிமை அளிக்க வேண்டித்தாக இருக்கிறது'' என்று குறிப்பிட்டுள்ளார்.

இந்தக் கோல்வால்க்கர் என்பவர் ஏற்றத்தாழ்வை நியாயப் படுத்த சாதி வருணம் வேண்டும் என்பவர். வரலாற்றைத் திரித்து எழுதுவதிலும், — அப்பட்டமான பொய்களை

சோடித்துப் பிராமண தர்மம் காப்பவர் என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

அவர் வழி மூலாம் படை வி.டி. ராசசேகர் என்பவர்கூட "இந்துத்துவம்" என்ற தமது நூலில்:

"பிறஎல்லா பாரதீய மொழிகளைப்போல சமஸ்கிருதத்தி லிருந்து தோன்றியதும், அறிவியல் மற்றும் தொழில் நுட்பம் போன்ற அனைத்தும் அறிவுத்துறைகளாலும், தனது மேலுமான வளர்ச்சிக்காக சமஸ்கிருதத்திடமிருந்து பராமரிப்பைப் பெற்று வருவதுமான இந்தியின் அந்த வடிவத்தை நாம் விரும்ப வேண்டியவர்களாக இருக்கின்றோம்" என்று இந்தியின் அடிப்படை உருவம் சமஸ்கிருத மயம் என்று அவர்கூடச் சொல்கிறார்.

இப்படிப்பட்ட சாதிவர்ணன சனாதன முன்னுரிமைகொண்டு தைரியமாக மற்ற மொழியினரை அடிமுட்டாள்களாக்கும் மேற்கண்ட விளக்கமுடைய பார்ப்பன சமஸ்கிரு ஹிந்தி நமக்குக் கட்டாயம் தேவையா? என்பதைச் சிந்திக்கவும்--தேவை இல்லை என்ற தெளிவுடையவர்களே; தந்தை பெரியார், அறிஞர் அண்ணா கலைஞர், நாவலர், பேராசிரியர் ஆகியோர். சாதிவர்ணப் பார்ப்பனத் தரகர்கள் காலத்திற்கேற்றவாறு தங்கள் முன் னுரிமைகளை விமர்சித்து அதைக் காத்து அவற்றின் வாயிலாக சுகபோக வாழ்வைத் தக்க வைத்துக்கொள்ள மகாவீரரையும், ஏன்? புத்தரையுமே மகாவிஷ்ணு அவதாரமென்று கூறியது போல வள்ளுவரையும் அவர்கள் விட்டு வைக்காது அவர் கதையிலும் தங்கள் நிறத்தைப் பூசி வைத்தனர்.

சமஸ்கிருத மயத்தில் கலப்படமான திராவிடப் பாரம்பரி யத்தை மனுதர்ம சாதிவாரி அடிப்படையில் தழுவியவர்போல நமது தலைமேல் ஏறி உட்கார்ந்து விட்டனர். பார்ப்பன சம்பிரதாயச் சடங்குகளை தமது பூர்வமான்யம் என்று நம்பி, இல்லாத மொழி யொன்றினை விமர்சித்த முடநாற்ற மாதவாதப் பாதுகாப்பு மொழிகளில் ஏதோ பெரிய கருத்துக்கள் இருப்பதாக அவர்கள் முட்டாள்களாக இருப்பது போதாமல் நம்மையும் அதற்கு உடன்பட வைக்கின்றனர். விழிப்படைய சில பகுத்தறிவுக் கோட்பாடு, மொழியாய்வு முன்னேற்றம், கூட்டம், குழு என்று தமிழின் தொன்மை கூறுபவர்களை—தெய்வ சிந்தனை செய்பவர்கள், நாத்திகர்கள். வெறியர்கள் என்று நாத்தழுக்க நம்மையே இழித்துரைக்கின்றனர். இவர்கள் திருந்தா விட்டால் தீய்ந்து போவார்கள் என்பது எதிர்காலக் கணிப்பு.



6

# வள்ளுவர் என்ற பெயரில் வழக்கில் புகுந்தவர்கள்

திருவள்ளுவர் ஒரு பார்ப்பனன் மகன் என்று திணிப்பதற்குச் செய்த—நம்ப வைக்க முயன்ற ஓர் ஆரியக் கட்டுக்கதையை இங்கே அறிவோம்.

பிரம்மா—நவப்பிரம்ம கோத்திர வழியில் வந்த **காசியப்ப முனிவருக்கு** தேவலோக நடனமாது **ஊர்வசி** படுக்கை விரித்ததில் **வசிட்டர்** பிறக்கிறார். பாற்கடலில் கடைந்தெடுத்து வந்த அமுதவர்சிணி **அகல்யா**, கௌதமருக்குப் படுக்கை விரித்து **அருந்ததி** பிறக்கிறாள். இடைப்பட்டு அந்த ரிசிப்பிண்ட நாணற்புற் குடிசையில் **இந்திரன்** புகுந்ததில் **அகல்யா கௌதமரால் கல்லாக்கப்பட்டாள்**. அதற்கு முன் **பதங்கன்** என்ற **பறமுனி வளர்ப்பில் அருந்ததி.** தன் மகனென்று தெரியாது கௌதமரே, வசிட்டருக்கு, தீண்டப்படாத பறப் பதங்க மகரிசி வளர்க்கும் அருந்ததியை திருமணம் செய்து வைக்கிறார். அது பெரிய கதை! இங்கே வேண்டாம்.

> தெலுங்கு மொழியில் வெளிவந்த அந்தப் புராணக் கதை சினிமாப்படத்தை (கருப்பு வெள்ளை) 20 வருடங்களுக்கு முன் நானே பாடல், வசனம் எழுதி அகல்யா—அருந்ததி என மொழி மாற்றுப் பாடமாக (டப்பிங்)த் தயாரித்து- வியாபாரமாகாமல் என்னை அந்தப் படம் நட்டமடைய வைத்துவிட்டது.

அருந்ததி விரித்த படுக்கையில் வசிட்டருக்கு, **சத்தியர்** பிறந்தார், அந்த ஐயருக்கு, **புங்கனூர்புலச்சி** விரித்தபடுக்கையில் **பராசரர் பிறக்கிறார்.**

சூத்திர சாதிப் புத்தனையும் அசோகனையும் அவசியமான துதிபாடும் பார்ப்பனத் தரகர்கள், பஞ்சமசாதி புங்கனூர் புலைச்சி மகன்தான் பராசமுனிவர். இவர் மகன்தான் மகா பாரதம் எழுதியவரெனச் சொல்லப்படும் வியாசர்—இவர்கள் வழியில் சூத்திரத் திருவள்ளுவரை சாதி நிறங் காட்டிப் பிரித்து —பூச்சும் பூணூலும் கொடுத்துத் தழுவிக் கொள்கிறார்கள். இது மனிதன் உண்டாக்கிய சாதிப் பாகுபாடு என இவை பற்றி கேரளப் பெரியார் நாராயண குரு அவர்கள்; "ஒரே கருப்பை— ஒரே உருவம்! வேறுபாடு எதுவும் இல்லையே. ஒரே இனத்தினுள் ஆணும் பெண்ணும் இணைந்தால், பிள்ளை பிறப்பதில்லையா? இந்தக் கண்ணோட்டத்துடன் பார்த்தால் மனித குலம் அனைத்துமே ஒரே சாதியைத்தான் சேர்ந்தது!" என்று புரட்சிக் கவிதை பாடினார். இதை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். அடுத்து,

மச்சகந்தி என்பவள் விரித்த படுக்கையில் பராசரருக்கு வியாசர் பிறந்தார், இந்த வசிட்டர், சத்தியர், பராசரர், வியாசர் என்ற நால்வரும் தான் வேதத்தை உண்டு பண்ணியவர்கள் என்று கதை விட்டிருக்கிறார்கள்.

ஆரம்ப ருக்வேதம், உருக்கள் என்ற செய்யுள் அத்தியாயங்களில் கடைசிப்பகுதியிலே பிற்பட்டுத் தொகுக்கப்பட்டவற்றில் வசிட்டர் பெயர் வருகிறது. சத்தியர் பராசரர், வியாசர் பெயரெல்லாமே மகாபாரதப் புரட்டுகளில் வருகின்றன. வேதவிதிப்படி என்று சொல்லி பிரம்மாவுடைய பாகத்தில் அவர் மணந்து கொண்ட கும்பமகளாக கலைமகள் பிறந்தாள். கும்பமுனி அகத்தியர் பிறந்தார். சமுத்திரகன்னி (லோபமுத்திரை) அகத்தியரை மணந்து பெருஞ்சாகரன் என்பவனைப் பெற்றாள். அந்தப் பெருஞ்சாகரனுக்குப் படுக்கை விரித்த திருவாரூர் புலைச்சிக்கு பகவன் பிறக்கிறார், அருள்மங்கை என்ற பார்ப்பனப் பெண், பிரம்ம தவமுனி என்பவனுக்குப் படுக்கை விரித்து ஒரு ஆதியைப் பெற்றாள்.

அவள் உறையூர்ப் பெரும்பறையன் எடுத்துவளர்த்து மேலூர் அகரம் சத்திரம் நீதிஐயன் மகளாக அவள் வளர்ந்து திருவாரூர் புலைச்சிக்குப் பிறந்த பகவானை மணக்கிறாள். இந்த ஆதி என்பவள் ஊருக்கு ஊர், தெருவுக்குத் தெருவாக பகவன் என்பவனுக்குப் படுக்கை விரித்து, ஔவை, உப்பை, அதிகமான், உருவை, கபிலர், வள்ளி, திருவள்ளுவர் ஆகிய ஏழு பேர்களைப் பெற்று அவர்களை அங்கங்கே அனாதைகளாகப் போட்டுவிட்டுப் போய்விட்டாள். இப்போதாவது அரசாங்கப் பாதுகாப்பு

குழந்தை எடுப்பு, வளர்ப்பு, என பல தொட்டில்கள் ஏற்பட்டு இருக்கின்றன. அப்போது இதெல்லாம் கிடையாது. ஆகவே "குப்பையில் குழந்தைகள்,"

இது எவ்வளவு கேவலமான, முழங்காலுக்கும் மொட்டைத் தலைக்கும் முடிச்சுப் போடுவது போன்ற பொருந்தாத் திணிப்பு என்று சிந்தியுங்கள்.

பகவனுக்கும் ஆதிக்கும் பிறந்ததாகச் சொல்லப்பட்ட மேற் கண்ட ஏழு பெயர்களின் காலம் வெவ்வேறு என்பது தெளிவாக அறியப்பட்டிருக்கிறது. எந்தத் தரித்திர வாசிகளோ பார்ப்பா னையும் சூத்திரனையும் முடிச்சுப் போட்டு ஒரு வள்ளுவர் பிறப் பிற்கு பரம்பரை காசியப்ப முனிவர் வழியில் பல ஐயர்களும் புலச்சியர்களும் திணிக்கப்பட்டிருக்கிறார்கள்.

தன் தாய் தந்தையர் ஆதிபகவன் என்றறிந்தோ என்னவோ, முதற்குறளை திருக்குறளில்; நன்றி வணக்கமாக அவர்களைக் கொண்டே இந்த "அகரமுதல எழுத்தெல்லாம்..." எனச் சொன்னாரோ என்னவோ? அப்படியானால் "அகரமுல எழுத்தெல்லாம் அதிபகவன் முதற்றே உலகு" என்பதில் திருவள்ளுவர் தமிழ் 'அகர' எழுத்திற்கே திருவாரூர் புலைச்சி மகன் பகவானையும் உறையூர் பெரும்பறையன் வளர்த்த ஆதியை யும் முதன்மை என்பாரா?

திருவள்ளுவருக்குப் பிறகுதான் தமிழ் மொழியே பிறந்ததா? என்ன? இது அப்பட்டமான திணிப்பு. மேற்கண்ட அந்தக் குறளைச் சொல்லி வந்த கதையை நம்பி அதை உறுதிப்படுத்த இப்படி ஒரு குறளை எழுதி திருக்குறளில் முதற்குறள் என்று சமயவாதிகள் திணித்தார்களோ—அல்லது திருவள்ளுவர்ஆதியை யும் பகவானையும்—பார்வதியையும் சிவனையும் மனத்தில் கொண்டு எழுதினாரோ என்னவோ? எனக் குழப்பிக் கொள்வ தற்கு இடைப்பட்டவர்கள் செய்த சூழ்ச்சியோ என்னவோ(?) ஆனாலும் இப்படியொரு கருத்தில் வள்ளுவர் எழுதி இருக்க முடியாது.

மொத்த நூல்—குறள் கருத்துக்களை ஆராய்வோ மாயின்; பொதுமறை. மனித மேம்பாட்டுக் கருத்துக் களையே வெகுவாகக் கூறியிருக்கிறார். ஓலைச்சுவடி களில்—ஆரம்பத் தொகுப்புக்களில் மேற்கண்ட இந்தக் குழப்பத்திற்குரிய குறள் திணிக்கப்பட்டிருக்க வேண்டும். அப்படித்தான் இருக்க வேண்டும், அதுதான் உண்மை.

ஆனாலும் முன்பின் முரணாக திருவள்ளுவரைப் புலையர் கீழ்சாதிமகன் என்றும் கூறிய ஐதிகப் பார்ப்பனர்கள், திணித்துப் புகுத்திய மற்றொரு கட்டுக் கதையாக; அறம் என்றால் மனு தர்மம் என்றே பிழையாகக் கூறிய ஆரியப் பரிமேல் அழகரின் திருக்குறள் உரைத்தொகுப்பின் முன்னுரையில் இதே திருவள்ளுவரை சூத்திரச் சேனியர், நெசவுத் தொழிலாளி, தெய்வபக்தி யுள்ளவர் என்று குறிப்பிடுகின்றனர். ஆனால் அவர் பாடற்குறள் வழி அறிவோமாயின் திருவள்ளுவரோ தெய்வ நம்பிக்கையற்றவர் எனத் தெரிகிறது. எடுத்துக்காட்டாக;

''கடவுள் என்று ஒன்று இருக்குமானால் அனைத்து மக்களும் ஏற்றதாழ்வின்றி சமமாக இருக்க வேண்டும். இல்லையானால் அது ஒழியவேண்டுமெனத் தந்தை பெரியார் கூறிய பொருளுக்கு ஒப்ப; வள்ளுவரும் 2000 வருடத்திற்கு முன்னரே ''இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் பறந்து கெடுக உலகியற்றியான்'' என்றார்.

ஒருவன் மற்றவனிடம் பிச்சை எடுத்துத்தான் உயிர் பிழைக்க வேண்டுமென்றால்—அந்த நிலைக்குக் காரணமான அந்தக் கடவுள் ஒழிக்கப்பட வேண்டும்'' என்று கூறுகிறார்,

ஆனால் புராணக் கதைகளில் அடிக்கடி பபூன்களாக வந்து போகும் பார்பனத் தேவர்களுக்கு வேறு வேலையே கிடையாது. அவர்கள் வீணாகிப் போனார்கள். அடிக்கடி ஆங்காங்கு வாயை வைப்பார்கள்.

ஒரு சமயம் சிவன் ஊர்த்துவ தாண்டவம் (தலைகீழ் நாட்டியம்) ஆடுகிறார். உடனே தேவர்கள் கூடிவந்து ''ஐய்யய்யோ என்னவாயிற்று? உமாதேவி வெட்கப்படுவாளே!'' எனப் பதைபதைத்து, அதற்குக் காரணம் சிவனிடம் கேட்ட போது அவர்; ''மயிலாப்பூரில் இருக்கும் திருவள்ளவரிடம் போய்க்கேளுங்கள். அதற்கு விளக்கம் அவர் சொல்லுவார்'' எனக்கூறி தேவர்களை அனுப்பிவிட்டார்.

உடனே தேவர்கள் (சென்னை மயிலாப்பூர்) மயிலை வந்து திருவள்ளுவரிடம் கேட்கின்றனர். அப்போது திருவள்ளுவர் பாடியதாக ஒரு வெண்பா.

''பூவில் அயனும் புரந்தரனும் விண்ணுலகைத்
தாவி அளந்தோனும் தாமிருக்க—நாவில்
இழைநக்கி நூல்நெருடும் ஏழைஅறி வேனோ
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து''!

எனப்பாடிய மேலேகண்ட வெண்பாவின் மூன்றாவது அடி தொடர்ந்து, முடிவாக வரும் ஏழு சீர்வரி கொண்டவற்றிலும் பாட பேதமாக மாற்று வரிகளும் சொல்லப்பட்டிருக்கின்றன.

அதாவது அது; "...............பாவி
இழையோட்டி ஆடைநெய்யும் ஏழையறி வேனோ
குழையோட்டும் பிஞ்ஞகன்றன் கூத்து"

என்பனவாம்.

திருவள்ளுவரால் பாடப்பட்டதாகச் சொல்லும் **"பூவில் அயனும்"** என்ற பாடலின் கருத்தாக :

"பூவில் அயன் என்றால் நான்முகனான பிரம்மாவும், புரந்தரன் என்றால் தேவர்களின் தலைவனான இந்திரனும், பூவுலகை அல்லது விண்ணுலகைத் தாவி அளந்தவன் யார்? மாயாவதாரன் என்ற மகாவிஷ்ணுவும் இருக்கும் போது—சிவனாண்டிக் கூத்து ரகசியம் பற்றி என்னைக் கேட்கிறீர்களே? நான் யார்? மிகச் சாதாரணமான, ஆடை நெய்பவன் அதாவது, நாவில் இழைநக்கி என்றால், பருத்தி இலவம் திரித்த நூலை நக்கி உமிழ் நீரில் தோய்த்து—அந்த நூலை பஞ்சில்உருட்டும்—அதாவது-- நூல் நெருடும்—அப்படிப்பட்ட தொழில்— ஏழையாகிய நான் அறிவேனோ?— "குழை நக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து"—கீழே விழுந்த காதணியை நக்கி எடுக்கக் கூடிய ஊர்த்துவ வாசியான சிவனின் கூத்து"—உங்களுக்குத் தெரியாத உண்மையா? எனக்குத் தெரியப் போகிறது!" என வள்ளுவர் சொன்னதாகப் பொருள்.

இதனால் அறியப்படுவது: வள்ளுவரை புலையர், கீழ்சாதி ஆடை நெய்யும் சேனியர் என்று சொல்வதோடு—ராமேசுவரத்திற்குத் தீர்த்தமாடப் போன பகவன் என்ற கலப்படப் பார்ப்பான் ஒருவனுக்குப் பிறந்தவன் என்னும் அருவருப்பான கதைகளையும் கட்டி விட்டிருக்கிறார்கள். தாழ்மைப் படுத்திட முயன்றிருக்கிறார்கள்.



# 7

# தமிழ் என்ற பெயரில் சாதி வர்ணத்தரகர்கள்

முதுமையான தமிழ்மொழிவரலாற்றில்; அதன் அறம் பொருள் இன்பத்தில், கடைச் சங்கத்திற்கு முற்பகுதியில் புகுந்தாலும், ஆரிய் வடநூலார் அவர்கள் திணிப்புக் கருத்து மத ஐதிகங்களில் முதன்மை பெற முனைந்த மொழிப் போர் செறுகலில் கூட அவர்கள் பெரும்பான்மை பெற முடியாது வழக்கொழிந்தவராயினர்.

தொல்காப்பியத்திற்கு முன்னரே மக்களின் நடைமுறை வாழ்வியலை ஒழுங்கு படுத்தவும், தமிழ்ச் சொற்களைப் பெருக்கவும், அதற்கு இலக்கண வரம்பு கட்டவும், கங்கணம் கட்டிக் கொண்ட பெரும் புலவர்களின் வழி நூலாகத் தொல்காப்பியம் எனத் தலைப்பிட்ட முதல் நூலாக—அரிய தொகுப்பாகக் நமக்குத்கிடைத்திருப்பது தமிழரின்பெருமையை உணர்ந்துவதும் உயர்வதுமாகும்.

கபாட புரத்து (அலைவாய்) தென் மதுரையில் ஈவணவம் பாடியதாகத் திணிக்கப்பட்ட; பரிபாடல், அதற்கு வடக்கான (இன்றைய) வடமதுரையைப் பாடியதாகவும் கூறுவர். வட நாட்டில் மற்றுமொரு மதுரையைக் கூறுவதுப் குழப்பவாதிகளால் ஏற்படுத்தப்பட்ட திணிப்பேயாகும். அன்றையத் தொல்காப்பியத்தோடு தோன்றிய பல இலக்கண நூல்கள் யாவும் வழக்கொழிந்தன. ஆயினும் அவ்வாறே துணை நூல்களும் எழுந்தன.

கடல் கொண்ட வடமதுரைத் தமிழ்ச் சங்கப் பிற்பகுதியில் புகுந்த மத வழிக் காவியங்களால் தொன்மையான அகத்துறைப் பாடல்கள், பரிபாடல் போன்று இசைப்படுத்திக் கூறிய நாடோடிப் பாடல்களாக அவை முடங்கியதோடல்லாமல் தொகுக்கப்பட்ட குறுங் காவியங்களாயின.

அவைகளும் மரபு வழி பின்பற்றியமையால் தமிழிசைப் பாக்களாகத் தோன்றி இருந்தமையால், அவற்றைப் பயின்று பொருள் பிரித்த பல சமயத்தினர் உரைநடையில் தாங்கள் வழிப் பட்டவைகளைத் திணித்து அதை நியாயப்படுத்தி விட்டனர்.

வடமொழி இலக்கணங்களும், அவர்களின் வாழ்வியல் இலக் கியங்களும் நமது அறம், பொருள் இன்பத்திலிருந்து பெயர்க்கப் பட்டவைகள். மிகத் தொன்மையான தமிழ் வாழ்வியல் உலகில் வெவ்வேறு மொழிகளாகவும், நாகரீகங்களாகவும் மாறி பரிமளித்துக் கொண்டிருக்கின்றன. நமது கலைகளிலும், ஆக்க முயற்சிகளிலும் தெய்வ வழி புகுந்ததால் ஆராயும் நுணுக்கங்கள் தடைப்பட்டு நின்று விட்டன.

எழுத்துக்களாக; ஓலைச் சுவடிகளில், கல்வெட்டுகளில் செப்பேடுகளில் இசையோடு வழங்கிய பாணர்களின் வாய்ப் பாட்டுகளில், செழித்திருந்த இலக்கணக் காவியத் தமிழ், நிகண்டுகளைஇயற்றி பொருள் பிரித்த பொழுதுதான்மொழியின் அழகும்—ஆழமும் அதன் பண்பட்ட சொற்களும் வெளிப்பட்டன.

அவற்றை உரைநடைப் படுத்திய போது வரலாற்றுக் கணிப்பை உறுதிப் படுத்த முடியாமல் முன்பின் தோன்றிய இடைச் செருகல்கள் தலை கவிழச் செய்து விட்டன.

பிற்பட்ட புலவர்கள் பழைய அகவற்பா, ஆசிரியப்பாக் களுக்கு இலக்கணம் பிரித்ததோடல்லாமல் முழுமையாக செய்யுள்களை, முறைப் படுத்த புது யாப்புகளையும் ஆராய்ந்து வெளியிட்டனர்.

அவற்றின் சிறப்புகளே குறட்பா, வெண்பா, கலிப்பா, அறு சீர், எண்சீர் என அவற்றைத் தொடர்ந்த விருத்தங்கள் பக்தி வழிப் பாசுரங்களாக வளர்ந்தன.

சமண, பௌத்தத்தைத் தழுவிய சீவகசிந்தாமணி, வளையா பதி, குண்டலகேசி முதல் சிலப்பதிகாரம், மணிமேகலை வரை அகத்துறைப் புலநெறிக் கருத்துக்களுக்கு தெய்வ மணம் நிறப்பப் பட்டன.

கடைச் சங்கம் என்ற பெயரில் ஏதோ ஒரு நக்கீரர் சைவ சமய 'ஆற்றுப்படை' பாட, பிறகு கம்பரும், நம்மாழ்வாரும் வைணவ ராமாயணமும், பிரபந்தமும் பாடினர்.

சமய வாதிகளுக்குத் தப்பி வந்த நீதி நூல் 'திருக்குறள்.' தொன்மைத் தமிழ் வாழ்வியல் அறத்தைக் கூறி தமிழனை நிமிர்ந்து நடக்கச் செய்தது.

முற்பட்ட ஐந்திணை பாடிய புலவர்களின் அகத்துறைப் பாக்களுக்குக் கூட, முன்னர் கூறியவாறு பிற்பட்ட பாரதம் பாடிய பெருந் தேவனார் 'இறை வணக்கம்' என்று பலவற்றை பாடிச் சிறப்பித்தமை அவர் கடைப் பிடித்த மதவழி ஆயத்த—வழிபாடு.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து நிலங்களும் ஐந்திணை அகத்துறை எனப்படும். அகப்பொருளைக் கூறுகின்ற புலவர்கள், கருப்பொருளின் காலத்திற்கேற்ப வனப்புகளையும் உரிப் பொருளின் புலநெறி ஆழத்தையும், பத்துப் பொழுதும் நிலங்களில்—என்ன—எவ்வப்போது—எப்படி மாற்றமடைகின்றன? அதனால் எந்தவித சிறப்பு, இழப்பு என்பதை விரிவாகக் கூறித் தங்களை வியத்தகு வண்மை மிக்கவர்கள்—தமிழ்ப் புலமையில்—என்பதை நிரூபித்திருக்கிறார்கள்.

தமிழ் மன்னர்கள், குமரியம் வழியாக பாண்டிய, சேர, சோழ பிற்பட்ட கலப்படத்திலும் முற்பட்ட வழி தழுவியே—பிறமொழி வளர்ப்பு, நாகரீகம், பக்தி என்ற வகையில் மாறுபட்டனர். அன்றிருந்த சங்கப் புலவர் அவையில் ஒருபடைப்பு பரிசீலித்து அரங்கேறும்போது, தணிக்கை உறுப்புப் புலவர்கள் கேள்வி எழுப்பினார்கள்.

உணர்த்தப்பட்ட இலக்கணம், பொருள் விளக்கத்தால் பின்னர் அது ஒப்புதல் பெற்று அரங்கேறியது. அவ்வாறே திருக்குறளும் அரங்கேற்றப்பட்டமை தமிழுலகம் அறிந்த உண்மை.

நக்கீரன்—தலைமை வகித்த தமிழ்ச் சங்கத்தில்—தனது வறுமை விலகுதல் பொருட்டு தருமி என்ற குருக்கள் மதுரை சொக்கநாதரை வேண்டி, ஒரு பாட்டு வாங்கி; அதைப் புலவர் அவையில் பாட முயன்றானாம். அதில் நக்கீரர் குறை கண்டாராம். உடனே சொக்கநாதர் தோன்றி; நான் எழுதிக் கொடுத்த பாடலில் குறையா? எனக் கோபித்து அந்தச் சொக்கநாதச் சிவபெருமானே,

''அங்கங் குளைய அரிவாளி நெய்பூசிப்
பங்கம் படஇரண்டு கால்பரப்பிச்—சங்கதனைக்
கீர்கீர் எனஅறுக்குங் கீரனோ என்கவியைப்
பாரிற் பழுதென் பவன்'' என்று.

(மேற்கண்ட வெண்பாவைப் பாடியவரால்; நக்கீரர் சங்குகளை அரிந்து ஒழுங்கு செய்யும் தொழிலாளியாக இருந்தார் என்று அறியப்படுகிறது) நெற்றிக் கண்ணைக் காட்டினாராம்.

ஆனாலும் ''குற்றம் குற்றமே'' என்றாராம் நக்கீரர்.

''சிவனே!—உனக்குக் குலம் கிடையாது. தொழில் கிடையாது'' என்றவாறு நக்கீரரோ பதிலுக்கு;

''சங்கறுப்ப தெங்கள் குலம் சங்கரனார்க் கேதுகுலம்?
பங்கமறச் சொன்னார் பழுதாமோ—சங்கை
அரிந்துண்டு வாழ்வோம் அரனே!—நின்போல்
இரந்துண்டு வாழ்வ திலை'' என்றார்.

''கடலில் சங்கெடுத்து அதை ஒழுங்கு செய்து அரிந்தெடுப்பது எங்கள் தொழில்! உன்னைப் போல பிச்சாண்டி அல்ல நான்'' என்று விளக்கி விட்டார்.

மேற்கண்ட கட்டுக் கதையின் வாயிலாக அறியப்படுவது என்ன? பார்ப்பனத் தருமிகள் (குறுந்தொகைப் பாட்டு) ஏதோ தமிழ்ப் புலவர்கள் எழுதிய பாட்டை திருடி—சிவனைக் கொண்டு பாடவும், பாட வைத்துஅதற்குப் பொன் முடிப்பு அரசவையில் பெறவேண்டியும் சூழ்ச்சியாகப் பல கதை கட்டியுள்ளனர்.

மதவர்ணம், சாதி வர்ணம் பூசிய கம்ப—ராமாயணமும், ஆழ்வார்கள் பிரபந்தமும், அவர்கள் கால மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவரவையில் அரங்கேற்ற—அன்றைக்கிருந்த தமிழ்ப் புலவர்கள் அனுமதி மறுத்து விட்டனர்.

அதன் பிறகே சிறிரங்கத்தில் வைணவப் பட்டர்களே அவற்றை அங்கு அரங்கேற்றித் தண்ணீர் தெளித்துக் கொண்டனர். ஆனாலும் திருக்குறள் மதுரைச்சங்கத்தில் அரங்கேற்றப்பட்டது. தொடர்ந்து அந்த தமிழ்ச் சங்கத்தை—அக்ரகார பரத்துவாசக் கோத்திர பார்ப்பனர்கள் அதை ஒழித்துக் கவிழ்ப்பதற்கும், பல மதவர்ணக் கட்டுக் கதைகளைப் புனைந்தனர்.

அறிஞர் கால்டுவெல் பாதிரியார் இவை பற்றிக் கூறுமிடத்து.

"மூன்றாம் தமிழ்ச் சங்கத்தில் வள்ளுவர் குறள்அரங்கேற்றப்பட்டதால், அவர் புலையர் கீழ்ச்சாதி என்ற காரணத்திற்காக அந்தச் சங்கத்தையே பார்ப்பனர் அழித்து விட்டார்கள்" என்றார். எப்படி அழித்தார்கள்? எதனால் அழித்தார்கள்? அதனால் திருக்குறளை மறைக்க முடிந்ததா? இல்லை! முடியவில்லை.

பன்னிரண்டு ஆழ்வார்களின் 400 பாடல்களில் (நாலயிரப் பிரபந்தம்,—நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்) சிறப்புக் குரியதாகச் சொல்லப் படும் குருகூர்ச் சடகோபன் என்ற நம்மாழ்வார் பாடற்தொகுப்புகளை—முறையே,—திருவிருத்தம்,—ருக்வேதம்: திருவாசிரியம்,—யசுர் வேதம்.—பெரிய திருவந்தாதி,—அதர்வண வேதம்—திருவாய் மொழி.—சாமவேதம் என்றுமிகைப் படுத்துவர். நம்மாழ்வார்களின் மேற்கண்ட விருத்தம், ஆசிரியப்பா—அந்தாதி வெண்பா, தரவுத்தாழிசை மொழி என்ற நான்கு பாடற் தொகுப்புப் பொருள்களில் கண்ணனின் லீலைகளே புகழப்பட்டு, "மாதவா! மதுசூதனா!" என திரும்பத் திரும்பப் பாடி இருக்கின்றனர்.

ருக், யசுர், அதர்வணம், சாமம் என்ற வட வேதத்திற்கும்—ஆழ்வார் பாட்ல்களுக்கும் எந்தவித ஒற்றுமைத் தொடர்பும் இல்லை.

உபநியாசம் கேட்கும் அடிமைகளை நம்பவைக்க மிகைப் படுத்திப் பொய்யை அவ்வாறு சொல்லிப் புகுத்தியிருக்கின்றனர். யசூர் வேதத்தில் ருக் வேத தேவேந்திரப் பாடலைச் சொல்லி,—பிறகு, கிருஷ்ணனையும் துணைக்கு அழைத்திருக்கின்றனர். வேதங்களில் என்ன இருக்கிறது என்பதை அவர்கள் அறிந்திருந்தாலும்—அறியாமையினால் அதைச் சுமந்து பிராமணீயத்தைக் காத்தல் பொருட்டு ஆழ்வார்கள் அவ்வாறு புலம்பி இருக்கின்றனர்.

"வடமொழி வேதமும், திவ்யப் பிரபந்தமாகிய தமிழ் வேதமும் பொருள் ஒற்றுமையால் ஒன்றே எனினும், வடமொழி வேதத்திற்குரியவர் அந்தணரோ. தமிழ் வேதத்திற்கு எல்லோருமே உரியர் என்ற சிறப்பு நோக்கி வடமொழி வேதத்திலும். தமிழ் வேதம் சிறப்புடையதாகும்" எனப் பிரபந்த உபயாசகர் பிதற்றுவர்.

பிரபந்தச் சிற்றுரையாளர் வடமொழி வேதம் அந்தணர்க்கு என்று சொன்னது சரி. அது பிராமணீயத் தற்காப்புச் சரக்கு,

மிகத் தெளிவாகவைணவ ராமன், தமிழர்களை அரக்கர் கூட்ட மெனப்பழித்து இன்றும் அதையே பாடும் அந்த நாமக்காரப் பிரபஞ்தம் எப்படித் தமிழ் வேதமாக இருக்க முடியும்? வடமொழி வேதத்திற்குரியவர் அந்தணர் என்று அவர்களே உண்மையைச் சொல்கிறார்கள். அது நூற்றுக்கு நூறு உண்மை. அவ்வழிப் பிரபந்தம் தென்னாட்டுத் தமிழர்களுக்கு உரிமையுடையது என்றால்—எதைக் கொண்டு அதை ஆமோதிப்பது? இந்த லட்சணத்தில் வடமொழி வேதத்திலும் தமிழ் வேதம் (பிரபந்தம்) சிறப்புடைய தென்று நம் தலையில் 'ஐஸ்'' வைக் கிறார்கள்.

தமிழர்களுடைய மறை; திருக்குறள். தீண்டாமை, சாதிவர்ணம் கொண்ட பிராமண நூல்கள் கண்டிப்பாக அந்தத் தகுதிக் குரியவையல்ல. பிரபந்தத் திரட்டில் வரும் ஆழ்வார்களில் ஒருவரான பார்ப்பனத் திருமங்கை யாழ்வார் என்பவர் பாடிய ஆண்டாள் திருப்பாவையில்:

''சினத்தினால் தென்னிலங்கைக்
கோமானைச் செற்ற
மனத்துக் கினியானைப் பாடவும்நீ
வாய் திறவாய்!''

—4000—பிரபந்தம்—489—90

''கூற்றின் வாய் வீழ்ந்த
கும்பகருணனும்
தோற்றம் உனக்கே
பெருந்துயில்தான் தந்தானோ!

—4000—பிரபந்தம்—487—88

இராமனால் கொல்லப்பட்ட இராவணனையும், கும்பகர்ண னையும் பாடற் பொருளாகக் கொண்ட ஆண்டாள் பாசுரமோ.

''செய்யாதன செய்யோம்
தீக்குறளைச் சென்றோதோம்'' என்றது—பந்தம்—480

எப்படி? உலகப் பொதுக் கருத்துள்ள குறளை—தீயகுறள் என்றார். அதைப் பாடமாட்டோம் என்றும் அழுத்தமாகக் குறிப் பிட்டார். இதைவிட நிற—இன வெறியுள்ள சான்று வேறென்ன தேவை?

தீந்தமிழ் என்ற உதட்டுறவுத் தலைப்பான ஆண்டாள் திருப் பாவையோ தீக்குறளை ஓதோம்''—என்ற நிறவேறி எதிர்ப்பினை வைகுந்தப் பதவிக்குப் போன பெரியவர் என்று சொல்லப்படும்

காஞ்சி மடாதிபதியே திருப்பாவை மகாநாட்டில் ஒருசமயம் அதை விமர்சித்த போது, தந்தை பெரியாரும், அறிஞர் அண்ணாவும் கடுமையாக எதிர்த்து வாய்ப்பூட்டு விளக்கம் கூறியதையும் இங்கு நினைவு படுத்துகிறேன்.

ஆழ்வார் நாலாயிரப் பிரபந்த நூல் ரங்கப் பிரவேசமாகிப் பட்டர்களால் —அது தமிழ் வேதம் என்று சொன்னதை ஒப்புக் கொண்ட வைணவ ஓச்சலக் கம்பரும்—அந்த நம்மாழ் வாரைப் புகழ்ந்துள்ளார்.

''சடகோபனந்தாதி—18 என்ற பாடலில்—பிரபந்தச் சிறப்பினை

''போதிக்குமே எங்கும் ஓங்கிப்
பொதுநிற்கும் மெய்யை! பொய்யைச்
சோதிக்குமே உங்கள் வேதம்
எங்கோன் தமிழ்ச்சொல்'' எனவே பாடுகின்றார்;

கம்பர் பாடத்தான் செய்வார். அவர் வைணவ ஊதி; அவர் வழிமொழிந்தவர்களாக மதுரைத் தமிழ்ச் சங்க எதிர்பாளர் களும் பிரபந்தத்தைப் புகழ்ந்து, ''சிலேடையுலா,'' ''அஞ்ஞவதைப்பரணி,'' ''மோகவதைப் பரணி,'' கலியில், அழகர் பிள்ளைத் தமிழ், ''தேசிகப் பிரபந்தம்,'' ''மதுரகவி,'' திருநகரி ஆழ்வார்பாசுரம் திருவரங்கக் கலம்பகம், எனப்பல பெருமாள் கோவில் தீர்த்தங்கரர் பலர் பல விதமாக, பல காலங் களில் பாடி இருக்கின்றனர்.

கோயில் ஆதினங்களுக்கு பணக்கார பக்திமான்களால் கொடையாக விடப்படும் யானைகளில் சிவன் கோவில் யானை என்றால்—மூன்று பட்டைத் திருநீரு—பெருமாள் கோவில் யானை என்றால் முப்புரிப் பட்டை நாமம்.

நாயன்மார் பாசுரங்களோ பிள்ளையாருக்கு யானையையும், ஆழ்வார் பாசுரங்களோ குருவாயூரப்பனுக்கு கேசவயானையை யும், துணையாக ஒப்பிட்டுப்பாடுவார்கள்—பாடும்.

மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர்கள்;

பாக்களில் இலக்கணத்தமிழ் அனைத்தும் இருந்தாலும் பாடற் தலைவன் வைணவ ராமன் என்று ராமாயணத்தையும், பிராந்தத்தையும் அரங்கேற்ற மறுத்து விட்டதால்—அந்த ராமாயணக் கம்பன்.

''வேதாந்தஆரியர் என்று இயம்பி நின்றோம்''எனத் தேசியப் பிரபந்தம்; அமிருதசுவாதினி-137-கூறியவாறு;

"மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள்
நிற்கப் பாடே" என்று மதுரகவியாழ்வாரும் கூறியவாறு;

"ஆழ்வார் புகன்றவை—சில உண்டு! அந்நூல்
வேதநூல் உணர்ந்தோர்க்கே
அன்றி விதித்திடும் பொருள் விளங்கா"

என இருசமய விளக்கமாக அரிதாசர் கூறியவாறு;

அன்றையப் பார்ப்பனர்கள்—அவர்களின் அடிவருடிகளுடன், மதுரைத் தமிழ்ச் சங்கத்தைப் பழித்தனர். ஆரிய வைணவ நீதி வர்ண தர்மம் வேண்டுமென—அக்ரகாரக் கும்பல்களுடன் பிரபந்தத்தைத் தமிழ் வேதம் என்றும்; அந்நூல் தத்துவத் தெய்வநூல் என்றும்; அதை அரங்கேற்றாத தமிழ்க் சங்கப் புலவர்களை வசைமாரி பொழிந்தனர். அந்த விழுக்காட்டுத் தோல்வியில் சிறீரங்கத்தில் அதே பிரபந்தத்தை அரங்கேற்றி வெற்றி கண்டதாக அந்தக் கோத்திர நாமாவளிகள்;

"அண்ட கோளத்தார் என்ற
ஆரியத் தமிழால் அன்று
தண்டமிழ்ச் சங்கம் வென்ற
சடகோபன்"

என்று நம்மாழ்வாரைப் புகழ்ந்தனர்.

அவ்வாறே, கம்பரும் தனது சடகோப அந்தாதியில்—47 ஆவது வரியில்;

"சங்கக்—குவடிறக் குத்திய"—என்றார்.

குவடு என்றால் மலைக்குன்று.

அதாவது, தமிழ்ச்சங்கமென்ற குன்றினை தலையால் மோதிச் சாய்த்த குருவாயூர்க் கேசவ யானையை ஒத்த சடகோபருக்குப் பாவாரம் சூட்டுகின்றார். வைணவ ஆழ்வார் பசனைக் கூட்டத்திற்கு திருக்குறள் தீட்டுப்பட்ட நூல் என்று படிப்பிக்கப்பட்டிருந்தது. என்ன கொடுமை?

மறைந்த; அய்யா கிருபானந்த வாரியார்கூட யாதவர் குலக் கொழுந்தாவார். அவரும் மேடைகள் தோறும் தன் உயிர் பிரியும் வரை "திருக்குறள் நீதியை மட்டும் சொல்கிறது. இராமாயண, மகா பாரதம் அனைத்தையுமே சொல்லுகிறது. ஆகையால்

அதைப்படியுங்கள்.'' என்று சொன்னார். அது, கற்றதுகை மண் அளவு போலும்.

இந்தக் கம்பர் காலத்தை முற்படுத்தியும், பிற்படுத்தியும் கூறுகின்றனர். ஆனால் பாண்டியர் மதுரையில் தமிழ்ச் சங்கம் என்ற பெயரில் பல புதுப்புது சங்கங்கள் தொடர்ந்து நடத்தப் பட்டு வந்திருக்கின்றன.

வடமொழியில் மந்திரங்கள் ஓதி, சிற்றூர் கோயில் அர்ச்சகர் பணியே குலத் தொழில் எனக் கொண்டவர்கள் உவச்சர்கள் என்ற ஓச்சடையர்கள். (ஹோய்ச்சலர்) உவச்சர் என்றாலும் வழங்கு சொல்லில் ஓச்சகர் என்றாலும் பூசாரி! பிராமண வாக்கியத்தில் கௌவர அர்ச்சகரல்ல!—சூத்திரர்களில் கோயில் பூசாரி—இந்த உவச்சர்கள். பாரசவர் வழி என்பார் மு. ராகவய்யங்கார். பாரசவர் என்றால் யார்?

பராசரரா? பாரசைவரா? பாரசவரா? பாராசரர் குலம் என்றால் புராண வசிட்டர் மகன் சத்தியமூர்த்தி ஐயர் என்பவருக்கும், புங்கனூர் புலைச்சிக்கும் பிறந்த பரம்பரை வழியினர் ஆவர். அதாவது; சூரத்திரத் தேவடியாள் வழியினர் என்று பொருள் சொல்லப்பட்டிருக்கிறது. இதை முன்னரே கூறி இருக்கிறேன்.

ஆதித்தன்—திலகவதி என்பவர்களுக்குப் பிறந்தவர் கம்பர். தமிழ் நாடு முழுதும் 1971—அரசுப் பதிவேட்டின் வாயிலாக அறியப்படும் இந்த உவச்சர்ள் எண்ணிக்கை 4314— பெயர்கள். இவர்கள் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட தமிழர்கள் அல்ல. தெலுங்கு வழி மந்திரப் புரோகிதர்கள்.

பழந்தமிழ்ப் 18 தொழில் வாரிக் குடி மக்களில் ஓச்சடையர் களும் அதில் அடங்கியவர்கள் என்பதற்குச் சான்றாக ஒரு பழம்பாடல் இதோ—

“ஓச்சன், கோயிற் குடியான்,பூமாலைக்காரன், குயவன்
தச்சன், எண்ணெய் வாணியன், உப்பு வாணியன், இலை
வணியன், கற் தச்சன், பள்ளிப்பறையன், கண்ணான்,
வண்ணான்,
தட்டான், பாணன், வலையன், நாவிதன், கொல்லன்''

என்றார்.

தெளிவான ஆய்வு செய்ததாக, டாக்டர் கவிஞர் வரதராசனார்; தேரெழுந்தூர் சடையப்பவள்ளலார் ஆதரித்த

''இந்த கம்பர் வாழ்ந்த காலம் கி.பி. 840—922'' என்று கூறு கிறார். அப்படியானால், அது உண்மையானால் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தையும், தமிழ் ராமாயணத்தையும் (கம்பர்— கி.பி. 840—950—922) மதுரை பாண்டிய மன்னர்களான சீமாறன் பரசக்கர கோலாகலன்—சீவல்லபன், கி.பி. 835—முதல் 862; அவ்வழியாக

வரகுணவர்மன் —கி.பி. 862—880.

பராந்தக பாண்டியன்--கி.பி. 880—900

இராசசிம்ஹன்—iii கி.பி.900—920.

ஆகியவர்கள் காலத்தில்தான் ராமாயணத்தை கம்பர் அரங்கேற்ற முயற்சித்திருக்கவேண்டும். ஆனாலும் கி·பி. 850—இல் இருந்தே சதுரானன பண்டிதர் என்பவரிடம் கம்பர் தமிழ் இலக்கணம், இலக்கியம் மற்றும், வால்மீகம் கற்றார் என அறியப் படுவதும் ஆராயத்தக்கதே. கம்பரைப்பற்றிய காலவரைச் செய்திகள் தெளிவாக இல்லை எனலாம். அவர் காலம் 11,12—நூற்றாண்டு கள் எனவும், மூன்றாம் குலோத்துங்க சோழன் காலம் எனவும் கூறுகின்றனர்.

பண்டையத் தமிழினக் கட்டுக்கோப்பு, சங்ககால—வளர்ச்சி இவைகளைப் படித்தறிந்தும்-தொகுக்கப்பட்டுவைத்த உண்மைச் சான்றுகளை மறைத்து மாற்றுப் பொருளை, சூட்சியாக்கி—நம்ப வைத்த சில மதவாதத்திணிப்புகள் தழுவி விமர்சிப்பது போன்ற இரத்த உறிஞ்சல்வாதிகளை,—19,20—ஆம் நூற்றாண்டுச் சனாதனிகளையும் தொடர்ந்து அறிவோம்.

சொர்க்கம், தேவர்கள், ரம்பையர், முனிபுங்கவர்கள், ஆகிய அவர்களுக்குள் நடக்கும் நிகழ்வுகூறும் **இதிகாசங்கள்**, நரகம், பூலோகம், அவதரிப்பு, மோச்சம், முத்திகொடுக்க சிவன் மனித னாகப் பிறப்பது. நல்வினை, தீவினை, பரிகாரம் பக்தியைப் பரப்பும் நிகழ்வுகள் அதற்குப் பாவபுண்ணிய எடுத்துக் காட்டுகள் துதிப்பாசுரங்கள் கூறும் **புராணங்கள்** ஆகியவை ஆன்மீகம், தத்துவம் என்ற பெயரிலேயே இதுதான் தெய்வீகம் இதைநம்பிப் பின்பற்றாவிட்டால் சாபம், காக்காடு என மக்களை நிரந்தர அடிமை கொண்ட பல மதவாதங்களையும் அறிவோம்.



# 8

## ஆய்வு என்ற பெயரில் அடிப்படையைக் குழப்புபவர்கள்

ஒரே கால வழக்கில் குமரி முதல் இமயம் வரை தமிழ்த் திராவிடர் ஆட்சியென விளக்கம் கூறுமிடத்து வடக்கே அறியப் பட்ட; அரப்பா, மோகஞ்சதாரோ, சிந்து கங்கை சமவெளியில் பல கிளைமொழி, இனவாரி மக்கள் என திராவிடத் தமிழர் ஆட்சியும், தெற்கே மூன்று தமிழ்ச் சங்கமென்ற பஃறுளித் துறைமுகம், கபாடபுரம், வட மதுரை ஆகியன அழிந்து இன்றைய மதுரைத் தொடர் என, அவ்வாறே வடக்கோடும் மூவேந்தர் தமிழக ஆட்சியும் சிறப்புடன் உலகளாவி இருந்தது வரலாறு.

மேற்கூரியவற்றில்—தெற்கே மூன்றாம் தமிழ்ச்சங்கம், கடல் கோளில் கி.மு. 1500—இல் அழிகின்றது. வடக்கே இமயக் கணவாய் வழியாக—அதே காலத்தில் பெருமளவில் ஆரியர் இந்தியாவுக்குள் நுழைகின்றனர்.

கி.மு. 1500—ஆரியர் நுழைவு

" 1200—ருக்வேதம்.

" 1000—ஆரிய மாயை என்ற சமஸ்கிருதத் துவக்கம்.

" 700—தமிழ் இலக்கண—இலக்கியத் தொகுப்பு என—தொல்காப்பியம்

" 500—புறமதம் என ஆச்சார்யா மகாவீரர்—புத்தர்.

" 400—தென்னாட்டில் சமண—பௌத்தம் நுழைவு

" 300—பௌத்தம் பரப்பிய சூத்திரப் பேரரசன் அசோகன்

ஆரியத் தீர்த்தங் கலந்த இவற்றில் சங்கத் தமிழ் என இலக்கியச் செய்திச் செய்யுள் தொகுப்பு நூல்கள், காலவரையறை, மொழி நடை கொண்டு கி. மு. 500 முதல் கி.பி 200 முடிய (கி மு. 300—கி.பி.100) என்றனர். ஆண்டு கணிப்புகளில் சில முன்னர்ப் பின்னர் இருக்கலாம். அதற்காக அவை பல நூற்றாண்டுகளைக் கடக்க முடியாது.

சங்கம்—சங்க காலம்—சங்கத் தமிழ் என மூன்றாக வகுத்து வழக்குரைப்பதாக:

**சங்கம் :** மூவேந்தர் கடல் துறைகளில் உலகில் எங்கும் இல்லாத முத்துக் குளித்தெடுத்தபோது கிடைத்த சங்கு—ஒலித் திரட்டுப் பெயராக அது சங்கம் என்ற பெயர் பெற்றது. குமரிக்கடற் துறைமுகச் சங்கினமோ இசைச் சேர்க்கையும்—உறவுகளில் தனித்தன்மையும் கொண்டவைகள். சங்கினத்தின் வழி வந்த சிப்பிகளே—சிறப்புமிக்க முத்துக்களின் குவியல் என்று அறியப் பட்டிருக்கின்றன.

சங்கினத்தில் பல நிறங்கள், தோற்றங்கள், சிறியது, பெரியது, என எண் வரிசை கணக்கிட முடியாதனவாகும், அறிவியல் உண்மையாக பெரும்புலவர் டாக்டர் கோவேந்தன் அவர்களும் ''ஆயிரம் இடம்புரிச் சங்குகள் இருக்குமிடத்தில் ஒரு வலம்புரிச் சங்கு மாத்திரம் இருக்கும்... அது போல, ஆயிரம் வலம் புரிச்சங்குகள் இருக்குமிடத்தில் ஒரு பாஞ்ச கன்னியம் இருக்கும்''

என்று சங்கு—சங்கம் என்ற தொன்மையான தமிழ்ச் சொல்லை விளக்கி—அதற்குக் கடலியல் கண்டு பிடிப்பு உறுதிகளையும் எடுத்துக் காட்டுகிறார்.

தமிழர்களின் கடல்படு செல்வமான அந்தச் சங்கினை ஊதித்தான்—சங்கின் வழி ஓசை எழுப்பித்தான்—பாண்டியத் தமிழரின் முரசு ஒலித்த பிறகே சிறப்பு மிக்க காட்சிகள் உருவாகி இருக்கின்றன.

சங்கம் என்பது முழுமையான தமிழ்ச் சொல்லாகும். பேராசிரியர் பி. டி. சீனிவாசய்யங்கார், ''சங்க இலக்கியங்களில் சங்கம் என்ற சொல் காணப்படவில்லை. பிற்கால இலக்கியங்களில் தான் அது காணப்படுகிறது.'' என்றும், அவரேகூறிய,

''சங்கம் என்பதொன்று இருக்குமானால் அது சமண காலத்திற்குப் பின்னர்தான் தோன்றி இருக்க வேண்டும்'' என்பதை

விமர்சிக்கும் போது பல முற்பட்ட சங்க காலச் செய்யுள்களில் அந்தத் தலைப்புச் சொல், சொல்லப்படாது, அந்த அந்தக் கால மொழி வளர்ச்சி வழக்கில் வெவ்வேறு தலைப்புச் சொற்கள் அவற்றிற்குச் சொல்லி இருக்கலாம். அவை கொண்டு சங்கம் என்பது வடசொல் என்று நிச்சயமாக ஆய்வுடன் சொல்ல முடியாது.

வேர்ச் சொல் கொண்டு பல பொருள் உணர்த்துவனவாக; அதன் கிளைப் பொருட்கள் கூறுமிடத்து :

சங்கம்— சங்கத் தமிழ், சங்க காலம், சங்க நிதி, சங்கமம், சங்கதம் (வடமொழி) சங்கடம், சங்கமர், சங்கமுகம், சங்கயம், சங்கராச்சாரி, சங்கரன், (சங்கையுடையவன்), சங்கரி, சங்கரித்தல், (வடசம்காரம்) சங்க பார், சங்கற்பம், சங்காட்டம், சங்காந்தம், சங்காந்தி, சங்காணர், சங்கிதை (வரலாறு வட சம்கிதை) சங்கீதம், சங்கீத்தல், சங்கியை, சங்கிரகம், சங்கிராந்த வாதம், சங்கிராந்தி, சங்கிராமம், சங்கிலி, சங்கிரணம், சங்கீர்த்தனம், சங்கு, சங்கேதம், சங்கை, சங்கோசம் எனப் பல சொற்களாக வளர்ந்தும், திரிந்தும், வேர்ப் பிடிப்புக் கொண்டே அவற்றின் கிளைகள் தோன்றி இருக்கின்றன.

குமரிக் கண்டத் தென்கடல் தமிழ்ப் பாலி மொழியே. புத்தத் திரிபீடகம், புத்தம் சரணம், சங்கம் சரணமாகும். பாலியே தமிழ் என்று அறியப்படும் போது—புத்தமதம், சமண மதம் மிகுதியாக எடுத்துரைத்த சங்கம் என்ற சொல் கொண்டு அது வடமொழியாகாது. தமிழ் சொல்லே ஆகும்.

> முன்னரே குறிப்பிட்டுள்ளவாறு; ''தமிழ் வடசொல் துணையின்றி தனித்து வழங்குவது மட்டுமின்றி தழைத்து ஓங்கவும் செய்யும்'' என்றார் டாக்டர் கால்டு வெல்.
>
> இந்த உண்மையைத் தெளிவுபடுத்துபவராக ஐயா பாவாணரும் ''சுட்டுச் சொற்களும் நூற்றுக் கணக்கான அடிப்படைத் திரி சொற்களும்; நூற்றுக் கணக்கான வேர்ச் சொற்களும் தமிழாக இருப்பதால், உண்மையில் வடமொழியே கூட தமிழின் துணையின்றி தனித்து வழங்க இயாலென்பதை அறிதல் வேண்டும்'' என்றார்.

''மனித இனமே தென்னகத்தில் இருந்தே தோன்றி இருத்தல் வேண்டும். மக்கள், உலகம் முழுவதும் இங்கிருந்தே பரவி இருத்தல் வேண்டும்'' என்று குறிப்பிடும் **டாக்டர் கிரியர்சன், சர் ஜான் ஜோன்சு, டாக்டர் பற்குசன்** கருத்துக்களுக்கு உடன்பட்டவர்களாக, **''தென்குமரியே மனிதன் தோன்றியவிடமும், தமிழன் வளர்ந்த இடமும்''** என்று நிலை நாட்டிய **பி. டி. சீனிவாசய்யங்காரும், யூ. ஆர். ராமச்சந்திர தீட்சிதரும்;**

தமிழில் இருந்தே சமஸ்கிருதம் தோன்றியதென்பதை அறியாதவர்களல்ல. ஆனாலும் **பி. டி. சீனிவாசய்யங்கார்**

> ''சங்கம் என்பது வடசொல். அதனால் சங்கம் எதுவும் தமிழ் நாட்டில் இருந்திருக்க முடியாது''

என்று கூறுகிறார். அவ்வாறே, உடன்பட்டு, டி. ஆர். சேசகிரி சாஸ்த்திரி, யூ. ஆர். ராமச்சந்திர தீட்சிதர், கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி, எஸ். வையாபுரிப் பிள்ளை, கே. எம். சிவராச பிள்ளை ஆகியோரும் மொழிகின்றனர். இவர்கள் யார் என்பதற்குப் பல சான்றுகள் கூறுமிடத்து;

நூற்றுக் கணக்கான பௌத்த நூல்களும், கல்வெட்டுக்களும், வெளி நாட்டவர் ஆதாரங்கள் ஆகியவைகளும், **''சூத்திர மன்னனான அசோகன்—புத்தர் கொள்கையைப் பரப்பியவன்—இந்து வர்ண சாதிகளை எதிர்த்தவன்''** என்று உறுதிப் படுத்துகின்றன. அப்படிப்பட்ட மாவீரன் அசோகனை **பேரறிஞர் ஹெச். சி வெல்சு, ''உலகின் கண் ஆண்டு—மாண்டு போன மாமன்னர்களுள் ஞாயிறு போன்றவன் அசோகன்''** என்றார்.

வரலாற்று மாவீரனான அசோகனையும், அவனுக்குப் பிறகு வந்த அந்த மௌரியப் பேரரசையும் பார்ப்பனர்கள் ஏன் வீழ்த்தினார்கள்? எதற்காவென்று இதோ, ஒரு **தீட்சிதர்—சாஸ்த்திரி வழி—பேரறிஞர் அரிபிரசாத் சாஸ்திரி** என்பவரே விளக்குகிறார்.

1. ''அசோகன் பட்டயங்கள்—கற்பாறை ஆகியவைகளின் மூலம் தமது ஆணைகளைப் பிறப்பித்தான் இவைகள் சூத்திர இனத்தைச் சேர்ந்த அசோகனால் வெளியிடப்பட்டவைகள். எனவே பார்ப்பனர் என்னும் உயர் குலத்தவர் இதனை மதிக்கவும் இல்லை — ஏற்கவும் இல்லை'' என்பது உணரத்தக்கது.

2. ''அசோகன், நாட்டு மக்களிடையே அறநெறிகளைப் போதிக்க—பிரச்சாரம் செய்ய—தர்ம மகாமாத்திரர்கள் என்பவர்களை ஏற்படுத்தி இருந்தான். அவர்கள் நாட்டு மக்களிடையே புத்த தர்மத்தைப் பரப்பினர். பார்ப்பனர்கள் இதனைத் தங்களுடைய ஆதிக்கத்துக்குக் கேடு பயப்பனவாகவே கருதினார்கள். அதன் காரணமாகவும், பார்ப்பனர்கள் பாதிக்கப்பட்டிருந்தனர்.

3. ''அசோகன், வரணாசிரம தர்மப்படி பார்ப்பனர்களுக்கு ஒரு நீதி--மற்ற சத்திரியர், வைசியர், சூத்திரர்களுக்கு வேறு, வேறு நீதி என்று வழங்காமல்; பார்ப்பன தர்ம சாத்திரங்களுக்கு மாறாக, 'சட்டத்தின் முன் எல்லா மக்களும் சமமானவர்களே' என்ற கோட்பாட்டினைக் கடைப் பிடித்தது பார்ப்பனர்களுக்குப் பிடிக்கவில்லை''

4. ''அசோகன் உயிர்ப் பலிகளையும், வேள்விகளையும் தடை செய்திருந்தான். விழாக்கள் என்ற பெயரில் பெருங் கூட்டங்கள் கூடுவதையும்—(அதற்கும்) தடை விதித்திருந்தான். இவை தங்கள் சமயத்திற்கு எதிர்ப்பான காரியங்கள் என்று பார்ப்பனர்கள் பொருமிக் கொண்டிருந்தனர்'' என்றார்.

பார்ப்பனர்கள் கடவுள் மறுப்பு வாத (அநாத்மவாதம்)ப் பௌத்தர்களை எப்படியெல்லாம் வெறுத்தனர்; காரணங் காட்டி எச்சரிக்கை உபதேசமும் செய்தார்கள் என்பதற்கு மற்றுமோர் எடுத்துக்காட்டாக;

வால்மீகி ராமாயண அயோத்தியா காண்டம்—சி. ஆர். சீனிவாசய்யங்கார் தமிழ் மொழி பெயர்ப்பில்; பாதரட்சைப் பரதனுக்கு ராமன் ஆரிய நீதி கூறுகிறான். எப்படி?

ராமன்— ''பரதா! பவுத்தர்கள் சார்வாக்கர்கள், முதலிய நாத்திகர்களோடு பழகாமல் இருக்கிறாயா? சாத்திரங்களுக்கு வெகு சாமர்த்தியமாக அர்த்தங்களை உபதேசிப்பதில் இவர்கள் வெகு சமர்த்தர்கள். தத்துவ ஞானத்திற்கு மாறாக விபரீத ஞானத்தை உடையவர்கள். ஒன்றுந் தெரியாதவர்களானாலும், பெரிய பண்டிதர்கள் என்று

> எண்ணிக் கொண்டிருப்பவர்கள். வேத மார்க்கத்திற்கு விபரீதமான புத்தியினை உடையவர்கள். தர்ம சாஸ்திரமிருதிகளையும், புராணங்களையும் நீக்கி மகரிஷிகளால் சொல்லப்பட்டு, சாதுக்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட புராணங்களையும், தர்ம சாஸ்திரங்களையும், பெரியோர்களுடைய சம்பிரதாயப் பரம்பரைப்படி அர்த்தம் சொல்லாமல்—கேவலத் தர்க்கத்தைப் பிரயோகித்து, அவைகள் இகத்திலும் பரத்திலும் பிரயோசன மற்றவை என்று வாதிடுபவர்கள்''

என்றார்.

ராமன் கூறியதாக மேலே சொல்லப்பட்ட கருத்து வால்மீகி சரக்கோ—அந்த சீனிவாசய்யங்கார் சரக்கோ? (இல்லை) அல்லது நூலைப் பதிப்பித்தவர்களின் இடைச்செறுகல் சரக்கோ? ஆக, எப்படியானாலும் அந்த தர்ப்பண ராமன் பெயரால் எவ்வளவு நெஞ்சழுத்தமாக—இந்து தர்மம் என்ற பெயரில் பார்ப்பன சூழ்ச்சி, சூத்திரர்—தமிழர் தலையில் வைக்கப்பட்டிருக்கிறது என்பதை சிந்தித்துப் பாருங்கள்!—இதனை மேலும் விரித்தால் விரியும். ஆகையால் வேண்டாம்!

இவற்றையெல்லாம் அறிந்து—அதைக் காட்டிக் கொள்ளாதவர்கள் போல பேசாதிருந்தாலும் பரவாயில்லையே!

''அசோகன் பவுத்தன் அல்லன். அவன் மேற்கொண்ட தர்மமும் பவுத்த நெறியல்ல. அவன் விடுத்த ஆணைகளும் பவுத்தத்தின் பாற்பட்டதல்ல. மாறாக அசோகன் ஒரு இந்து மன்னனே! அவன் பின்பற்றியதும் இந்து தர்மமே! அவனுக்கும் பார்ப்பனர்களுக்கும் எந்தவிதக் கருத்து வேற்றுமையும் இல்லவே இல்லை'' என்று மகாவிட்ணுவின் 10—து அவதாரங்களுக்கும், அடுத்த 11—ஆம் அவதாரம் புத்தர் அவதாரமென்று கதை எழுதி வைத்து, அதையும் மக்களிடையே துணிந்து சொல்லும் இந்த கே. ஏ. நீலகண்ட சாஸ்த்திரர், பூ. ஆர். ராமச்சந்திர தீட்சிதர்—மற்றும் ராய், சௌத்திரி போன்ற இவர்கள் எல்லாம் அக்ரகார முத்திரைகள் மட்டுமல்ல— அழகான நல்ல பாம்புகள் என்பதை மட்டும் புரிந்து கொள்ள வேண்டும்.

1. சமயம் கிடைத்து—எப்படி நவபாசான பழநியாண்டவர் கருவறைச் சுரங்கத்தில் போகரைப் போகவிட்டு—கல்லை வைத்து மூடி—முருகனுடன் அவர் கலந்துவிட்டார் என்று கதை கட்டினார்களோ!

2. சிதம்பரம் நந்தனையும், வடலூர் இராமலிங்கத்தையும் தீயிலே தள்ளிக் கொன்றுவிட்டு சோதியில் கலந்து மோட்சம் அடைந்து விட்டார்கள் என்று பரவசமடையச் சொன்னார் களோ(!) :

3. சுரங்கத்திற்குள்ளே புதையல் என்று கூறி மதுரை நாயக்க மன்னன் வழி திருமலை நாயக்கரை (கி. பி. 1623—1659) உள்ளே இறக்கிவிட்டு கல்லை வைத்து மூடிவிட்டு மீனாட்சி அழைத்துக் கொண்டாள் என்று சொன்னார்களோ (!) :

அந்த மதவாதப் புரோகிதப் பார்ப்பனர்—சமயம் கிடைத்த போதெல்லாம் பகுத்தறிவின் எழுச்சிக்குக் கல்லறை கட்டிக் கொண்டே வந்திருக்கிறார்கள். இந்த இடத்தில் ஈரானின் மறைந்த அதிபர் அப்துல்லாஹ் கோமேனி (1989)யால் மரண தண்டனை விதிக்கப்பட்டு தலைமறைவாக வாழும் சிந்தனைச் சிற்பி சல்மான்ருஷ்டி கூறிய'' எப்போதுமே தாங்கள் எளிமையின் பின்னால் இருப்பதாக மத அடிப்படைவாதிகள் கூறுவார்கள். ஆனால் உண்மையில் அவர்கள் இருள்மையின் பின்னால் இருப் பார்கள். இரத்த மயமாகக் கடவுள் இருப்பார் என்று நம்புவது எவ்வளவு வருத்தத்திற்குரிய விஷயம். மரணத்தின் தூதர் களான இந்தமனிதர்கள் எப்படிப்பட்ட அமைதியை (இசுலாமை) உருவாக்க நினைக்கிறார்கள்! என்பதை நினைவு கொள்ளவும்'' என்றார்.

இவர்கள் எல்லாம் இந்துப்பிராமண. சத்திரிய வைசிய சூத்திர, ஆரிய மாயை என்ற கி. மு. 1000—த்தில் பரப்பப்பட்ட சமஸ்கிருதமயத்தில்—அவ்வழி விதிகளில் மூழ்கிப் போனவர்கள் என்றே கூறவேண்டும். சிந்து வெளித் தமிழ் வழக்கில், அவ்வழிக் கிளைகளாகக் கலப்பட மொழியில் வல்லொற்றுப் பெற்ற பிராகிருத மொழியில் அதிகச் சொல் கடன் வாங்கி உருப்பெற்ற அந்த சமஸ்கிருதமென்று பெயர் தரப்பட்ட மொழி ஆரிய, மாயையின் கவசமானதால்; சங்கம், சங்க காலம், சங்கத்தமிழ் அனைத்துமே அதன் வயப்பட்டது. இந்த அவலநிலையை எடுத்துரைப்பவராக திருத்தமும், தகுதியும், உடைமையும், பற்றி—பாவாணரும்;

''சமஸ்கிருதம் தேவ மொழி என்று மூவேந்தர் உள்ளத்திலும் ஆழப்பதிக்கப்பட்டு விட்டதனால், தமிழ் மொழியும் இலக்கியமும் படிப்படியாகக் குன்றியும், கலப்புண்டும், இழிந்தும் போயின. ஆதலால் தமிழ் வேர்ச் சொல்லாராய்ச்சியும், பிராமணீயத்தையும்

இந்தித் திணிப்பையும் எதிர்க்கும் நெஞ்சுரம் உள்ளவரேயன்றி, அவை இல்லாது தமிழைக் காட்டிக் கொடுக்கும் வையாபுரிகள், எத்துணை இலக்கியங் கற்றும்—பண்டார்க்கர்ப்பட்டம் பெற்றும் பல்கலைக் கழகத் துணை வேந்தராகியும், தமிழ் வரலாறும், தமிழ் இலக்கிய வரலாறும் எழுத எத்துணையும் தகுதியுயுள்ளவராகார் என்பது திண்ணம்'' என்று கூறினார்.

சங்கத்தமிழும் அதன் தோன்றல் வளர்ச்சியும், சொல் எழுத்து, பொருள், யாப்பு, அணியில் கொண்டாலும் இலக்கணமும், வழி வழி இலக்கியமும் பாதுகாத்து வந்த நடைமுறை, செவி வழிச் செய்தி—பல முரண்பட்ட கட்டுமானங்களிலும் சில தெளிவான உண்மைச் செய்திகள் நம்மைத் தலைநிமிர வைத்துக்கொண்டிருக்கின்றன,

அவற்றை நமது பாவணர், விளக்குமிடத்து;

''செறிவும், செழுமையும், வளமையும் கொண்ட தமிழ் கி.மு. 50,000 ஆண்டுகளுக்கு முன்னர். இலக்கியம் கி. மு. 10,000 ஆண்டுகளுக்கு முன்னர். தமிழின் தொன்மையும், முன்மைவும் தாய்மையும் தலைமையும் தோன்றியது. தென்மாவாரியில் மூழ்கிப்போன குமரி நாட்டில்'' என்றார். பாவணர் கூறியவாறே;

திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் எழுதிய அயர்லாந்துக் காரரான டாக்டர் ராபர்ட் கால்டுவெல் என்பவர் காலத்தில் தொல்காப்பியம், பதினெண் மேல்கணக்கும் சிலப்பதிகாரமும் பொருள் பிரித்தறியாது கிடந்த காரணத்தாலும்; குமரிக் கண்டம் பற்றி அறியாத ருக்வேத அடிமைகளாக, தமிழர் வெளிநாட்டிலிருந்து வந்தவர் என்று திரித்துரைக்கப்பட்டதை நம்பிய காரணத்தாலும்,அதே கால்டுவெல் தமிழ் நெடுங்கணக்கு வடமொழி வண்ணம் பின்பற்றியதென எண் வேற்றுமையமைப்பிலும், தமிழ்; சமஸ்கிருதத்தைப் பின்பற்றியதெனவும் தவறாகக் கூறிவிட்டார். அதை ஒப்புக்கொள்ள மறுத்த P.T. சீனிவாசயயங்காரையும், V. R. ராமச்சந்திர தீட்சதரையும் புறக்கணித்து ஆரிய திராவிடப் பண்பாட்டுத் தொடர்பு என்ற தமது நூலில் K. A. நீலகண்ட சாஸ்திரியார், டாக்டர் கால்டுவெல்லின் தவறான கருத்தினை உண்மையாக்க முயன்றார். தமிழ் மொழியின் அகத்துறை இலக்கியங்கள் போல் உலகில் வேறு எங்கணும் இல்லை என்ற போலை அறிஞர் பெசுகி, போப் ஆகியோரின் ஆய்வுக்கு ஒப்ப வடமொழியிலும் மேலை மொழியிலும் சொல்லை அடிப்படையாக வைக்கே ஆண்பால் பெண்

பால் வேற்றுமை கூறுவர், அவ்வாறின்றித் தமிழ்மொழியில் உயர்நிலையில்; ஆண்பால், பெண்பாலுக்கு பாகுபாடு சொல்லப் படுவதைப் பயின்று அறிந்த பிறகே;

**காஸ்டுவெல் :**

1. ''தமிழ்''— சமஸ்கிருதத்திற்கு முந்தியது. ஆரியமொழி களில் உள்ள சுட்டுச் சொற்களுக்கெல்லாம்-தமிழ் முச்சொட் டொலிகளே மூலமாகும். சமஸ்கிருதம் திராவிட மொழிகளிலும் ஏராளமான சொற்களைக் கடன் பெற்றுள்ளது.''

2. ''தமிழ்மொழியில் வரும் சுட்டு வினைப் பொருள்களின் அழகான தத்துவார்த்தமான ஒழுங்குமுறை உலகில் வேறு எம் மொழியிலும் இல்லை.''

3. ''நீண்ட காலமாக எழுதாக்கிளவியாக (எழுத அடிப் படைச் சொல் இல்லாத) இருந்த வேதத்திற்கு மேலே சொல்லிய சமஸ்கிருதம் தோன்றிய பின் தமிழ் நெடுங்கணக்குப் பின் பற்றியே வண்ணம் ஏற்பட்டது. அத்துடன் பிராகிருத வல்லொற்றுப் புணர்ச்சி தேவநாகரி என்ற பெயரில், சமஸ்கிருதம் எழுத்து வடிவமென்று கொள்ளப்பட்டது''—என்றார்.

இவை பற்றி ''Marval of Administration of the Madras Presidency Vol—I—Page 43—இல்;

''திராவிட மொழிகள், ஒப்பிட முடியாத அளவிற்குக் காலத் தால் சமஸ்கிருதத்தைவிட மூத்தவை என்பதில் ஐயமே இல்லை. அவை ஒரு காலத்தில் இந்துஸ்தானம் முழுவதையுமே ஆண்டு வந்தன.''

என்று உறுதிப்படுத்தப்பட்டிருக்கிறது.

தமிழ் மொழியின் தொன்மையும்—அதை ஆரியாதவர் பிறகு அறிந்து, திருந்தி சூளுரைத்தமையும்—திணைப்பாகு பாடுணர்த்தியவையும்—இந்த வளர்ச்சியில் வடசொல் என்ற தலைப்பில் சமஸ்கிருதம் எப்படி மற்றவற்றை அழுத்தி முதலிடம் பெற்றன என்பதையும் சிந்தித்தல் அவசியமாகும்.



# 9

# சமயம் என்ற பெயரில் சைவ வைணவப் படைகள்

சங்க காலம் என்பதற்கு மூன்று சங்கமிருந்த காலம் என்று கொண்டால்; கி. மு. 4000—முதல்—1500—முடியக் கொள்வதே ஒப்பத்தகுந்ததாகும். கி, மு. 10, 000 முதல் – 4900 — முடிய தொடர்ந்து கி. மு. 6500—முடிய கடல் கொண்ட சங்கம்; பஃறுளி. கபாடபுரம், வடமதுரை ஆகிய மூன்றுடனும் அவை முடிந்து விடுகிறது. பிறமொழிக் கலப்பின்றி—தமிழ் மக்களின் அன்றாட வாழ்க்கை, இயற்கை வளம்—இலக்கியம் என அகம் புறம் பாடி வளர்ந்தது தமிழ்மொழி ஆகும். அவற்றின் சின்னங்களாக மூவேந்தர் தொடர்ந்து திராவிடத்தின் பிறமொழி வளர்ச்சி பற்றிக் கூறுமிடத்து; கே. பிளாக் என்ற மேனாட்டறிஞர்;

"ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தெலுங்கு மொழியில் இலக்கியமில்லை. ஐநூறு ஆண்டுகளுக்கு முன்புதான் கன்னட இலக்கியம்; தமிழ் இலக்கியம் மிக மிகப் பழைமையானது" என்றார்.

முழங்கு தமிழாக இலக்கியக் கோர்வை கொண்ட அதன் காலத்தை ஒப்பிட்டு வரையறுத்துச் சொல்வது சங்ககாலம். ஆனால் கி. மு, கி. பி என அதன் இடைப்பட்ட 300 – 400 ஆண்டுகள் என அவ்வப்போதைய நிகழ்வுகள் கொண்டு பலநூறு புலவர்கள் பாடியதைத் தொகுத்துரைப்பது சங்க இலக்கியம். இந்தக் காலவரையறை கொண்டு தமிழ்ச் சங்கம் என்று முறையே மன்றம்—தலைவர், புலவர் குழு உறுப்பினர்கள் என ஒரு அமைப்பாக இயங்கியதே மேலே குறிப்பிட்ட சங்க காலம் என்று சொல்வதற்கில்லை.

மூன்று பெரிய சங்கங்கள் மறைந்துவிட்ட போதும், பிறகு மொழி வகை என்ற அடிப்படையில்; மன்றம், விழா, பாராட்டு, பரிசீலனை, பரிசு என மதுரையில் தொடர்ந்து பல சங்கங்கள் நடந்து வந்திருக்கின்றன. இன்றும் அவை நடந்து விமர்சிக்கப் படுகின்றன.

கி. மு. 300 பாண்டியர் மதுரையில் சமஸ்கிருதமய மாக்கப்பட்ட மதபுராண அடிப்படை மன்னர்களால் பார்ப்பனர்களுக்குத் தானம் தருமம் என விட்டுக் கொடுக்கப்பட்ட கிராமம், கழனி, அவற்றில் வாழ் திருந்த சூத்திர உழவர்கள் அனைவரும், அடிமைச் சின்னங்களாக இருந்த நிலையை மாற்றி, அனைத்தை யும் அவர் அவர்க்குத் திரும்ப விடுவித்துக் கொடுத்த பொன்னான—ஒளி மிகுந்த காலம் களப்பிறர் காலம்.

அவர் காலத்தில் மீண்டும் பாண்டியன் கடுங்கோன் நாடு பிடித்துப் ''பழைய குருடி கதவைத் திறடி'' எனப் பல வேள்விகள் நடந்தது. பார்ப்பனர் கை மீண்டும் ஓங்கி, முற்றுகை, தெய்வப் பணி, குளம் வெட்டல், கோயில் கட்டல், புரோகிதர்களுக்குக் கிராமம், கழனி— தொழில் அடிமைகள் எனக் கொடுத்து மக்களைப் படாதபாடு படுத்தினர்.

இந்த மதக் கூத்தாடிகளோடு—சமண, பௌத்த எதிர்ப்புத் தாக்கமாக—காரைக்கால் அம்மையார், — தேவார மூவர், அறுபத்து மூவர், என; வேளான், சாலியர், பஞ்சமர், பரதவர், வண்ணார், வலைவேடர் எனப் பல சூத்திரக் கூட்டங்கள் சுடலை ஆண்டியான சிவத் திருமுறைப் பாடலைப் பாடித் தொழுதேற்றினர்.

பன்னிரு திருமுறைகள் என :—

| | | |
|---|---|---|
| 1-2-3—ஆம் | திருமுறை | — சம்பந்தர் பாடல் |
| 4, 5, 6—'' | '' | — அப்பர் பாடல் |
| 7 —'' | '' | — சுந்தரர் பாடல் |
| 8 —'' | '' | — மாணிக்கவாசகர் (திருவாசகம்) திருக்கோவையார் |
| 9 —'' | '' | — திருமாளிகைப் பாடல் சேந்தனார் பாடல் |
| 10 —'' | '' | — திருமூலர் திருமந்திரப் பாடல் |

11 —" " — காரைக்காலம்மையார்
நம்பி ஆண்டார் நம்பி பாடல்கள்
12 —" " சேக்கிழார் பாடல்

என, அவ்வாறே மாலிய—வைணவப் பிரபந்தம் பாடிய ஆழ்வார்கள் எனப் 12 : —பெயர்கள்.

"பொய்கை, பூதம், பேய், திருப்பாண், திருமழிசை, நம்மாழ்வார், மதுரகவி, பெரியாழ்வார்; ஆண்டாள், திருமங்கை, தொண்டரடி, குலசேகரன்."

எனப் பன்னிரு பெயர்கள். மேலே சொல்லப்பட்ட சிவனிய மாலியப் புராண நாலாயிரந் திவ்வியப் பிரபந்தமெல்லாம்;

கி. பி. 600—900—பல்லவர் காலம்
கி. பி. 800—1200—1800—சோழர் காலம்

என்றவாறு பாண்டியர் பெயர்களுக்குள்ளேயே பல்லவர்களின் பெயர்களுமிருக்கின்றன என ஆறாம் நூற்றாண்டு முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரை பாடியும், ஆடியும், கோயில் கட்டியும், யாகம் வளர்த்தும், பலிகொடுத்தும், தீர்த்தம் தெளித்தும், சிற்பம் வடித்தும் திருவிழா எடுத்ததும் ஆரிய சமஸ்கிருத புராண மத முன்னுரிமைச் சூராவளியடித்த காலமாகும்.

பல்லவர்களும், பாண்டியத் தொண்டரடிகளும், கலப்படச் சோழர்களும் சிவனியம், வைணவம் பாடியவர்களானாலும் அவர்களின் கூட்டணி மதவாதக்காலத்தில்தான், சமண மடங்கள் ஆங்காங்கு இடிக்கப்பட்டன. கற்றூணில் பூட்டிய சில பக்தர்கள் கடலில் வீசப்பட்டனர்; கழுவிலும் ஏற்றப்பட்டனர்.

நல்ல தமிழ் எடுகளா?—அவை தெய்வ அருள் பெற்று இருந்தால்—திரும்பி வருமென பார்ப்பன மித்திரர்களால் நெருப்பிலும் நீரிலுமாக எனப் போட்டு ஒழிக்கப்பட்டன.

முருகனுக்கு நாமம்,—சிவனுக்கும் கூட நாமம் போடப்பட்டன. வைணவ சிவ—பக்த கோடிகளே இருந்து, இன்று வரலாறு அறிய முடியாத அளவிற்கு—பழைய கல்வெட்டுகளையும் அழித்து—புதிய புராணக் கதைகள் எழுதினர், அனைத்தையும் மறைத்து மண்மேடாக்கிய, கந்தலும், சாம்பலும், நாமக் கட்டியும் தூசி படர்ந்ததாக மொட்டைக் கோபுரக் கொடிகளில் தெரிந்தன.

மனுநீதி கூறியவாறு "முப்புரிப் பஞ்சநூலணிந்த பார்ப்பான், சனப்பநூலணிந்த சத்திரியனையும், வெள்ளாட்டு மயிரைத்

திரித்துப் பூணூலாக அணிந்த வைசியனையும் பயன்படுத்தி, ஆரிய தர்மமாக சமஸ்கிருதமயமாக்கப்பட்டதில்—பகுத்தறிவுக்கு கொள்ளை நோய் ஏற்பட்டு, பேரிழப்பே ஏற்பட்டது.

மேலே சொல்லப்பட்ட இடைவெளியில் தான் (கி. பி 1000) இறையனார் அகப்பொருளுக்கு—சமஸ்கிருதமயமான பித்தலாட்டத்தில் நக்கீரன்—என்ற பெயரில் முசிறி நீலகண்டன் என்ற ஒரு பார்ப்பனர் உரை எழுதினார். இவர் யார்? மெய்கண்டரா? பொய் கொண்டரா?

அடியார்க்கு நல்லாரும் அதற்கு உடன்பட்ட காலவரையில் வருகிறார். இறையனார் அகப்பொருள் உரைக் குறிப்பினை நம்பி—கடல் கொண்ட பஃறுளி, கபாடபுரம், வடமதுரை என்ற மூன்று சங்கம்; அவற்றின் காலவரம்பு, மன்னர்கள், நூல்களின் வரிசை—ஆகியவற்றை முழுதாக ஒப்புக் கொண்டு விடமுடிய வில்லை.

தமிழ் இலக்கிய வரலாறு எழுதிய சான்றோர் அனைவருமே அதை விமர்சித்து, சங்கங்கள் இருந்தது பொய்யா? உண்மையா? என்ற கேள்வியில் நிற்கின்றனர். அதற்குப் பிற்பட்ட இலக்கியப் பாடல்களை மூற்படுத்தியும்—முற்பட்டவற்றைப் பிற்படுத்தியும் காட்டிய தெளிவான பிழைகளால் மூன்று சங்கங்களும் ஆய்வுக்குரியனவாயிற்று.

சமஸ்கிருதப் புராண மத மயக்கத்தில் தென்னாட்டில் சிவனிய மாலியத் தொண்டர்கள்; மேற்கண்ட பகுதியில் குறிப்பிட்டவாறு பக்தியில் மாரடித்துக் கொண்டிருந்தபோது முசிறி—நீலகண்டன் (நஞ்சுண்டன்) என்பவர் இறையனார் களவியல் உரையில்—நஞ்சுண்ட சிவநாராயணனை—மூன்று சங்கத்தையும் காட்டி எழுதி இருக்கிறார். இந்த உரையைப் பற்றிப் பலர் கூறியவற்றில் குறிப்பாக ஆசிரியர்-சிவராசப்பிள்ளை என்பவர்,

> ''பற்பல கிழார்களும், வணிகர்களும், பாவியற்றும் புலவர்களுமாக விளங்கி இருக்க; அவர்களை எல்லாம் புறக்கணித்து அந்தணர்கள் (பார்ப்பனர்) பெயரையே களவியல் (இறையனார் களவியல்) உரையில் தந்துள்ளமை, அந்த நூல் ஆரிய வல்லான்மையின் விளைவாகவே, எழுந்துள்ளது என்ற உண்மையைத் தான் காட்டுகிறது'' என உண்மையை எடுத்துக் கூறியுள்ளார்.

கடல் கொண்ட மூன்று தமிழ்ச் சங்கங்களிலும்; நாடும் வணிகமும், பெருமளவில் வெளியுலகத் தொடர்புடன் சீரும்

சிறப்புமாக இருந்தன. மக்கள் தாய்மொழியான தமிழில் பெரும் புலமை பெற்றவர்களாக—பல நூல்கள் படைத்தும், வழக்காடியும், பரிசுகள் பெற்றும், வழங்கியும் பரிமாற்றம் கொண்டிருந்தனர் என்பதே உண்மை.

முதற்சங்கத் தலைநகர் பஃறுளியாற்றினைச் சிலப்பதிகாரமும், இரண்டாம் சங்கக் கபாடபுரத்தை வால்மீகி வியாசர், சாணக்கியர் கூட அவர்களின் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர்.

குமரிய லெமூரியப் பகுதியை ஆய்ந்த பலநூறு பேர்கள்—ஹெக்கல் போன்றவர்களும், அங்கு நாடும், மக்களும், அரசும், நாகரீகமும், வெளியுலக வணிகத் தொடர்பும் அவை பெற்றிருந்தது உண்மை என்றே கூறுகின்றனர்.

தொல்காப்பியப் பாயிரம், சிறுபாண் ஆற்றுப்படை, புறநானூறு, அகநானூறு, பரிபாடல், பதிற்றுப்பத்து, மதுரைக் காஞ்சி, கலித்தொகை, மணிமேகலை, திருமங்கையாழ்வார் பதிகம், நாவுக்கரசர் பாடல், மாணிக்கவாசகர், சேக்கிழார், ஔவையார், பரஞ்சோதி, கம்பர் ஆகியோரும் சங்கத் தமிழும் இதை ஆங்காங்கு நினைவுபடுத்திக் கொண்டிருக்கின்றன(ர்).

மூன்று சங்கங்கள் இருந்தன. தமிழ் வளர்க்கப்பட்டது. நூல்கள் அங்கே பனை ஓலைகளில் எழுதப்பட்டு இருந்தன. மன்னர்களும், புலவர்களும், வணிகர்களும் பாடினர். ஆனால் அவை எல்லாம் அழிந்தன. எஞ்சியவைகள் பாதுகாக்கப்பட்டன. பெயர்த்து எழுதி வைக்கப்பட்டவைகள் கூட அழிக்கப்பட்டன. —திருத்தியும் எழுதப்பட்டன, புதிய கண்துடைப்புத் திணிப்புகளுக்கு பழைய முலாம் பூசப்பட்டன. இதுதான் உண்மை.

வடதுருவம் விட்டு வால்கா வழி வந்து, இமயக்கணவாய் வழியாக நுழைந்து சிந்துவெளியில் தலை தூக்கிய வரையில் ஆரியர் என்னும்; அவர்கள் பேசிய குறியீட்டுக் கொச்சை மொழியை ஆரியம் என்றும் முதன் முதலில் குறிப்பிட்டு எழுதி அவர்களை மிகைப்படுத்தியர் செர்மன் மாக்ஸ்முல்லர்—என்பதை அறியவும்.

வேதங்கள், வேள்விவாயிலாக ஆரியப் பழக்க வழக்கங்களை —சத்திரியர் பாதுகாப்புடன், வைசியர் முதல் ஈட்டுடன் அந்தப் பார்ப்பனப் புரோகிதர்கள், தமிழ்த்திராவிடர்களை அடிமைச் சூத்திரர்கள் ஆக்கியதோடு விட்டு விடவில்லை. என்ன செய்தார்கள்?

இதனை உறுதிப் படுத்துவது போல பாவாணர் கூறுவதையும் காண்போம்;

''தமிழரோடு தொடர்பு கொண்டு, அவர் மொழியையும், இலக்கியத்தையும் கற்று, தமிழ் எழுத்தினின்றும் கிரந்த எழுத்தை அமைத்து, ஆயிரக்கணக்கான தமிழ்ச் சொற்களை வேத மொழியோடு கலந்து, சமஸ்கிருதம் என்னும், அரைச் செயற்கையான மொழியைத் தோற்றுவித்து, தமிழ் நூல்களை எல்லாம் சமஸ்கிருதத்தில் மொழிபெயர்த்த பின், மூல நூல்களை அழித்து விட்டு—மொழிபெயர்ப்பு நூல்களையே முதல் நூலாகக் கூறி—காட்டி, இந்திய நாகரீகம் ஆரியர் கண்டதென, மேலையரும் நம்புமாறு நாட்டி விட்டனர்'' என்று மனம் வெதும்பிப் பெரு மூச்சு விட்டார்.

தமிழ் என்ற பெயரால் பசகோவிந்தம்—சிவ சிவா எனத் துந்தனாப் பாடிய மாலிய சிவனிய நாடோடி விளம்பரக் காசாயங்களுக்கு—மன்னர்களிடமும், மடாதிபதிகளிடமும் புகழ்ந்து சொல்லி—பரிசும், பட்டயமும், வாங்கிக் கொடுத்த புலவர்களால், இனமானம், சுய மரியாதை, தூய தமிழ் இலக்கண இலக்கிய அறிவுள்ளவர்கள் புறக்கணிக்கப்பட்டார்கள். சாதி வாரி வர்ணதர்மத்தால் அடிமைத்தொழில்களுக்கு நிர்ப்பந்திக்கப் பட்டார்கள், இடைப்பட்டு வந்த; இசுலாம், கிருத்துவத்தால், தமிழரில் நாலாஞ்சாதி, பஞ்சமர் சாதி, வினைவளர், கடையர் ஆகியோர் தழுவி ஆறுதல் பெற்று, கல்வியறிவு, உணவு, உடை, குடியிருக்க வீடு, என உரிமை கொண்டாடவும், புதிய சிந்தனைகளில் முயன்றனர்—முனைந்தனர்.

சமஸ்கிருதம் என்ற பெயரில் திரித்து மறைக்கப்பட்டிருந்த உண்மைகள் என—தமிழ் இலக்கியம், இலக்கணம் சமயப்பாகுபாடு, இசை, தத்துவக் கருத்துக்கள், இயற்கை வாதம் முதலியன பிறநாட்டவர்களால் விமர்சிக்க எடுத்துக் கொள்ளப் பட்டன.

இந்து தேசியம் (தர்மம்) என்ற பெயரில் சாதிவர்ணம் நியாயப்படுத்தப்பட்டு,—சுதந்திரம் பறிமுதல் செய்யப்படும் பார்ப்பனர்களால் அடிமை கொள்ளப் பட்ட மக்கள்,—பல மொழித் தலைப்புகளில் ஏக இந்தியாவிலும், சர்மா. பாண்டே, ராவ், என்பவனவாக மறைந்து ஒரு இனத்தை அழுத்திக் கொண்டிருப்பவர்களின்—கருத்துக்களின் பொய்மையை முச்சந்திக்குக் கொண்டு வந்தனர்.

விளம்பர மதமும், தமிழ் ஆய்வும் எனவாக அவர்களில் ஆரம்ப கால சமணர், புத்தர், ஆகியோருடன் பிற்பட்ட

இசுலாமியர், கிருத்துவர், ஆகியோருடன், ஐரோப்பியரும் வந்தனர். அவரவர் மதக் கொள்கைகளைச் சொன்னாலும், ஆரியர்கள் என்போர் இந்தியாவில் நுழைந்த காலம் முதல், அவர்களின் அநாகரீகத்தை எதிர்த்து தொடர்ந்து குரல் கொடுத்தவர்களோ பார்ப்பன இந்துமதப் பகைவர்களான சமண, பௌத்தர்களே ஆவர்.

இந்து மதம்—வழிபாடு, என்ற போர்வையில் அடிமைப்பட்ட திராவிடச் சூத்திரர்களுக்கு மறைக்கப்பட்ட அடிப்படைச் செய்திகளை எடுத்துச் சொல்லி, சிந்திக்க வைத்த தமிழ் அறிஞர்களில்; இசுலாமியர்களும், கிருத்தவர்களும் வருகிறார்கள்.

ஐரோப்பா, ஆசியப் பார்வையாளர்கள், பயணிகள், வணிகர்கள், பாதிரியார்கள் எனப்பலர் அனைத்திந்திய மாநிலங்களிலும், ஆரிய மாயையில் சிக்குண்டு கிடந்தவர்களைச் சிந்திக்க வைத்து—தமிழ் மொழி மேம்பாட்டையும், வரலாற்றுத் தெளிவையும், சிறப்பையும் எடுத்துச் சொன்னார்கள்.

அவ்வழியில்; சங்கம் மருவிய காலமாக சமணர்களின் அற நூலாகத் தமிழில்—தமிழ் மக்களின் பண்பாடு, நிகழ்வுகளைச் சித்தரிப்பனவாக, நாலடியார், நான்மணிக்கடிகை, பழமொழி, ஏலாதி, திணைமாலை 150; காவியமாக, சிலப்பதிகாரம், சிந்தாமணி, வளையாபதி, சூளாமணி, நீலகேசி, உதயணன் கதை நரிவிருத்தம், இலக்கணமாக; யாப்பருங்கலக்காரிகை, பாவிருத்தி நேமிநாதம், நன்னூல், அகப்பொருள் விளக்கம், தமிழ்நிகண்டு, சூடாமணி நிகண்டு, நிவாகர நிகண்டு, எனவும் வாய்நூலாக :- நெல்லிலக்க வாய்ப்பாடு, சிறுகுழிவாய்ப்பாடு, எண்சுவடி, கணித நூல், சினேந்திரமாலை, ஆகியன அறிந்து படிப்பிக்கப் பட்டவைகள்.

அவ்வாறே பௌத்த மதம் தழுவிய தமிழறிஞர்களின் நூல்களுமாம்'. கி. மு. 300—அசோகன் காலத்திலேயே தமிழகப் பூம்புகார், உறையூர், பூதமங்கலம், ஆகியவற்றில் அதன் பிக்குகள் பள்ளி நடத்தியுள்ளனர். நற்றிணை என்ற சங்கத் தமிழ் நூலில் இடம் பெற்ற 72-வது பாடல், பௌத்த இளம் போதியர் என்பவர் பாடல். தமிழில் உள்ள சீத்தலைச் சாத்தனாரின் மணிமேகலை, குண்டலகேசி, சித்தார்த்த திருப்பதிகம் ஆகியன பௌத்தம் தந்த தத்துவக் கருவூலங்களாகும். இங்கே ஒன்றைக் குறிப்பிட வேண்டும். இலங்கைக்கு உண்மையான பௌத்தம் பரப்பச் சென்ற மகிந்தன் சங்கமித்திரை தவிர; சீனாவுக்குப் பௌத்தம் பரப்பப் போன காஞ்சிபுரத்து

போதிதர்மர், விச்சிரபோதி, அனுராதா; திக்நாகர், தர்மபாலர் அனைவருமே பெரும்பாலும் பௌத்தவாதத்திற்கு ஆரிய வேத உபநிடதம் கூறி, பௌத்தக் கொள்கைகளை தரை மட்டமாக்கி விட்டார்கள்.

அசோகனின் பௌத்த தமிழ்க் கல்வெட்டுக்களை பிராமி எனச் சொல்லி சமஸ்கிருத மயமாக்க — திருத்தி எழுதிய பார்ப்பனர்கள்; அசோகன் சூத்திரனாயிற்றே பார்பன எதிரியா யிற்றே என்று அவன் பரப்பிய புத்தரின் சிந்தனைகளை சூழ்ச்சி கொண்டே சிறுகச் சிறுக அழித்து விட்டனர்.

அசோகனின் முதுமைக் காலத்தில் இரண்டாவது, பட்டத்து அரசியாக வந்த திஷ்யரச்சிதா, என்பவளைக் கொண்டு, அன்றைய பார்ப்பனர், புத்தர் ஞானம் பெற்ற போதி மரத்தை விசமுள் வைத்து (நச்சு முள்) அதைக் காய்ந்து கருகும்படி— விழும்படி செய்த சூட்சியை சீனயாத்திரிகரான பாகியான் என்பவர் குறிப்பும், இலங்கையின் மகாவம்ச நூலும் கூறு கின்றன.

அயோத்திலும் மதுராவிலும் 1000—இரம் ஆண்டுகாலப் புத்தர் கோயில்கள் இருந்தன. பிறகு 300 ஆண்டு கால மசூதிகள் இருந்தன. கேரளக் கொடுங்கலூரும் சபரி மலை சாஸ்தா கோயிலும் ஒருகாலத்தில் சங்கம்பாடி புத்தர் கோயில்களே ஆகும் என்று வரலாற்றாய்வாளர் கூறுகின்றனர். இந்து மதம் என்ற போர்வையில் தர்ப்பணங்களை—முன்னோடி ஏவலாளிகளாக வைத்துப் பயன்படுத்தும் வைணவப் பார்ப்பனர் கள் அந்த பூமியை இன்று பௌத்தர்களுக்கு விட்டுக் கொடுப் பார்களா?

புத்தரைத் திருமாலின் பதினோறாவது அவதாரமெனப் பிற்பட்ட-மந்திரதந்திராயனப் பௌத்தர்களை வைணவம் கைக் குள்போட்டுக் கொண்டு விமர்சித்த போது—பௌத்த ஆலயங் கள்; குருவாயூரப்பன் அனந்தபத்மனாபன் உட்பட, அவைகளைக் கண்ணன் கோயிலாக்கினார்களே யொழிய—அதைவிட்டுக் கொடுக்க வில்லை. அவ்வளவு தான். திணிக்கப்பட்ட அவைகள் விமர்சிக்கக் கைகூடுவதில்லை.

இந்திய வரலாற்றுச் சண்டையில் மதச்சின்னங்கள் அவ்வப் போது நாடாண்ட அரசுகளால் அது நன்மையோ? தீமையோ? சிறப்பிக்கப்பட்டும் வெறுக்கப்பட்டும் வந்திருக்கின்றன.

வெள்ளையரிடமிருந்த இந்தியா விடுதலை பெற பார்ப்பனரல்லாத, அனைத்து மக்களும் தான் தியாகம்

செய்திருக்கின்றனர். ஆனால் வெளியார் படையெடுப்பு ஆளுகையில் ஐந்தாம்படையாகச் செயல்பட்டவர்கள் — சோதிடம் பார்த்து இருட்டில் இந்தியச் சுதந்திர விளம்பரச் செய்தியைச் சொன்னார்களே—ஏன்?

'இடைப்பட்டு வந்து இந்தியாவை ஆட்சி செய்தவர்கள் போய்விட்டார்கள். இனி நாங்கள்தான் இனி ராமராச்சியம் தான் நடக்குமென்று சபதம் எடுத்துக் கொண்டனரா என்ன?''

காசுமீர் பிராமணர்தான் மாண்புமிகு நேரு, வைசிய வைணவச் சனத்தோதான் தவப்புதல்வர் காந்தி என மகாக்கனம் சர்வ பள்ளி, பாண்டே, பனர்சி, முகர்சி, சிங், பட்டுக்கோட்டை 'சங்கர்'தயாள், நரசிம்மராவ் என அனைவருமே 'நம்மவர்'தான் என்ற துணிச்சலில் பாகிஸ்தானிலிருந்து வந்த அத்வானி குழுவினர் நதிக்கரை மடங்களில் தூங்கும் சோம்பேறிகளை— சாமியார்களைக் கர்சேவக்காரர்களாகக் கொண்டு, தேசியம், ஒற்றுமை என வாயளவில் கூறிக் கொண்டு, நிற, இன வெறியைக் காட்டும் விதத்தில் அயோத்தி மசூதியை இடித்தார்களே!— மதுரா மசூதியைக் குறிவைத்தலைகின்றனரே! இது நியாயமா? யாரிடம் இருக்கிறது தேசிய உணர்வு? இவர்களிடமா?

இதோ! ''மத உணர்வு''—என்பதைத் தூண்டுவது இரத்த வெறிபிடித்ததாகும் என்று'' ஒரு அப்பாவி முஸ்லிம் மீது இந்து தொடுக்கும் தாக்குதல் எவ்வளவு மோசமானதோ—அது போலவே இந்து மீது முஸ்லிமின் தாக்குதலும் அதே அளவு மோசமானதாகும்'' என்றார் புரட்சிப் பெண் பங்களதேஷ் தஸ்லிமா நஸ்ரீன் (சலமான் குஷ்டியின் கடிதம்) பகுத்தறிவாளி இந்த நஸ்ரீனிடமே இருக்கிறது தேசிய உணர்வு.

தேசிய ஒருமைப்பாட்டில் அறிவு பூர்வமான ஆய்வு கண்ணோட்டமுள்ள (நாத்திகர்) கடவுள் மறுப்புவாதக் கொள்கையுடையவர்களை, ஆத்திகர்கள் சடங்கு, சம்பிரதாயங்களைக் காத்துக் கொண்டால் ஒழிய, தமது நிறமும், பொய்யும் வெளிப் பட்டு விடுமென்று, பழைமையில் நம்பிக்கை வைக்க வேண்டுமென வலியுறுத்துகின்றார்கள். சாத்திரம் பொய் என்றால் ''சந்திர கிரகணத்தைப்பார்!'' என்று சீனி வெடி (சின்னவெடி) வெடிக்கிறார்கள், புவியியல் ஆய்வு பூர்வமாக திராவிடயோக, பௌதிக, சித்தாந்த நெறியின் கணிப்புகள், அந்த விஞ்ஞானச் செய்திகள், புதிய புதிய வாழ்வியல் மேம்பாட்டிற்கு முன்னோடிகளாகும். இதில் ராகு, கேது எனப்பாம்பு விழுங்குவதெல்லாம்— அப்படிச் சொல்லுவது மனிதனைச் சிந்திக்க விடாமல்—கட்டாய

அச்சுறுத்தல் சொல்லி புனிதம் கற்பித்து ஏமாற்றுவது சிறு பிள்ளைத்தனமாகும்.

சித்தாந்த யோகத்தில் சராசரி—ஒரு மனிதன்—அந்தப் பயிற்சியில் ஒரு குறிப்பிட்ட நேர வரையறை கொண்டு, இரண்டு நாசித்துவாரங்களிலும் காற்றை இழுத்து விடுவது—வலது, இடது என சூரிய கலை—சந்திரகலை என்ற தட்ப வெப்பக் காற்றிழுப்புகளாக—மூச்சு இழுப்பது—விடுவது, என அதற்குரிய பயிற்சி முழுமையின் வாயிலாக ஆயுள்—இத்தனை வருடம், மாதம், நாள், மணி, விநாடி என கணித்து விட முடியும், இதற்குப் பார்ப்பன மூலாம் படை புனிதம் கற்பித்து, தங்களால் சொல்லப்பட்ட—கண்டுபிடிப்பு—கருத்து என வேதத் திற்குள்ளும் இதனைத் திணித்து வைத்திருக்கிறது.

'அறிவு—ஆய்வு' என்பதை இருபதாம் நூற்றாண்டிலும், தங்களுக்குச் சாதகமாக விமர்சித்து,—வினைப்பயன், நம்பிக்கை என,—வளரும் தலைமுறையினரை, மாட்டடிமையாக்குபவர் களை ஒரு பொருட்டாக விமரிசனைக்கு எடுத்துக் கொள்ளக் கூடாது. ஆனாலும் பகுத்தறிவுச் சிந்தனையே நம்மை சீர்திருத்த மனிதனாக்கும் என்பதில் தெளிவு கொள்ள வேண்டும்.

"நமக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை. மதக்குருக்களும் நிலப்பிரபுக்களும், பூர்ஷ்வாக்களும் கடவுளின் பெயரைக் கிளப்பி விட்டு அவர்கள் சுரண்டல்காரர்கள் என்னும் முறையில் அவர்களுடைய நல உரிமைகளை வளர்த்துக் கொள்கிறார்கள் என்பதை நாம் நன்கு அறிவோம்" என்று புத்தரின் 'அனாத்ம வாதம்' கூறிய ருசியலெனின், நாத்திக சாருவாக்க லோகா யதவாதிகளாக விளங்கிய; காரல் மார்க்ஸ், பெர்ட்ரண்ட்ரஸ்சல், பெர்னாட்ஷா, பண்டிட் நேரு—ஆகிய மேதைகள் நவீன சிந்தனையை வலியுருத்தியவர்கள்.



# 10

# முன்னுரிமை என்ற பெயரில் முரண்பட்ட திணிப்புகள்

தமிழ் இலக்கியம், இலக்கணம் வரலாறு வளர்ச்சி, வணிகம், கணிதம், வெளியுலகச் சிறப்பு என்று கூறினாலும், பிற்பட்ட கால வழக்கில்—தழுவிக் கொள்ளப்பட்ட பிறமத வழக்கில், பெரும் பான்மையான—இந்து மதமென்ற போர்வையில் சமற்கிருத மயமான ஆரியப் புராணச் சின்னங்கள்; அதன் போராட்டங் களில் இடிந்தும், சிதைந்தும், மண் மூடிப் போனதாகவும், பல விலாசமின்றிப் போனாலும் அனைத்து இந்தியாவிலும் கோயில், குளம், நதிக்கரை, மண்டபங்கள், புண்ணியத் தீர்த்தம், புரோகிதம், சடங்கு நிதி, சாதி வருண அமுலாக்கம், சமுதாயக் கடைப் பிடிப்புகள், கற்சிலைகள், கல்வெட்டுகள், சிற்றூர்ப் பற காளி, கறுப்பன், மூளி, மூக்கி என கிராம தேவதை வழிபாடு—விழா—ஆண்டு விழா—நினைவு வழிபாடு—ஐதிகக் கடைப் பிடிப்பு—பஞ்சாங்க மரபு—பிறப்பு—வளர்ப்பு—செழுமை—முதுமை—சாவு என அனைத்திலும் பற்றி, உயிரோடு ஒட்டிக் கொண்ட மூட நம்பிக்கைகள் அந்தந்த மத அடிப்படையில் அவரவர் மத வளர்ச்சியிலும், அச்சத்திலும், நம்பிக்கையிலும் இன்றும் கடைப் பிடிக்கப்பட்டு வருகின்றன.

இவற்றின் வாயிலாக வர்ணாசிரம சமூக அந்தஸ்து என்ற சிறுபான்மைப் பார்ப்பனர்கள்—தங்களின் ஆயுதங்களென—கோயில், குளம், நதிக்கரை, சம்பிரதாயம் சடங்கு எனக் கூறி, அதைத் தேசியம் என்ற போர்வையில்— பெரும்பான்மை மக்களின் அனைத்து வளர்ச்சிகளுக்கும் முட்டுக்கட்டைகளாக நிற்கின்றனர்.

கேரளாவுக்கும் அரேபியாவிற்குமுள்ள மிகப் பழமையான வியாபாரத் தொடர்பில் அறியுமிடத்து சாலமன் காலத்திலேயே அது சிறப்படைந்திருக்கிறது. முகமது நபியின் மறைவுக்குப் பிறகு கி. பி. 644-இல் மாலிக்குபனுதினார், சரக்ஃபனு என்பவர் களின் தலைமையில் 40—பேர் அடங்கிய முஸ்லீம் மத விளம்பரக் குழுவினர் சேரக் கொடுங்கலூருக்கு வந்திரங்கி இருக்கின்றனர். தாழ்த்தப்பட்டவர்களும், மீனவர்களும் ஆரம்பத்தில் அந்த மத வாதிகளால் தழுவப்பட்டனர். பிறகு கி. பி. 712-இல் முகமது பின் காசிம் என்பவரின் வட இந்தியப் படை எடுப்பும் அவை தொடர்ந்த குறிப்புகள் வரலாற்று ஆய்வுப் பயணிகளான அல்ப ரூணி, மற்றும் இபனுபத்தூத்தாவும் (கி. பி. 1342—1347) எழுதிய நூல்களில் இந்த ஆரம்ப இகலாம் அறியப்படுகின்றன.

இந்திய வரலாற்றில் கி. பி. 999-க்குப் பிறகு வந்த மகமட் கஜினி, கோரி, டில்லி சுல்தான்கள், அடிமை வம்சம் என கில்ஜி துக்ளக்சையதுலோடி. ஆகியோரின்வழியில்சாம்ராஜ்ய முன்னேற் றத்தில் பாபர், ஹுமாயூன், செர்ஷா, அக்பர், சகாங்கீர், சாசகான் அவுரங்க சீப் என கி.பி. 1707-இல்அவரோடு முடிந்த மொகலாயர் ஆட்சியில் அனைத்து இந்தியாவையும் ஆட்சி புரிந்த அவர்கள்— பயங்கர மதவெறியர்களாக உள்நாட்டு எதிர்ப்புகளைத் தோற் கடித்து—இரும்புக்கரம் கொண்டு நசித்து—இந்தியாவை ஒரு மித்து இஸ்லாம் ஆக்கி இருப்பார்கள். முயன்றார்கள். ஆனால் அது கைகூட வில்லை. அதாவது ஔரங்கசீப்பை முதன்மைப் படுத்தும் காழ்ப்பு இருந்தாலும், நாட்டுஒற்றுமை அமைதிக்காக— மற்ற மதத்தினர், அவர்களின் மொழி, கடைப் பிடிப்பு, நாகரீகம் ஆகியவற்றை (இஸ்லாமியர்) மகம்மதியர் மதித்தனர்—போற்றி யும் பாராட்டினர். அத்துடன் புண்படுத்தவும் செய்தனர்.

அன்றைய மொகலாய ஆட்சி நிர்வாகங்களில் பதவி வகித்த பார்ப்பனர் தலை தூக்க முடியா விட்டாலும்—கான்சாகிப் பட்டம் போன்ற—அவர்கள் கொடுத்த உயர்ந்த பட்டங்களைப் பெற்றுக் கொண்டு—அனைத்து இந்தியாவிலும், திராவிட மொழிவாரி—ஏடுகளை—பழம் பெரும் அறிவுச் செல்வங்களை பார்ப்பன தர்மங்களுக்கு எதிரான — பிடிக்காதவற்றை இஸ்லாமிய துறைத்தனத்தார்களுக்கு அவர்கள் ஆணைப்படி சுடுதண்ணீர் போடும் அண்டாக் குண்டாக்களுக்கு விறகுக் கட்டைக்குப் பதிலாகப் பயன்படுத்தி நெருப்பிட்டே ஒழித்தனர். மொகலாயர் வருகைக்கு முன்னரே அனைத்திந்திய நிலத்திலும் ஆங்காங்கிருந்த திராவிடப் பாரம்பரிய அரண்மனைக் கோட்டங் களைப் பார்ப்பனர்கள் புரோகிதர்களைக் கொண்டு புனிதம் கற்பித்து கோயில், குளம் என்று அறக்காவல், தேவஸ்தானம்,

ஆதினம் என மக்களால் ஆங்காங்கு கண்டெடுக்கப்பட்ட விலை யுயர்ந்த நவரத்தின ஆபரணம், கற்கள், தங்கம் ஆகியவற்றை கோயில்களில் ஒப்படைக்க வைத்து, பிராமணர், சத்திரியர், வைசியர் என்று பங்கு போட்டுக் கொண்டனர். பொது மக்களின் காணிக்கை— மன்னர்கள் தரும் வெகுமதி என கோயில் உண்டியல்கள் நிரம்பிய பெருவாரியான செல்வக் களஞ்சியங் களைக் கேள்விப்பட்டே முதன் முதலில் கஜினி மகமுது சோம நாதபுர ஆலயத்தைக் கொள்ளையடித்துப் பெரும் பொருளைக் கொண்டு சென்றான்.

ஆனாலும் மேற்கு உத்திரப் பிரதேச மதுராவை கி. பி 1017-இல் கஜினி கொள்ளையடித்த போது மத சம்பந்தமான முன்னுரிமைச் செய்திகளில் அந்த இடிபாடுகளில் சமண— பௌத்த மண்டபம், ஆதி கால அந்தச் சிலைகளே இருந்ததையும் கஜினி பற்றிய படையெடுப்பு நூலான 'தாரிக்—இ—யாமினி' என்ற நூல் விரிவாகக் கூறுகின்றது.

> இன்னும் கூறுமிடத்து: மதுராவின் அகழாய்வு களில் கூட ஆரிய கிருஷ்ணன் சிலை இல்லை. சமண பௌத்தச் சின்னங்களே ஏராளமாகக் கிடைத்ததாக அறிஞர்கள் எடுத்துக்காட்டி இருக்கின்றனர்.

கேரளம் தழுவிய கர்னாடக மாநிலம், சைணம் பரவி இருந் தமையும், திருவாங்கூர், கொடுங்கலூர், கோழிக்கோடு, உசூர் கோட்டைப் புதை பொருள்கிடைப்பான புத்தர் சிலைகளும் இருந்தமை கொண்டே தூண்டப்பட்ட பார்ப்பன ஆதிக்கம் அவற்றை ஒழித்தன. சங்கராச்சாரியாரின் பெயரில் சொல்லப் படும் பௌத்தச் சின்னங்கள் ஒழிப்பு—அந்த மண்டபங்களில் இந்து மதச் சிலைகள் பதிப்பு—புத்த பிக்குகள் கொல்லப்பட்டது பிட்சுனிகள் பலவந்தம் செய்யப்பட்டது.—போன்றனவெல்லாம் அனைத்து இந்தியாவிலும் தென் மாநிலம் உள்ளபட உறுதிப்பட்ட தலையாயச் செய்திகளாகும்.

> அயோத்தி முதல் கேரள ஐயப்பன் கோயில் வரை சமண பௌத்தப் பள்ளிச் சங்கம் பாடிகளே அதிகம் இருந்திருக்கும் போது— ராமன் பிறந்த இடமே அயோத்தி இல்லை என்றபோது—கிருஷ்ணன் பிறந்த இடம் மதுரா என்று சான்று காட்ட முடியாது. எப்படிச் சொல்வது?
>
> மேலும், [மதுராவின் அகழாய்வில் ஆரியரல்லாத (திராவிடத் தமிழர்)வர்கள் வாழ்ந்த தடயங்களே மிக

கிடைத்திருக்கின்றன என்பதை கே. எம். பனிக்கரும், ஏன்—மாக்ஸ்முல்லரும் கூறுகின்றனர். ஆரியர் இந்தியா விற்குள் நுழைந்த (கி. மு. 1500—600) ஆய்வுச் செய்தி களிலும்;பனிக்கரும், மாக்ஸ்முல்லரும் ஒரே அடிப்படைக் கருத்தினையே கூறி இருக்கின்றனர்.

பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப் பிறகு வைணவப் பார்ப் பனர்களான வங்காள கோஸ்வாமிகளும், (கி. பி. 1600) சைதன் யர்களும், சைன—பௌத்த கேந்திரமாக விளங்கிய பௌத்த மதுராவை—அந்த மத நூல்க் கதைகளை அப்படியே எடுத்து; அதில் பிருந்தாவன கிருஷ்ண லீலையைத் திணித்ததற்கான பல ஆதாரங்களிருக்கின்றன.

கண்ணனைப் பற்றியும் அவன் ஆதரித்த பாண்ட வர்கள் பற்றியும் கூறுமிடத்து : இராங்தி, கார்வே என்ப வர்கள்—எழுதிய 'கண்ணன் கற்பனைக் கடவுள்'' என்பதை உறுதிப்படுத்த கி. பி. இரண்டாம் நூற்றாண் டில் வாழ்ந்த ஆரியன் என்ற ரோம நூலாசிரியர் எழுதிய கிரேக்கர்களின் இதிகாச ஹெர்குலிசின் அதிவீர தீர பராக்கிரமச் செயல்களை கி. பி. மூன்றாம் நூற் றாண்டில் பலராமகிருஷ்ணனுக்குப் புனைந்தனர் எனத் தெளிவு படுத்துகிறார்.

வெபர், தத்தா என்ற இரு இந்திய விஞ்ஞானிகள் கிருஷ்ணனுடன் தொடர்பு கொண்ட; "பாண்டவர்கள் பல பேர் ஒருத்தியைத் திருமணம் செய்து கொள்ளும் அநாகரீக வாழ்க்கையுடையவர்கள்'' எனக் குறிப்பிடு கின்றனர்.

அனைத்திற்கும் முத்தாய்ப்பாக, சாதி வருணத்தில் சமத்துவம் தேட முனைந்து, தோல்வியடைந்த மகாத்மா காந்தியடிகளே; குப்தர் காலத்தில் எழுதப் பட்ட "மகாபாரதம், அதன் போர் ஆகியன வரலாற்றுத் தொடர்புடையவை அல்ல'' என்றார்.

ஆனாலும் அவர் மாணவரான பழைய சனாதிபதி சர்வ பள்ளி டாக்டர் **இராதா கிருஷ்ணனோ** புராண இதிகாசத் தத்துவர். அவரோ;

'மதுராவில் கிருஷ்ணன் பிறந்தான்' என்பதை, அந்தப் பொய்யை நியாயப்படுத்தி, நிலை நிறுத்தப் பெரும்பாடு படுகின்றார். என்ன?

"சந்திர குப்தரின் அரசவையில் யவனராச தூதனாக இருந்த—மெகஸ்தனிஸ் (கி. மு. 300) அக்காலத்தில் கிருஷ்ணனை மதுராவில் வழிபட்டு வந்தனர் என்ற செய்தியை எழுதி வைத்துள்ளார்." என்று—பிற்பட்ட சாதாரணச் செய்தித் திணிப்புகளை நியாயப்படுத்துகிறார். இது விரும்பத்தகாத வீணான ஆய்வாகும்.

அவ்வழி வந்த பார்ப்பனர்கள்—இந்திய மக்களைப் | பயமுறுத்தி—சுரண்டிச் சேர்த்துக் குவித்து வைத்த கோயில், ஆதினச் செல்வங்களை—கசானாக்கள் அனைத்தையும், இஸ்லாமியர் தமது கோட்டைகளுக்குக் கொண்டு சென்று நிரப்பிக் கொண்டனர். அந்த வழி கொள்ளையடிப்பில் கொண்டு போனவையே பிரிட்டிஷ் ராணிகளின் மேலாடைப் பட்டையில் வைத்துத் தைக்கப்பட்டும், பின்னி வைக்கப்பட்டும் இருக்கும் அந்த கோகினூர் (மலையின் ஒளி) வயிரமும், அவர் படுக்கை அறையிலிருக்கும் (நாதர்ஷா) சாசகானின் மயிலாசனமும் ஆகும்

பார்ப்பன அச்சுறுத்தலில் கோவில்களுக்குப் போன பிறகும் காணாமல் போன பல இரத்தினங்களில்—நாகரத்தினங்களில் குறிப்பாக இன்றும் தமிழகத்தின் தென்கோடி—கன்னியாகுமரி தேவியின் மூக்குத்தியிலும், மதுரை மீனாட்சி மூக்குத்தியிலும் அவை—இரண்டு கற்கள் மின்னிக்கொண்டிருக்கின்றன,

புனிதத் தன்மையும், இராசியும் கூறப்படும் நீல வயிரக்கல் வகையில் பதினான்காம் நூற்றாண்டு லூயி மன்னனின் கிரீடத்தில் வெட்டி எடுக்கப்பட்ட ஒரு வயிரம் பிரஞ்சுப் புரட்சியின்போது திருட்டுப் போய்விட்டது, அதன்பிறகு 1830 இல் அதை விலைக்கு வாங்கிய ஹென்றி பிலிப் வறுமையால் வாட; எட்வர்டு மெக்லின் அதை வாங்கி அவரும் வறுமையில் இறந்தே போக: 1958இல் நியூயார்க்கைச் சேர்ந்த ஆரிவில்சன் என்பவர் அதையும் விலைக்கு வாங்கி வாசிங்டனில் உள்ள ஸ்மித் சோனியன் என்ற இன்ஸ்டியூட்டுக்கு வழங்கிவிட்டார்.

ஆனாலும் அதற்குமுன்னர் தென்னகத்து ஒரு கோயிலில் சாமி சிலையில் கண்ணாகப் பதிக்கப்பட்டிருந்த 300—காரட் எடையுள்ள வைரத்தை ஒரு பிரஞ்சு ராணுவ வீரர் திருடி 1775இல் இளவரசர் கிரிகோரி ஆர்லோப் என்பவரிடம் சேர்த்தார். அதை 189-60 காரட்டு எடை ஆக்கி ரசியப் பேராசிரியர் கோதரினினுக்குப் பரிசுப் பொருளாகக் கொடுத்து அதுவும் தற்போது ருசிய கிரெம்பிளினில் உள்ள வைரக் களஞ்சியத்தில் காட்சியளிக்கிறது.

நல்ல வேளை ராசி பார்த்தாலும் புனிதம் கற்பித்தாலும் அவைகள் திரும்பவும் கோயில் மடப்பள்ளிக்குப் போகாமல்

பொருட்காட்சிகளுக்குப் போயினவே--அவையே மறுமலர்ச்சி எனக் கொள்ளவேண்டும்.

மூட நம்பிக்கைகளில் தங்களின் பூர்வீகக் கடைப்பிடிப்பு என அடிமைத்தனத்தில் வாழும் மக்கள் இனத்தைப் பயன்படுத்தி—அந்த வருண தர்மக் காவலர்கள்,—தாங்கள் அதற்குரிய அதிகார சந்ததிகள்யென சமூக அந்தஸ்துப்பெற்ற பார்ப்பனர்—பட்டம், பதவி வகிப்புகளில் ரகசிய உளவாளிகளாக இருந்தாலும்—சமயம் கிடைத்தால் தங்கள் சரிவுகளைச் சரிக்கட்ட பயித்தியக் காரார்களான—அன்றாட வயிற்றுப் பிழைப்புக்காரர்களை கும்பல் சேர்த்து, கொடி பிடிக்க வைத்து அணிதிரட்டி விடுவார்கள். பொய்யை உண்மையாக்கப் பார்ப்பனர்கள் புராணக் கதைகளைச் சொல்ல முடிகிறதேயொழிய வரலாறு சொல்ல முடியவில்லை. உருப்படாத கோயில்களின் மடப்பள்ளியில் உருண்டைக் கட்டிக்காகக் கார்த்து நிற்பவர்கள் பாவம்!

> இன்றைய இந்தியாவிற்கு வரலாறு தெரியவேண்டுமானால்—திராவிடத் தமிழர்களுக்கு (கி. மு. 15000) லெமூரியா குமரிக்கண்டம் முதல் தொடர்ந்து இமயச் சிந்துச்சமவெளிக்கே வரவேண்டும். ஆரியப் பார்ப்பனர்களுக்கு வரலாறு சொல்லவேண்டுமானால் அதற்குப் பிற்பட்ட (கி. மு. 1500) அவர்களின் சிந்து கங்கை வழி நுழைவும், அவர்கள் பாடியுள்ள ருக்வேதச் செய்திகளையுமே தான் சொல்ல வேண்டும், இது தெளிவான--செறிவான ஆய்வறிஞர்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட கருத்தாகும்.

இதற்கு மாறுபட்ட ஆரியப் பார்ப்பன மேல்தாவிகள் இந்து வரலாற்றில் அதை மறைத்து புராணக் கட்டுக்கதைகளின் வாயிலாகத் தங்களை முன்னுரிமைப் படுத்திக்கொள்ள 'ராமா; கிருஷ்ணா என்று யுகாதியுகம் கூறுகின்றனர். ஒரு ஆரியப்பட்டாக் கதைக்குக் கூறப்பட்ட ஒன்பது அவதாரங்களைவிட, பத்தாவது ராமன் அவதாரத்திலும், மகாபாரதத்திலும், பார்ப்பனர்—தங்களின் தற்காப்பு முட்டுக் கொடுப்புகளாக பரவலான வரலாற்றுச் செய்திகள் சில திணிக்கப்பட்டுள்ளன. அவைகளும் காலவரையில்—ருக்வேதத்திற்குப் (கி. மு. 1300) பிறகும்—குப்த சுங்கமித்திரர் காலத்திற்கும் முன்னும் வருகின்றன.

> இந்து மதம் என்ற பெயரில் ருக்வேத கால முதல் ஆரிய வைணவப் பார்ப்பனர்களுக்கு--கடவுள் மறுப்பு வாதம் கூறிய பௌத்தர்களைப் போல் சமணர்களும், நாத்திகர்களாக இருந்தாலும்;—சமண மத நூல்களில்

வாசுதேவன் என்ற கிருஷ்ணன் தழுவிக் கொள்ளப்பட்டு —சொர்க்க நரகக் கொள்கையை ஜெயனர்கள் தொடர்ந்து (இன்றும்) ஒத்தூதி வந்ததால்;—பார்ப்பனர்கள், தங்களின் நேரடியான பகைவர்களாக பௌத்தர்களை எதிர்த்தது போல—சமணர்களை எதிர்க்கவில்லை என்பதும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய கருத்தாகும்.

கி. மு. (3000-ம் வருடத்திய உத்திரப்பிரதேச பரீலி பருக்காபாத் நாடுகளடங்கிய ராஜஸ்தானின் மாத்யாஸ்து சூரசேனம் என்ற நாட்டுத் தலைநகர் மதுராவையும், மேலே குறிப்பிட்ட அதன் சுற்றுப்புறத்தையும் ஆட்சி செய்தவர்கள் யார்? அசுரர்கள் ராட்சசர்கள் என்று பழிக்கப்பட்ட பெரும் திராவிடத் தமிழ் மன்னர்களே அவர்கள்.

பிற்பட்ட சமண மத நூலான ''விவித தீர்த்த கல்பம்'' கி, மு. 2500—க்குரிய ஜெய்ன பௌத்தம் கூறும் போது அது கி. மு. 800இல் 23 ஆம் தீத்தங்கர் பார்சுவநாதரை மிகைப் படுத்தினாலும்--மதுராவில் 24ஆம் தீர்த்தங்கர நிகண்டநாதர்—மகா வீரர், இந்திர பூபதி, கி. மு. 465இல் மதுராவுக்கருகிலுள்ள சவுராவியில் இந்திர பூபதியின் மரணம் என இப்படிப்பட்ட பல செய்திகளைக் கூறுவதை நாம் ஏற்க வேண்டும்.

விவசாயம் செய்வதே பாபம் என்ற சமண மதக் கொள்கை—பிறர் உழைப்பைச் சுரண்டிச் சாப்பிடுவதிலும்—உழைப்பாளிகளுக்குப் பாப மன்னிப்பு வேண்டுதல் என, வட்டித் தொழிற் துறையில் மற்றவரை அடிமைப்படுத்திக் கொண்டு முதலாளிகளாக அன்றைய சைனர்,—உச்சயினி. தட்சசீலம், பாடலிபுத்திரம், முதலிய கேந்திரம் கொண்டு மதுராவை ஒரு வியாபார புரியாக நடுநிலைப்படுத்தி இருக்கின்றனர்.

சமண நிகண்டநாதரான மகாவீரர் காலத்திலேயே, பௌத்த சித்தார்த்தரும் வாழ்ந்தவர். அவருடைய கொள்கையும் மதுராவில் இருந்தது. மதுராபுரிச் சூரசேர மன்னரில் பலர் புத்தரை ஆதரித்தனர்.

கி, மு. 350-இல், மதுரா திராவிட சூரசேர மன்னர் வழியினரை, சமண-பௌத்தம் கலந்த நந்தன்—மகா பத்ம நந்தன், கீழ்ப்பணிய வைத்தான். பிறகு மௌரிய சந்திரகுப்தர், பேரரசன் பிந்துசாரன்; அவன் மகன் அசோகன் (கி. மு. 373—232) என வரலாற்றில் மதுரா—சைன பௌத்த கேந்திரமாகவே விளங்கிற்று.

கி. மு. 137-ஆண்டுகளில் சைன—பௌத்தம் கலந்த மௌரியக் கடைசிப் பேரரசன் **பிரகத்ரதன்** என்பவன் கொல்லப் பட்டு, அவனுடைய தளபதியான பார்ப்பன அடிவருடி **புஷ்யமித்திரன்** ஆட்சிக்கு வந்தபோதும் கிரேக்கப் படையெடுப்பு களில் அவர்கள் நாகரீகமும், அன்றைய இந்து நாகரீகமும் கலப்படமானபோதும்— "**கிரேக்க ஹெர்குலிஸ்**" கதை— பீமனுக்கும், கிருஷ்ணன் கதைக்கும் பொருத்தமெனத் தழுவி— எழுதி, அதற்குப் புனிதம் கற்பித்த போதும், மதுரா வந்த **வங்காள சைத்தன்யக்** (கி. பி. 1485—1533) கோசுவாமிகள் ராதா கிருஷ்ணா என பிருந்தாவனப் பசகோவிந்தம் பாடிய போதும், மௌரியப் பேரரசு காலத்தில் தொடர்ந்து பரப்பப் பட்ட சைன –பௌத்த சின்னங்கள், சிலைகள், சங்கம் பாடிகள்--பரந்துப்பட்ட அதன் இலக்கியத்திற்குரிய மன்னர் மானியம், விளம்பர மக்கள் செல்வாக்கு ஆகியவற்றை யாரும் பெரிதாக உடனடியாக அழிக்க முடியவில்லை.

சைத்தன்ய சீடரான கிருஷ்ணதாஸ் கவியராச கோசுவாமி ,வங்காள மொழியிலும், மெல்வில்லா—டி. கென்னடி என்பவர் ஆங்கிலத்திலும் எழுதிய நூற் குறிப்புகளில், முதுமையான சைதன்யர், ஞாபக மறதி யான காலத்தில் (பதினாராம் நூற்றாண்டு) ஒரு கிராமத் திற்குச் சென்று அங்குள்ள நீர்க்குட்டையில்—'ராதா குண்டம்' என அதில் இறங்கி சேற்றை வாரிப் பூசிக் கொண்டார். 'ராதா மாதவன்' இங்குதான் சலக் கிரீடை பண்ணினார் என்றதும்,அந்தக் கிராம மக்களும் வழிபடத் தொடங்கினார்கள். அதுவே பிறகு பிருந்தா வனமாயிற்று என அறியப்படுகிறது. பிறகு சைதன்ய சீடர்களால் மதுராவையும் — பிருந்தாவனத்தையும் வைணவப் பார்ப்பன கேந்திரமாக்குவதற்கு அப்போ தைய முகாலாயச் சக்கரவர்த்திகளான அக்பர் அவருக் குப் பிறகு—(கி. பி. 1605-1627) ஜஹாங்கீர் ஆகியோர் களின் உதவி அந்தப் பார்ப்பனர்களுக்குப் பெரிதும் தேவைப்பட்டது.

அனைத்திந்திய சைன—பௌத்த சங்கம் பாடிப் பள்ளிகள் அனைத்திலும் கனிஷ்கர் காலத்தில்—புத்தர் சிலை முதல் வைப்புக் கொண்டு—சமண மகாவீரர் சிலைகளும் நிறுவப் பட்டன. மேற்கண்டவாறு அறியப்பட்ட வரலாற்றில் சைன பௌத்தக் கேந்திரமே—வங்காள சைதன்யரின் புராணத்திற்கு— (கழிவு நீர்க்குட்டை) ராதா மாதவ குண்டம், பிறகு பிருந்தா வனம்—எனவாயிற்று.

சமணமிருந்தால் அங்கே பௌத்தம் வரும். சிவனிய மிருந்தால் மாலியம் வரும். நண்டு வளையில் பாம்பு குடிபுகுந்து கொண்டதைப் போல பார்ப்பனர் பிறவற்றை ஆக்கிரமிக்க வேண்டுமென்று கூறும் மனு நீதியின் கருத்திற்கொப்ப—சமண பௌத்த கேந்திரத்தில்—ராம சென்ம பூமி என்று மதுராபுரி ராதா கேசவ மந்திரும் ஆக்ரமித்தன. அதாவது சமயம் வாய்க்கும்போது வளைத்துக் கொள்ளலாமென்று, பிற்பட்ட வைணவ பார்ப்பனர்கள் அயோத்தியிலும்—மதுராவிலும் கொலுப் பொம்மைகளை வைத்தனர். மேலே சொல்லப்பட்ட சைன—பௌத்த—சிவனிய—மாலியச் சின்னங்களை இடித்து கி. பி, 1600-இல் தாயார் வழி மங்கோலிய செங்கிஸ்கான் பரம்பரை—தந்தை வழி தைமூர் பரம்பரை என—இந்தக் கலப்படம்—மொகலாயர் என்ற பெயரில் தொடர்ந்தது. ஆனாலும் அவ்வழிப் பாபர் தம்மைத் துருக்கியர் என்றே கூறிக் கொள்வார். அயோத்தியில் பாபரி மஸ்ஜித் கட்டப்படுகிறது.

பதினாறாம் நூற்றாண்டு துருக்கி மொழியில் பாபர் என்றால் 'புலி' எனப்படும். அந்தப் பாபர் என்ற சாகிருநின் மகமட் பாபர் கி.பி. 1526 இல் அரசமைக்கின்றார். இவர் தைமூர்; டாமர்லேன், செங்கிஸ்கான் வழி வந்தவர். கி.பி. 1530-இல் அவர் காலமானார். அரசு அமைப்புக்கும், அவர் காலமாகும் இடைவெளிப்பட்ட கி.பி. 1528-இல் அவர் மசூதி கட்டினார் என்று சொல்லப்படுவதில் மறைக்கப்பட்ட உண்மை யால் சற்று தெளிவின்மை இருக்கிறது. ஆனாலும் பாபர் என்ற பெயரில் மசூதி கட்டப்பட்டிருந்தது. கி.பி. 1885-இல் இந்துக்கள் என்ற பெயரில் பார்ப்பனர் சிலரால் பைசாபாத் நீதி மன்றத்தில் பாபர் மசூதி கட்டப்பட்ட 357 வருடங்களுக்குப் பிறகு, பாபர் மசூதி இருக்குமிடம் ராமன் பிறந்த இடம் என அதற்குக் கோயில் கட்ட கோரிக்கை வழக்குப் போடப்பட்டது. மாவட்ட நீதி மன்றமும், சூடி சியஸ்கமிசனும் அதை நிராகரித்து பாபர் மசூதி இசுலாமியருக்கே உரியது எனத் தீர்ப்பு வழங்கியது. ஆனாலும் 22-12-1943-இல் அந்த மாவட்ட ஆட்சித் தலைவர் கே.கே. நாயர் என்பவர் இரவோடு இரவாக சில வெறியர்கள் உதவியுடன் மக்கள் அமைதியாகத் தூங்கிய நேரத்தில் யாரும் அறியாவண்ணம், பாபர் மசூதி வளாகத்தில் ஒரு சிறு ராமன் பொம்மையைக் கொண்டு வந்து வைத்து விட்டார். அவர்கள், அந்தராமன் சிலை தரையில் இருந்து தானாகமுளைத்த 'சுயம்பு' எனக்கதைகட்டிவிட்ட சூட்சியே கர்சேவாக்காரர்களை இன்றைய பாபர் மசூதியை இடிக்கத் தூண்டிவிட்ட அறியாமை என்பதறியவும்.

மொகலாய அக்பர் முதல் ஔரங்கசீப் முடிய 1556—1707 என்ற வரிசையில் கடைசியாக 1658—1707-இல் வந்த ஆலம்கிர் ஔரங்கசீப், மதுராபுரி சமண பௌத்தப் பள்ளிகளை அழித்து அங்கே மசூதி எழுப்பினார். ஏன்? அவர் காலத்தில் சோமனாத புரம் ஆலயம் முதல் குசராத்திலிருந்த சில இந்துக் கோயில்கள் உள்ப்பட ஜெய்ப்பூர் மாவட்டம் 235 கோயில்களையும் ஆம்பாரியிலிருந்த 66-கோயில்களையும் இடித்துத் தள்ளிவிட்டு அவற்றின் வருவாயாக வண்டிவண்டியாக தங்கம், வயிரம், ஆபரணம்,உண்டியிற் பொற்காசுகளைக் கொண்டு சென்றதுடன் இடிக்கப்பட்ட கோயில்களின் செங்கற்களைக் கொண்டே ஆங்காங்கு மசூதிகள் எழுப்பினார். எதிர்த்த இராச புத்திரர் களைக் கொன்றார். இந்துக்களை வெருத்தார், மதவெறியராக இருந்த ஔரங்கசீப் சிறந்த அரசராக வாழவில்லை. மொகலாயப் பேரரசின் அழிவிற்குக் காரணமே மற்ற இனத்தைப் பழித்து அடக்கி ஆண்டு பகையும் பழியும் கொண்ட ஔரங்கசீப்பின் கொடுங்கோன்மையே.

புளித்துச் சலித்துப் போனதென்று தந்தை பெரியார் சொல்வதைப் போல காட்டுமிராண்டிக் காலத்துக் கடைப் பிடிப்புகளைக் காப்பற்றி நினைவுப்படுத்தவே இந்த மதச் சின்னங்கள்.

### வரலாறு தெளிவாக இப்படி இருக்க;

கட்டுக் கதைச் செய்திகளைப் புனைந்து வைத்துக் கொண்டு புத்துணர்ச்சியும், புதிய உற்சாகமும், வியப்பான—அறிவுப் பூர்வமான கணக்கு வரையறை வரலாற்றுச் சான்றுப் பிடிப் புள்ள செய்திகளை மறைத்து புராணத்தை விமர்சிப்பது என்பது விட்டுக் கொடுக்க முடியாத தற்காப்புத் தரித்திரத் தந்திர மாகும்.

### பார்ப்பனப் புராணக் கூற்றுப்படி;

1. **திரேதாயுகம்: 8,70,000—ஆம் வருடங்கள்** இதன் இடைப் பட்ட வருடங்களுக்குள்ளே—முற்பட்டது தொடர்ந்து, தசரத ராமாவதாரம்,—சீதை நெருப்புக் குளித்தல்,—ராமனின் கடைசித் தம்பி சத்துருக்கணனின் அரச பரிபாலனம்.

2. **துவாரயுகம்: 8,64,000—ஆம் வருடங்கள்.** இதன் இடைப் பட்ட வருடங்களுள்ளே முற்பட்டது தொடர்ந்து கிருஷ்ணாவதாரம், துரியோதனாதி பாண்டவ—பகவத்கீதை

உபதேசம்—குருச்சேத்திரப் போர். துரியோதனனுக்குப் பிறகு பஞ்சபாண்டவர் அரசாட்சி.

சிம்மாசனத்தில் தர்மர் வீற்றிருக்க, ஒரு கால்ச் செருப்புடனும், மறுகைத் தோள்பட்டையில் மாராப்புத் துண்டுடனும், பீமன் ஓடிவருகிறான்.

**தர்மர் :** என்ன நடந்தது?

**பீமர் :** அண்ணா! கலியன் பிறந்து விட்டான். தாயின் தலையில் புல்லுக் கட்டையும்—தந்தையின் தலையில் விறகுக் கட்டையும் ஏற்றித் தனக்கு முன்னால் நடக்கச் சொல்லி அவர்களைத் தொடர்ந்து பல்லக்கில் வருகிறான்.

**தர்மர் :** அப்படியா! அது உன்னைப் பார்த்ததுமே புரிந்து விட்டது. நீ ஒரு கால் செருப்புடனும், மறுகைத் தோள் பட்டையில் மாராப்புத் துண்டுடனும் வந்த மரியாதை இல்லாத தோற்றமே, கலியனை நம் சபைக்கே அழைத்து விட்டதாகப் படுகிறது.

என்றார்.—பாண்டவர் ஆட்சியில் கலியன் பிறந்து வந்த மேற் கண்ட செய்தியை ''வில்லிப் புத்தூரார் பாரதம்'' என்ற நூல் மிக விளக்கமாகக் கூறுகிறது.

அதாவது, கலியன் பிறப்பதற்கு முன்னரே கண்ண பரமாத்மா இறந்துவிட்டார். அவர்கள் கணக்குப்படி கலியுகம் (கலியன்) பிறந்து நாலாயிரம் வருடங்களாகின்றன. அதாவது,—கி. மு.4000-இல் இவ்வளவு பெரிய புராணப் பொய் மூட்டையை வைத்துக் கொண்டு;—அதற்குப் பிற்பட்ட கி.மு. 1500 கி. பி. 3500-ஆம் வருடங்களில் தான், உலகளாவிய ஆய்வு என—ஆரியர்கள் இந்தியாவிற்கு—சிந்துவெளிக்கு வந்த உண்மை சொல்லப் படுவதை வீம்புக்காக ஒப்புக் கொள்ள மறுக்கின்றனர்.

வரலாற்று அடிப்படையில் அயோத்தி ராம சென்ம பூமியும்,—கிருஷ்ணா சென்ம மதுராபுரி பிருந்தாவன பூமியும், கி.மு. 2500-இல் சமண பௌத்த சங்கம் பாடிகளுக்குச் சொந்தமான இடமாகும்.

புராணப் பார்ப்பனர் கூற்றுப்படி, கிராதாயுகம், துவாபர யுகம் என்ற இரண்டு யுகங்களுடன் முடிந்து போன ராமனுக்கும், கிருஷ்ணனுக்கும், இப்போதுள்ள மசூதிகளை இடித்து விட்டு அங்கே இன்று கோயில் கட்ட ஏன்தான் உண்மைக்குப் புறம்பாக இப்படி அலைகிறார்களோ? முடியுமா என்ன?



# 11

## சிறந்தமொழி என்ற பெயரில் செழுமைப் படுத்திய பிற அணி

வரலாற்றுத் திராவிடமக்கள் வாழ்வியல் நிகழ்வு, தொடர்பு காலவரம்பு, மொழி, நாகரீக வளர்ச்சியில், புராண சமஸ்கிருத மயத்திணிப்புக்களை நியாயப் படுத்திய ஆரியப் பார்ப்பனரல்லாத பிற்பட்ட வணிகம், சுற்றுலா, படையெடுப்பு என ஐரோப்பியர், கிரேக்கர், மொகலாயர், டச்சுக்காரர், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேய, ஆகிய—சீன வழிப் பயணிகள் அனைவருமே, மதத்தில் மாறுபட்டவர்களாக, பெரும்பாலும் இந்து வர்ண அடிமைத் தனத்தைப் பழித்தவர்களாக, இருந்தாலும், 16,17வது நூற்றாண்டுகளில் தமிழின் தொன்மை, அதன் இலக்கணம்,—வளர்ச்சிக்கு ஈடுகொடுத்த பல அடிப்படை மொழிக் கட்டுக் கோப்புகள் அறிந்து அவற்றின் பெருமைகளை முன்னரே குறிப்பிட்டுள்ளவாறு—சீன--பௌத்தர்களைப் போல ஆராய்ந்து—பல மாற்றம், பல நூல்கள் படைத்தனர். இருந்த பழைய ஓலைச் சுவடிச் செய்திகளையும் அச்சுப் பிரதிகளாக்கினர்.

இத்தாலிய தத்துவ மேதை இராபர்ட் நொய்லி என்பவர் வடமொழி கலந்த மதச் சார்புடைய சில நூல்களை எழுதி அவை அச்சேரவில்லையானாலும், தொகுத்து வைத்த குறிப்புகளில், அவர் பல வரலாற்று உண்மைகளைத் தெளிவுப் படுத்துகிறார்.

தமிழ்நாட்டில் முதன் முதலில் தரங்கம் பாடியில் இடம் பிடித்து புராடஸ்டன்ட் கிறித்துவந் பிரிவைப் பறப்பிய செர்மன்

சீகன்பால்கு என்பவர்—தமிழ், லத்தீன் ஒப்பிலக்கணம் எழுதினார். செர்மன் ரேனியஸ் என்பர் தமிழில் இலக்கண நூலும், எல்லிசர் என்பவர் ஆங்கிலத்தில் திருக்குறள்—13 அதிகாரங்களுக்குத் தமிழ் நூல்களின் மேற்கோள்காட்டியே உரை எழுதினார். திருக்குறளின் முப்பாலைகிரால் என்பவர் செர்மன் மொழியிலும், ஏரியல், லெமிலேசர் என்பவர்கள் பிரெஞ்சு மொழியிலும், மொழி பெயர்த்தனர். வழங்கு தமிழ்ச் சொல்லுக்குப் பொருள் பிரித்து பாபரீசியர் (1779) என்பவர் தமிழ் அகராதி எழுதி அச்சிட்டார். லாசரஸ் என்பவர் 2000-ஆம் தமிழ்ப் பழமொழிகளைத் திரட்டித் தொகுத்து நூலாக வெளியிட்டார்.

பல ஆண்டுகள் தமிழ் மொழியை ஆய்வு செய்து 37,000,-ம் தமிழ்ச் சொற்களைத் தொகுத்து—அச்சிட்டு நான்கு பாகமாக வெளியிட்ட இராட்லர் என்பவரைவிட,—பெர்சீவல் என்பவர் 67,000-ம் தமிழ்ச் சொற்பொருள் தொகுத்து வின்சுலோ, சாந்தலர் என்று இருவருடைய முதலீட்டில் பெரிய அகராதியாகவே வெளியிட்டார்.

தமது கல்லறையில் தமிழ் மாணவன் எனப் பெயர் பொறிக்கச் செய்த ஆக்ஸ்போர்டு ஜி வி. போப் என்பவர் திருக்குரள், திருவாசகம் ஆகிய நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அவற்றையெல்லாம் ஆய்ந்தே;

அயர்லாந்து டாக்டர் கால்டுவெல், திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணமே எழுதினார். குறிப்பாக, இத்தாலிய வீரமா முனிவர் கி பி. 1680-இல் பிறந்து, 30-ஆவது வயதில் தமிழகம் வந்து,—37 ஆண்டுகள் யேசுவின் சபை போதகராக இருந்து பணியாற்றினாலும்; ஏசுவின் தந்தை சூசையப்பரைப்பாடும் (23—கண்டம்— 3615 விருத்தப் பாக்கள்) தேம்பாவணியை இவர் எழுதினாலும்;

> தமிழ் மொழியில் 'ஏ' காரத்திற்கும், 'ஓ' காரத்திற்கும் நீண்ட புள்ளியையும்;— மெய் எழுத்துக்குக்களுக்கு சுழித்த புள்ளிகளையும் கெ, கொ. என்ற குற்றெழுக் கொம்புகளை மேலேசுழித்துப் புள்ளிகளையும் காட்டி வேறுபடுத்தி விளக்கினார்:

101—பாக்கள் கொண்ட ''திருக்காவலூர்க் கலம்பகம்'' எனப் பல குறுங்காவியங்களும் எழுதினார். அவ்வாறே ஆரிய வர்ண இந்து மதத்திலிருந்து விடுவிக்கப்பட்ட, தாழ்த்தப்பட்ட, நாலாம் சாதி சூத்திரர், பஞ்சம சாதி வினைவலர், அடியோர் எனக் கடை நிலை மக்கள், கிறித்துவத்திலும், இஸ்லாத்திலும் மதம் மாறி;

தமிழன், தமிழ் இலக்கணம், கவிதை, புதிய இலக்கியம் என, மறைக்கப்பட்ட சில கருத்துக்களை வெளிக் கொணர்ந்து, அழுத்தமாகச் சொல்ல வேண்டுமானால் அரணாக நின்று, அவர்கள் கற்றுணர்ந்த தமிழில் அதை வளர்த்தனர்.

தென்னகத்தில் முஸ்லிம்களாக்கப்பட்ட தமிழர்கள், அடிப் படைத் தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டு, வாழையடி வாழையாக, அதன் செம்மை அறிந்து மூழ்கி வளம் கொழித்து வரலாறு கண்டவர்கள். மதமாற்றத்தில் அவர்கள் அதன் கருத்துக்களுள்ள அராபிய மொழி படிக்க வேண்டி கட்டாயத்திலிருந்தாலும்—தாய் வழித் தமிழ் மொழியில்—அவர் களின் மதக் கருத்துக்களோடு நல்ல, தமிழ் நயம்முள்ளவற்றை யும் சென்ற காலப் புலவர்கள் பாடி இருக்கிறனர்.

குறிப்பாகக் கூறுமிடத்து; எட்டையபுரம் ''உமறுப்'' புலவர் ''சீறா'' என்ற நபிகள் நாயகத்தின் வாழ்க்கை காவியத்தை எழுதினார். தற்கலைப் பீர்முஹம்மது அப்பா அவர்கள் ''திரு நெறி'' தந்தார். நான்காம் தமிழ்ச்சங்க இராமநாதபுரச் சேதுபதி சகோதரர் பாண்டித்துரையார் தமிழுக்கு—நாகூர் குலாம் காதிறு நாவலர் எழுதிய ''புலவராற்றுப்படை'' சிறப்புச் செய்தது. குணங்குடி மஸ்தான் என்ற சுல்தான் அப்துல் காதர் பாடிய. ''ஞானப்பாடற்றிரட்டு,'' சேகனாப் புலவர் என்ற சேகு அப்துல் காதர் நெய்னார் லெப்பை எழுதிய ''திருக்காரணப் புராணம்'' ''திருமணிமாலை''; அமீது இபுறாகீம் புலவரின் ''குத்பு நாயகம்,'' ''அலிபாதுஷா நாடகம்''; கோட்டாறு சதாவதானம் செய்குத் தம்பிப் பாவலரின் ''நீதி வெண்பா''; வெண்பாற் புலவர் ஆசியா உம்மா எழுதிய ''மெய்ஞ்ஞான ரத்தினம்,'' நாகூர் ஆரிபு நாவலர் எழுதிய ''கையறுமாலை,'' காயல்பட்டணம் புலவர் காசீம் எழுதிய ''திருப்புகழ்'' (நபிகளார் மீது பாடியவை) ஆப்பனூர் முத்து முகம்மது ராவுத்தர் எழுதிய ''திருஞானப் பாடற்றிரட்டு'' என இசுலாமியத் தமிழ்ப் பெருமக்கள் தமிழை முன்னுரிமைப் படுத்து வதில் அவ்வப்போது தங்களால் முடிந்த மொழிச் சுதந்திரத்தைப் பாதுகாத்தே வந்திருக்கின்றனர்.



# 12

# இலக்கியம் என்ற பெயரில் இடைச் செருக்கலில் வளர்ந்தவர்கள்

நாயன்மார், ஆழ்வார்களில் பல சங்க நூல் தொகுப்பு, உரை காவியம் எழுதியவர்கள் என முற்பட்டவர்களும் பிற்பட்ட வர்களுமாக; இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர் நச்சினார்க்கினியர், சிவஞானமுனிவர். அரும்பத உரையார், கம்பர், கூத்தர், புகழேந்தி, அ. நல்லார், வேத உபநிடக உபன் யாசம் புராண நவகோடி நாராயணன் செட்டிஎன்ற புரந்தரதாசர், மதங்கர்! எனச் சொல்லிக் கொண்டே. போகுமளவிற்குப் பலர் அறியப் படுகிறார்கள். இவர்களில் பிராமணர் சத்திரியர், வைசியர், சூத்திரர் என நாலாஞ்சாதிக் கூட்டமே இருக்கிறது. இவற்றில் ஒரு வேடிக்கை என்னவென்றால், மக்களால் கவரப் பட்டு மன்னரால் ஒருவர் பாராட்டப் பட்டால், அவர் பிராமண ருக்திப் பிறந்தவன் என்று அந்தத் தகுதிக்குப் பூணூல் தர்ப்பை, அணிய வேண்டுமென்ற ஐதிகம் சொல்லி, பிராமண கோத்திரம் அந்த அடையாளத்தை அணிவித்துவிடும்.

அவற்றில் அந்தச் சூத்திரத் தர்ப்பனங்களும் அற்ப மகிழ்வும், தன்னை அன்று முதல் உயர்ந்தவனாகக் காட்டிக் கொள்வதிலும் தவறுவதில்லை.

இந்த வகையில்தான்,— உயர்ந்த ஒழுக்கம், அறிவு, பெற்றவர் எனப் பொருள்படும் 'அந்தணர்' என்ற தமிழ்ச் சொல்லை 'பிராமணர்' என்ற பெயருக்குப் பயன்படுத்தி 'தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்' என்று அடிமைத் தனம் கொண்டொழுகினர். இந்த வழியினரில் தெய்வ—மூட

நம்பிக்கையை வலியுறுத்தி அனைத்து இந்திய மாநிலங்களிலும் அந்த அந்தணர்கள், வெவ்வேறு பெயர்களில் மறைந்து கொண்டிருக்கின்றனர். மொழி அடிப்படையில் அவரவர்களுக்குப் பல தலைப்புகள் இருக்கின்றன.

சாஸ்த்திரி, ஏன்? கவாஸ்கர், தண்டுல்கர், சர்மா, ராவ், நம்பூதிரி, குருக்கள், ஐயர், ஐயங்கார், சவுத்திரி, பட்டர், சுப்புடு எனப் பல தலைப்புகள்.

நாலாஞ்சாதி, பஞ்சமசாதிக் கலப்படத்தில்,—அதிலும் வாழையடி வாழையாக இப்போதும் சூத்திரக் கருத்தப்பட்டர், பார்ப்பன சிவத்தப்பட்டர், எனப் பலதரப் பட்டவர்கள், சூழ் நிலைக்கு ஏற்ப பிழைப்பதற்குத் தக்கவாறு திருநீறு, நாமம் என இருதலைக் கொள்ளிகளில் சிக்கிய எறும்புகளாக அலைகின்றனர்.

''பதினோராடலும் விதிமான் கூத்தும்'' என சிவனாண்டியின் கூத்துகளைக் கூறினாலும். சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளால் கூறப்படும் இசை, சுரம், தாளம், நரம்பு ஆகிய இலக்கணங்கள் தமிழிசைத் தொன்மையைத் தெளிவுபடித்தியதோடு, காட்சி வரிகளாகப் பலவும், கூத்துவரிகளாகப் பலவும், ஆக மரபுச் செய்திகளைக் கூறுகின்றன.

சிலப்பதிகாரத்திற்கே—அடியார்க்கு நல்லாரின் உரைவளம் கூட அவர் காலத்திய புராண சிவனியமாலிய நாட்டியங்களையே பஞ்சமரபு நூலின் துணையோடு தெய்வக்கற்பனைகளையே மிகைப்படுத்துகிறது.

கடைச் சங்கத்தில் நுழைந்தது எனச்சொல்லப்படும் நாட்டியத்தார்ப் பணங்கள். அதற்கு முன் முழுமையாகப் படிப்பிக்கப்பட்டு வந்த தமிழ் ஆடல் பதங்களில்—சமஸ்கிருதமய தெய்வப் பதங்களையும் கை, விரல், முத்திரைகளில் கணக்கற்ற தெய்வக் குறியீட்டு முத்திரைகளையும் நுழைத்து விட்டன.

ருக்வேதச் சுருக்க உபநிடதங்களில் மநுதர்மம் சொன்ன பிழைக்கும் வழி என பார்ப்பன வளர்ச்சிக்குச் சொல்லப்பட்ட, ஞான காண்ட வைகுந்தம், திருமால் அவதார நாட்டிய முத்திரைகளையும்,—கர்மகாண்டம் கைலாசம் (இமயம்) சூத்திர ருத்திரச் சுடலைச் சிவனின் நாட்டிய முத்திரைகளையும் கூட்டி,வகைப்படுத்தி—வழிமொழிந்து, அதற்குரிய பலகதைகளையும் கட்டி, உரைத்துப் பல பாடல்களையும், புனைந்து—திணித்து,

மக்கள் பின்பற்றும் வகையில்—அரசின் அதிகாரத் துணையுடன் நடைமுறையில் நியாயப் படுத்தி விட்டனர்.

அவ்வழி வந்தவைகளே திராவிட இமயமலைச் சிவனின் தாண்டவங்கள், அவ்வழி நாட்டிய முத்திரைகள், சிவபுராணம் பெரிய புராணம், தொண்டர் புராணம், லிங்க புராணம், மகேசுவர் புராணம் எனப் பல புராணங்கள்—அனைத்தும் வைகுண்ட சீனிவாசனின் — ராசலீலை — ராமலீலை, லட்சுமண லீலை பிருந்தாவனக் கோபிக் கண்ணனின் லீலை, பாகவதத் திருமால் லீலை, சூடிக் கொடுத்த ஆண்டாள் மாலை, அரங்க லீலை, என அவற்றிற்கு ஆடல், பாடல், உடை, பதம், முத்திரை என்று பலவகைகளைப் புகுத்தி விட்டனர்.

ஆகையால் சிவனியத்திலும் மாலியத்திலும் தெளிவான குறிப்பிட்ட அடிப்படை வரம்பு நூல்கள் என எதனையும் சொல்ல முடியாதவாறு சிதைத்தும், ஒன்றையும் பிற தழுவிய மற்றொன்றையும்—விட்டும்—விடாமலும், தொட்டும் தொடாமலும் காலத்திற்கேற்றவாறு புராண வழக்குச் செய்திகளையே அவற்றுள் கடைப்பிடிக்கும் நாட்டிய முத்திரைகளாக்கி விட்டனர். புராணம் வேறு, வரலாறு வேறு.

பரதரின் நாட்டிய நூல் என்று அதைக் காப்பாற்ற இன்றையப் பிராமண ஆடல் மணிகள் முட்டுக் கொடுக்கிறார்களே தவிர அதில் புராண வழக்குச் செய்திகளைத் தொகுத்த—வரிசையில் கூட முரண்பட்ட கருத்துகளிருக்கின்றனவே யொழிய சிறப்பிற்கானவைகள் இல்லை.

சிவனிய மாலியச் சேர்க்கையாக—பிளவு படாமல்—ஆனால் மாலியம் எதிலும் ஆரம்பக் காப்பாகவும் சிவனியம் சூத்திரச் சுடலையாகவும்; ஆடல், இசை, பாடல் பதங்களில் அனைத்து உரையாசிர்யக்களுமே அடிமைத்தனத்திற்கே ஒத்துழைப்புக் கொடுத்திருக்கிறார்கள்.

உறுப்பசைவுகளுக்குரிய நாட்டிய அசைவு, அடைவு வரிசை, விரல்கள் அசைவுக்குரிய அடிப்படை இலக்கண முத்திரைகள், இசைக்குரிய சுரவரிசை, ராகங்களுக்குரிய நிறங்கள், ஆகிய அனைத்துமே—அடிப்படையான

பண்டைத் தமிழிசை ஆடற் பதத்திலிருந்து மாற வில்லை—விலகவும், இல்லை;—விலக்கவும் முடியாது, ஆனால் அவற்றில் உள்ள தூசு படிந்த—கரை படிந்த— மதவாதக் காப்புப் போர்வை மூட்டங்களை அகற்ற வேண்டும்.

ஆடல் என்றால்; பரதநாட்டியம் முனிவர் வகுத்து முறைப் படுத்தியது என லட்சுமி—சரஸ்வதி வாதாபிப்பிள்ளையார் சுழி எனக் காப்புக் கடவுளைத்-திருமாலை வழிபட்டு, அந்தத் தொழிலைத் துவங்கி கற்கத் தொடங்குபவர்களும்; ஏதோ பெரியவர்கள் செய்த தெய்வக்கலை என்று நமக்குப் பூச்சாண்டி காட்டிச் சொல்லி இருப்பவைகளை நம்பி—அதில் ஆய்வு, படிப்பு இல்லாமல், அப்படியே அவற்றை ஒப்பி ஆமோதித்து, அதைப் புகழ்வதும்,அதற்குத் தாளந்தட்டுவதும், இருநூறு வருடங்களாக இசை நாட்டியம் என்பதை அகரகாரச் சொத்து என அதற்கு ''மொழி தேவையில்லை'' என்றும் தமிழ்நாட்டில்—தமிழர் களோடு தமிழர்களாக வாழ்ந்து கொண்டிருக்கும் நமது 'அத்திம் பேர்கள்' இசைப் பாடலைத் தெலுங்கு, கன்னட, மலையாள மாகவும்; ஆடலைப் புராணக் கதைகளாகவும்; பாடியும் நடித்தும், ஆடியும், ஒட்டுமொத்தப் பண்பாடு என்ற பெயரில் புராணம் பாடிகளாக நமது தலையிலே எறிச்சல் உண்டா கட்டும் என காய்ந்த மிளகாயை அல்லவா வைத்து அறைக் கிறார்கள்.

பிராமண சங்கங்கள் நடத்தும் சாகித்திய அகடமி, சங்கீத வித்வ சபா, பிரம்மகானம், நாரத கானம்—ஏன்? இன்றையத் தமிழ்ப் பெரும் வணிக வள்ளல்களே நடத்தும் தமிழ் நாட்டிய மன்றம், தமிழ் இசை மன்றம், மதுரைத் தமிழ் கோவைத் தமிழ், திருச்சித் தமிழ், தஞ்சைத் தமிழ், பாலக்காட்டுத் தமிழ், V. G. P. தமிழ் என சென்னைத் தமிழ் என்று பற்பல தமிழ்— மன்றங்கள் அனைத்துமே எதைப் போற்றுகின்றன? சிந்திக்க வேண்டும்.

பார்ப்பனர்களுக்குப் பேச்சு மொழி, அவர்களின் புராணக் கருத்து, சாதி வருணங்களை மற்றவர் மீது திணித்து; அவர்களை நிரந்தர அடிமை கொள்ள முன்னரே கூறியவாறு திராவிட கிளை மொழிகளில் அங்கொன்றும் இங்கொன்று மாகச் சொல்லெடுத்து, சமஸ்கிருதம் என்ற பெயரில் ஒரு மொழி சொன்னார்கள். தங்கள் வரிசையில்—தமக்குக் கட்டுப்பட்ட சத்திரியர், வைசியர்களுக்கு எம்மொழியாயினும், ஆளுகை,

வணிகமென அவர்களை பார்ப்பனர்கள் கையகப்படுத்தி நாலாஞ்சாதி சூத்திரர், பஞ்சமர் கடைநிலை மலைவாழ் மக்களை ஒரு பொருட்டாக மதிக்காது! அவர்கள் பேசிய' தாய்மொழியான அருந்தமிழை சூத்திரபாசை என்று சொல்லி; அதன் கருத்துக்களையும் அறித்து அதில் புலமையுள்ளவர் களையும் நாத்திகர் என்றே கூறி. வழி வழியாகத் தங்களை முன்னுரிமைப்படுத்தி நின்றதோடு, மநுதர்மம் கூறியவாறு ஏமாற்றுத்தனத்தில் சூத்திரத்தமிழரை சுமை கூலிகளாகவே கொண்டனர்.

ஆரிய புராண மத சாதி வர்ண சமஸ்கிருத மயத்தில் தோய்ந்த, தங்களுக்குச் சாதகமாக அடிமைப்பட்ட; இனம், மொழிகளில்; தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் இசை, கூத்து, நாட்டியங்களையும் கிரந்தம், பரதம் சமஸ்கிருதப் பாசுரங்கள் என, அவற்றை நிரந்தரப் படிப்பினையாகக் கொண்டு பரப்பி, இன்றையத் தெருக்கூத்து முதல் திரைப்படம் வரை அவர்களின் கலப்படக் கருத்து மொழி நிகழ்வுகளே பாராட்டப்படுகின்றன.

தூய தமிழ் இலக்கிய இலக்கண வரலாறு என்பதை எல்லாம் பார்ப்பனக் கருத்து விழுங்கினாலும்,—முடியாதபோது அவர்கள் தமிழின் ஆழம் பற்றி அறியாததால்—அதைச் சூத்திர துக்கடா மொழி என்று புறக்கணித்ததால், அதில் அவர்கள் புலமை பெற்றவர்களாகவும் நிற்க விளங்க முடியாமல் போயிற்று.

இந்த இருபதாம் நூற்றாண்டுத் துவக்க காலப் பார்ப்பனச் சுரண்டல், அவர்களுக்கு முற்பட்ட சமண, பௌத்த, இசுலாமிய, ஐரோப்பிய அறிஞர்களின் தமிழ்ப் புலமையில் உண்டான, தொகுக்கப்பட்ட (மத மாறுபாடு இருந்தாலும்) அடிப்படைச் செய்திகளை எளிதாக அந்தப் பார்ப்பனர்களால் மறைத்துவிட முடியவில்லை.

ஆரியப் பசகோவிந்தம் பாடிய சூத்திரத் தமிழ்க் கூத்தாடி களும், தியாகராசர் கீர்த்தனை பாடிய பாடகர்களும், பார்ப்பன சாதி வருணத்தில் தங்களை முன்னுரிமைப்படுத்திக் கொள்ள முடியாத சமூக நீதிமுரணில் மரத்தடி நோயாளிகளாகவே வாழ்ந்து முடித்தனர். புராணக் கலப்படத் தமிழில்—கருத்தில் நாடகம் எழுதிய சங்கரதாசு, பரசுகரதாசு, பம்மல் சம்பந்த முதலியார் சூரியநாராயண சாஸ்த்திரி—நாவல் என; கூத்தாடி கோதைநாயகி, கமலா வரையிலும் வல்லொற்றுக் கலந்த தமிழையே சொன்னார்கள்.

நல்ல தமிழ் அறிஞர்களை,—பார்ப்பனர்களும்— அவர்களின் அடிவருடிகளான சூத்திரத் தமிழர்களும் பாராட்டுவதில்லை. பாவாணர் போன்ற மேதைகள் வறுமையிலும் செம்மையாக வாழ்ந்தவர்கள். அதைப் பொருட்படுத்துவதுமில்லை. சூத்திர பாசை என்று புறக்கணித்திருந்த தமிழை—அதன் இலக்கண இலக்கியத்தை—சோத்துவடம், அப்பளம், போட்ட பிற்காலப் பார்ப்பன வணிகர்களும்— தமிழாய்வு—பதிப்பு— தொகுப்பு— வெளியீடு என அவற்றின் வாயிலாகத் தங்கள் நிறத்தைக் காட்டிக் கொள்ள முனைந்த சமூக அந்தஸ்த்துப் போசனமாகப் பற்பல நிகழ்வுகள் இருக்கின்றன.

கி. பி. 1892—உ. வெ. சாமிநாதய்யர் கூட தமிழகத்தில் ஆங்காங்கு சென்று—தமிழ் ஏட்டுப் பிரதிகளைத் தேடும்போது, ''உங்கள் தமிழ் நூல்களைத்தான் சேகரிக்கிறேன். இருந்தால் கொடுங்கள்'' என்று தன்னை அங்கே தனித்துப் பிரிவுபடுத்தியே— ஏனென்றால் எதிர்ப்பட்டவர் இவரைப் பிராமணர் என்று அறிவார்களல்லவா? அதனால் அப்படிக் குறிப்பிட்டுக் கேட்டார்.

சாஸ்திரி, சர்மா, ஐயர், அய்யங்கார்கள் என்போர்; தமிழை, இலக்கியத்தை, வரலாற்றை ஆராய்ந்த போதும் நூல் எழுதிப் பதிப்பித்த போதும்கூட உண்மைக்குப் பிடிபடாமல் பற்பல இடங்களில் நழுவி இருக்கின்றனர். கிருஸ்த்தவர், இஸ்லாமியர் களைப் பார்ப்பனர்களுக்குப் பிடிக்காது. ஏனென்றால் அவர்கள் ''இந்து மதத்தை—அதாவது சாதி வர்ணத்தைப் பழிப்பவர்கள், வேறு மதத்தைத் தழுவியவர்கள் தேசிய ஒற்றுமையைச் சிதைப்ப வர்கள்'' எனப் பகைமை கொள்வர். ஏதோ இவர்கள் தேசிய ஒற்றுமையைக் காப்பவர்கள் போல நடித்து சூத்திரத் தமிழ்த் தோள்களில் சவாரி செய்பவர்கள். இவர்களுக்குத் தேசியத்தைப் பற்றிப் பேசுவதற்குத் தகுதியே கிடையாது. அனைத்திந்திய அடிப்படை மக்கள் பார்ப்பன சாதி வர்ண அடக்குமுறைக் கெடு பிடிகளால்தானே முகலாயர் வந்தபோது, அவர்கள் மதம் தழுவினர். கிருத்தவர்கள் வந்தபோது, அவர்கள் மதம் தழுவினர். இந்த உண்மை அனைவரும் அறிந்ததே!

நிறவெறியை — முன்னுரிமை அந்தஸ்த்தை இன்னும் சுமத்துவதில் கூடத் தற்பொழுது மத்தியத் தொலைக்காட்சியில் இப்போது புதியதாக சமஸ்கிருதச் செய்தி என்று சுலோகம் பாட ஆரம்பித்திருக்கின்றனர், 'கேலிக்கூத்து.'

பல மொழிகளில் (16 மொழிகள்) மேலான, நுணுக்கமான இலக்கண இலக்கிய ஆய்வு வரலாறு அறிவு பெற்ற; அறிமா

தேவநேயப் பாவாணர் அவர்களை—தமிழ்ப் பகைவர்களான பார்ப்பனர்கள், அவர் காலத்தில் அவருக்குத் தொல்லை கொடுத்தாலும், அவர் துவளவில்லை என்பதற்கு அவரின் வாழ்க்கையில் அவர் அனுபவித்த உண்மையான சில நிகழ்வுகளே சான்றுகளாகும்.

''ஏதென் தோட்டத்தில்தான் இறைவன் மாந்தனைப் படைத்தான்,'' என்று புராணம் கூறும். பழைய ஆகமப் பைபிலை எதிர்த்தவர் கிருத்தவரான நமது பாவணர். அதனால் அந்த மதத்தன் ஆதரவும் அவருக்குக் கிடைக்கவில்லை.

''தமிழர்களும் ஆரியர்கள் போல நடு ஆசியாவிலிருந்து வந்தவர்கள்'' என்ற புராணப் புளுகு தெ. பொ. மீனாட்சி சுந்தரனாரை எதிர்த்துக் குரல் கொடுத்து எதிர்ப்புத் தெரிவித்தவர் பாவாணர்.

''தமிழன் பிறந்தது குமரிக் கண்டமே'' என உறுதிபடக் கூறியதால்; தெ-பொ. மீ-யின் மாணவரான உ. வே. சாவின் ஆதரவும் பாவாணருக்கு இல்லை.

''இந்திய நாகரீகம் ஆரியருடையது. வடமொழியைக் காட்டிலும் தமிழ் தாழ்ந்ததே'' என்று பழித்துக் கூறிய வங்காளி சுனீத் குமார் சட்டர்ஜியை கடுமையாக எதிர்த்து வாதாடியதற்காக பாவாணரின் ஆய்வுக் கருத்துக்கள் முரணானவை, என்று புறக்கணிக்கப்பட்டதுடன் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிவாளர் வேலையும் போயிற்று.

''வறுமை''—உண்ண உணவு, உடுத்த உடை—பற்றாக் குறை காப்பாற்ற முடியாத கடுமையான ஏழ்மையில் மனைவியைப் பறிகொடுத்தார். மனைவியோடு எல்லாம் போகும் என்பதற்கு எதிர்நடையாக—அறிஞர்அண்ண கூறியவாறு,

''தமிழ்மொழியின் தூய்மையும் வளமும் எத்தகையது என்பதனை ஆய்ந்த பெருமகனார் பாவணர்'' என்ன செய்தரர்? சமயமும் தமிழும் வளர்க்குமிடமென்பது எண்ணி—தமது ஆய்வு நூல்களைப் பதிப்பிக்கப் பொருளுதவி தேடி தஞ்சை மாவட்டத்தில் திருப்பனந்தாள் மட ஆதீனம் சுவாமிநாதத் தம்பிரானிடம் போகின்றார். அங்கு, மற்றொரு சுவாமி நாதர் (உ. வெ. சு.) நிற்கிறார்.

தம்பிரான் பாவணரைக் காட்டி 'இவரைத் தெரியுமா?' என்று உ, வெ. சா விடம் கேட்கிறார். பாவாணரை நன்றாகத் தெரியும். ஆனால்—அந்த ஐயர் 'தெரியாது' என்று சொல்லி

விட்டாரே! அதனைக் கேட்டு தாழ்வாரத்தில் நீண்ட பெரு மூச்சுடன் உட்கார்ந்த பாவாணர் ''பசி வந்தால் பத்தும் பறந்து போம்'' என்றவாறு எழுந்து நின்றார். பிற்பகல் மணி மூன்று.

''குருமகா சன்னிதானத்தில் இப்போது தான் பிராமணாள் பந்தி போசனம் நடந்து முடிந்தது'' என்று ஒரு சோம்பாயி அங்கலாய்த்துக் கொண்டு போனான். என்ன கொடுமை? பிராமண போசனம்—பிறகு சூத்திர எரிசோறா? எங்கே தமிழ் உருப்பட்டது; மடமா? மனிதனா? யார் பாதுகாவலர்?

விழப்போகும் தடுப்புச் சுவர்களை முட்டுக் கொடுத்து நிறுத்தி வைத்திருக்கின்றனர். சைவாகம தமிழ் ஆதினங்களில் சம்பிரதாயக் குருக்கள் தான் முன்னோடிகளாக நிற்கின்றனர்.

இன்றைய ஆரியவர்ண சாதிவாரித் தெய்வ அறக் காவல் துறைத்தனத்தார் 'நம் கடன் பணி செய்து கிடப்பதே' என்று'— அவர்களின் பற்றாக் குறையை சரிக்கட்டாமல் இருக்க முடியுமா? மூலவரே மக்களின் காணிக்கைப் பணத்தை உண்டியலில் போடச் சொல்லும்போது முடிச்சவிழ்க்கிகள் தேனெடுத்தகையை நக்கிப் பார்க்கமல் இருப்பார்களா? பால் பழத்தால்—பஞ்ச அமிர்தத் தால்—அபிசேகக் குளிர்ச்சியில் அந்த அந்த சூத்திரச் கடலை கருப்பாயி—கருப்பர் கோயிலின் ஆதினக் காப்பாளர்கள் வீட்டு எச்சல் இலைகளில் கூடத் தங்கக் காசுகள் விழுகின்றன.

எதிர்ப்புகளுக்கு வாய்கரிசி போட்டு. பங்குப் பற்றாக் குறை யில் பொறுமி வெடிப்பவர்களை சமாதானம் செய்து மீண்டும் மீண்டும் கூட்டுக் களவுகளுக்கு சலசலப்புகளை ஆறப்போட்டு மக்களின் உழைப்பை உறிஞ்சி அதையும் ஞாயம் என்று புளகாங் கித மடைகின்றனரே? பஞ்சை, பராரி வேலை இல்லாதவன் வயிராற—பசியாற்றத் திருடுவதை, அவன் அதைக்கூட தொண்டு என்று தான் சொல்கிறான்! என்ன பதில்?



# 13

# பாட்டு என்ற பெயரில் பசகோவிந்தம் பாடியவர்கள்

சூத்திரர் அல்லாதார்; கபடம் சூது, கொலை, கொள்ளை தந்திரம், பிறர் பொருள் அபகரித்தல் ஆகிய இவைகளை எல்லாம் மனுதர்மக் காவலர் என அவைகளை நிறைவேற்றிக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

பார்ப்பனர் அல்லாதாரின் கருத்துக்கள் எவ்வாறானாலும், அவற்றை மறைத்து, மக்கள் மத்தியில் அவைகள் விமரிசிக்கப் படும்பொழுது தோள் கொடுப்பது போல, நடித்து அங்கே முன்னுரிமை வியாபாரிகளாக விமர்சிக்க வந்துவிடுவார்கள். சிந்தனைச் சீர்திருத்தம் பகுத்தறிவில் வராத மக்கள், அழுத்தப் பட்ட மக்கள் மேம்பாடு, சுயமரியாதை, பெண்கள் விடுதலை, சமூக நீதியில் தக்க நியாயம், கடவுள் மறுப்பு வாதம், பூசுரர் சூட்சி, கோயில் மானிய ஆக்ரமிப்பு, புராணப் புளுகு போன்ற—இவற்றை எடுத்துரைத்து, பெரிதும் சாதித்த தந்தை பெரியார் வழியில் வந்த குறிப்பிடத்தக்க தளபதிகள் வரிசையில் பாவேந்தர், அறிஞர், கலைஞர், வீரமணி கல்லடி சொல்லடிகளுக்கிடையில்—கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்ற வழியில், துணிவாக—மறுக்க இயலாத, ஒப்புக்கொள்ளத்தக்க ஆய்வுச் செய்திகளை வரிசை வரிசையாக, வகை வகையாக எடுத்துரைத்த திருத்தங்களே, இன்று நாம் பலவகையிலும் நமது தழும்புகளைத் தெரிந்து ஆற்றிக் கொள்ள உதவிய தெளிவுரைகள் என்பதை கழகச் சார்பற்றவர்களும் மறுக்க முடியாது.

இவை தொடர்பான அருமைத் தமிழ்ப்பண், இசைப் பாடல் களில் ஆரியப் பார்ப்பனர்களின் ஆக்கிரமிப்புச் செய்திகள் கூறுமிடத்து;

பரிபாடல், பஞ்ச மரபு, சிலப்பதிகார அரங்கேற்று கதை கானல் வரி, வேட்டு வரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை — பிறகு மூவர் தேவாரம், ஆழ்வார் பிரபந்தம், பள்ளுகுறம், முதலான வழி வழிப் பண், இசை, சுரம் பாடல்களை ஆளத்தியை — ஆலாபன மாக்கியது போல்; இசை நரம்புகளை சுரமாக்கியது போல; தண்ணுமையை மிருதங்க மாக்கியது போல, குரல், துத்தம், கைக்கிளை உழை, இனி விளரி தாரத்தை—சட்சம், ரிசபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம் தைவதம் நிசாதம் ஆக்கியது போல; மேலே சொல்லப்பட்ட எட்டுத்தொகை நூல்—பண்கள்—ராகம் என்ற பெயரில் ஒலி, மொழி, ஏன் பொருளையும் கூட மாற்றினர்.

பண்; புற நீர்மை,இராகம் பூபாளமாயிற்று. பழம் பஞ்சுரம்—சங்கராபரணமாயிற்று. சதாரி-பந்துவரானி, வியாளக்குறிஞ்சி—சவுராட்டிரம்; அந்தாளக் குறிஞ்சி—சாமா: மேகராகக் குறிஞ்சி—நீலாம்பரி, கொல்லி—நவ்ரோசி, செந்துருத்தி—மத்யமாவதி, செம்பாலை—அரிகாம்போதி செல்வழி—யதுகுல காம்போதி என வெவ்வேறு பெயர் திணித்தனர்.

இசையைப் பற்றிய விரிவான செய்திகளை அறிய என் நூல்களான ''தமிழிசையில் சாமகானம்'', ''இசைத்தமிழ்'' ''சிலப்பதிகாரச் செங்கோட்டியாழ்'' ''ஏழிசை'' ஆகிய நூல் களைப் பார்க்கவும்.

பார்ப்பனர்களுக்கு இசை ஞானம் இல்லை என்பதையும் அவர்கள் தமிழிசை நுணுக்கங்களை எடுத்தாண்டு நிறம் மாற்றியதை பாவேந்தர் :-

''பல்லிசை கட்கும் வடக்குப் பாவிகள்
இழிந்த தம் வடசொற் பெயரை இட்டனர்
எழிசை வடவர் கண்டிலர் அன்றியும்
யாழிசை அறியார் குழலிசை அறியார்
இனிமை தோன்றப் பாடுதல் அறியார்!''—என்றார்

சுயமரியாதை இயக்கம் அடிப்படையில்—தமிழிசை இயக்க எழுச்சியென முதலில் தந்தை பெரியாரே ஆரியர்களின் சபா சங்கீத முரண்பாடுகளுக்கு அறைகூவல் விடுப்பதாக 1930-இல் குரல் கொடுத்தார்.

சிவ வைணவத் தொண்டர் பட்டியல்களானாலும், இசைத் தமிழ்ப் பாடல் என்ற உணர்வில் தமிழகத் தெருக் கூத்துப் பாடலான "இராமசாமி தூதன் நானடா" என்ற குரங் காட்டிப் பாடகர்களும், "கண்ணன் கண் திறப்பான், "வர வேண்டும் ராம ராச்சியம்" என்ற மாலியப் பட்டைகளின் தரகர்களுடன் ஒன்று சேர்ந்து. நாமக்கல் கவிஞர், பாவேந்தர், நாவலர் சோமசுந்தர பாரதியார், அறிஞர் அண்ணா, ஆர். கே. சண்முகம் செட்டியார், சிதம்பரநாதன் செட்டியார். கு. பா. ராசகோபாலனார், மு. வரதராசனார், கி. ஆ. பெ. விசுவநாதம், பம்மல் சம்பந்த முதலியார் இலக்குமணப் பிள்ளை, ப. ஜீவானந்தனார் உட்படப் பலர் இசைத் தமிழ் அணியாகத் திரண்டனர்.

அவை; திருநெல்வேலி, திண்டுக்கல், தஞ்சை, காஞ்சி, வேலூர் ஆகிய நகரங்களிம் எல்லாம் எதிரொலித்தன. செட்டிநாட்டரசர் தமிழிசைக் கல்லூரியைத் தோற்றுவித்தார். இது அரசியல் நோக்கமுடையது என பார்ப்பனர் எதிர்ப்பு! என்றுமேஇசைக்குத் தமிழ் ஏற்ற மொழியல்ல என்றும், தமிழிசைப் பாடல்களில் தியாகய்யரின் புகழ் தாழ்ந்து இசையின் பெருமை குறைந்துவிடு மென்று தஞ்சை திருவையாற்று ரரமா- கிருஷ்ணா எனப்படும் பசனைக்கூட்டம், தமிழிசை இயக்கம் பண்பாடு அற்றது என்று பழித்து; அரியக்குடி, செம்மங்குடி துணையுடன் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் எனப்பலரும் பூணூலையும், குடுமியையும் தட்டிவிட்டுக் கொண்டனர்.

"தமிழ் மொழியில் பாடல்கள் இல்லை என்பது பொருந் தாக் கூற்றாகும்" "என அறிஞர் அண்ணா அன்றே குரல் கொடுத்தார்." சேரனுடைய கொலு மண்டபத்திலே வாதாபி கணதீபம் பாடவில்லை! சோழன் களிக்க "சுனோ சுனோ" பாடவில்லை. பாண்டியன் அவையிலே, பலுகவே ஏமினோ, பாடவில்லை; அன்று தமிழிசையே பாடப்பட்டது. அந்த இசை இன்று எங்கே? மறைக்கப்பட்டு விட்டது" என்றார்.

ஆனால் அப்போதே தமிழிசை என்ற பெயரில் இந்தச் சூத்திரத் தமிழகக் கூத்தாடிகள் ஆரியக் கருத்துக்களை பாடு கின்றனரே என்று மனம் வெதும்பினார் பெரியார். அண்ணா மலையாரின் தமிழிசைத் துவக்கப் பாடலாக—ஆரம்பித்ததில் இசைமேதை பொன்னுச்சாமி பிள்ளை கொடுத்ததுகூட ஆரியப் பார்ப்பனரின் நவக்கிரகத் தோத்திர மாலையே. அந்த விழாக் களையும் பெரியார் வெறுத்தார். பேராசிரியர் அறிவரசு உறுதிப்

படுத்தியவாறு அண்ணாமலைத் தமிழிசைச் சங்க முதல் மாநாட்டில் (1943).

"வயிற்றுப் பிழைப்பிற்கு உத்தியோகம் பார்க்க வேண்டுமானால் ஆங்கிலம் படிக்க வேண்டும், கலியாணம்—கருமாந்தரம் செய்யவேண்டுமானால் சமஸ்கிருதத்தில் செய்யவேண்டும். தேச பக்தர் என்று பெயரெடுக்க வேண்டுமானால் இந்தி படிக்க வேண்டும். சங்கீதத்தைக் கேட்கவேண்டுமானால் தெலுங்கு மொழியைக் கற்கவேண்டும். இதுபோல எந்த நாட்டிலாவது தாய்மொழிக்குக் கேடு ஏற்பட்டிருக்கிறதா? நமது தாய்மொழியாகிய தமிழுக்குத்தான் இத்தனை கேடுகளும் ஏற்பட்டிருக்கிறது" என்று மனம் வெதும்பிய இரா. க. சண்முகம் செட்டியாரை—தந்தை பெரியார் ஆதரித்தாலும்—தமிழிசை என்ற பெயரில் தமிழ் மொழியில் 'துக்கடா? என்று பார்ப்பனரால் அன்று ஒதுக்கப்பட்டிருந்த தெருக்கூத்துப் பாட்டுக்களான—பாடல் தமிழிழானாலும்—பாடு பொருளில் மாற்றமில்லாத ராமனும், கிருஷ்ணனும், சிவனும், கந்தனுமே (முருகன்; பிராமணர்களுக்கு நல்லவன் என்ற பொருளில் சுப்பிரமணியன் ஆனான்) அதில் வருகின்றனர்.

"ராமனுக்கு மன்னன் முடிதரித்தலே."

"மாடு மேய்க்கும் கண்ணா"

"பார்த்தசாரதி உன்பாதமே கதி"

"தூக்கிய திருவடி துணையென நம்பினேன் நடராசா"

"தாயே யரோதா"—என முறையே இந்தோளம், தேஷ், சாமா, சங்கராபரணம், தோடி, ஆகியவற்றில் பாடுவதை பெரியார் விரும்பவில்லை.

மக்கள் வளர்ச்சி, முன்னேற்றம் என்ற அடிப்படையில் தேசியக்கண்ணோட்டத்துடன் நிர்வாக நடைப்புத்துறை, படிப்புத் துறை ஆகிய எதைப் பார்த்தாலும், அங்கே பார்ப்பனத் திணிப்புக்கள் நாற்றமடிப்பதை தொடர்ந்து குரல் கொடுத்து பெரியார் எதிர்த்துரைத்து வந்தார். இசைத் தமிழில் பார்ப்பன பசனைக் கருத்துக்கள் பாடப்படுவதை எதிர்த்து அவர்கூறிய பழமொழியாக இங்கு ஒன்றை அறிவோம்.

மருமகனுக்கோ காவிக்கறைபடிந்த, துலக்காத பல்வரிசை. மகள் சொல்லியும், அதைக் கேட்காத அந்த மாப்பிள்ளைக்கு மாமியாரோ நாசுக்காக, "மருமகனே! எங்கள் கிராமத்தில் கரும்புவிளைச்சல் அமோகம். தூர்க் கரும்புகளாக இரண்டு வாங்கி நன்கு கடித்துச் சுவைத்துப் பாருங்கள்" என்றாள்,

அதாவது—அப்போதாவது மருமகன் பற்களில் உள்ள காவிக் கறை போகிறதா என்று மாமியார் காசு கொடுத்து அனுப்பி வைத்தாள்.

அந்த மாப்பிள்ளை என்ன செய்தார் தெரியுமா? கரும்பு வாங்கித்தின்று அதனால் பற்கள் சுத்தமாகவில்லை. அதற்கு மாறாக செக்கில் ஆட்டிய நல்ல எள்ளுப் புண்ணாக்கை ஈரப் பதத்துடன் வாங்கித் தின்று, பற்களை அட்டக் கறுப்பாக்கிக் கொண்டு வந்து நிற்கின்றார்.

அதைப் போல இந்த ஆரியக் கூத்தாடிகளும் தமிழிசைப் பாடல் என்ற பெயரில் 'இராமா—கிருஷ்ணா என்று கத்துகிறார்களே என மனம் வருந்தினார் பெரியார். இவ்வாறு பார்ப்பனர்களால் கண்டு கொள்ளப்படாதவர்களான இசைப் பேரறிஞர்கள் மூவர் எனச் சூத்திர வர்ணக்காரர்களால் புகழப்பட்ட; ராம—கிருஷ்ண தமிழ்ப் பசனைப் பாடல்கள் என்று நூற்றுக்கும் மேலாக எழுதிப் படிப்பித்தவர்களான முத்துத்தாண்டவர், மணிமுத்தாப் பிள்ளை, அருணாசலக் கவிராயர், என்பவர்களுக்குப் பதிலாக—முத்துச்சாமி தீட்சதர், சியாமா சாஸ்திரி, தியாகய்யர் என்ற மூவரையும் முழுமையான, தமிழ் அல்லாத கலப்பட சமஸ்கிருதம். கிரந்தம், தெலுங்கு என, ராமா—கிருஷ்ணா பாடிய அவர்களை இந்தத் தஞ்சாவூர் கலப்படத் தமிழர்கள், தங்கள் தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடினர். மீண்டும் நினைவுபடுத்துகிறேன்.

கீர்த்தனை தியாகய்யர் வழிபாடு என்று திருவையாற்று விழாவில் "சித்தி விநாயகனே" என்ற தமிழ்ப்பண்—பாடலைப் பாடிய தண்டபாணி தேசிகரைப் புறக்கணித்து—இசை மேதை—தீட்டுப்பட்டதாகக் கூறி, அரியக்குடி—ஏன் செம்மங்குடிகன் அப்போதே அவர்கள் பூணூலைப் பிடித்துப் புண்யாதானம் செய்து கொண்டனர். இவர்களா தமிழிசையை வளர்த்தவர்கள். சிந்தித்து அடையாளம் கண்டு கொள்ளுங்கள். அப்போதே, அதைக் கண்டித்து "தீட்டாயிடுத்து" என்ற தலைப்பில், தந்தை பெரியாரின் "குடியரசு" இதழின் உதவி ஆசிரியராக இருந்த கலைஞர் கருணாநிதியும் குரல் கொடுத்தார் என்பதையும் இங்கே நினைவில் கொள்ள வேண்டும்.

இசை வாணர்களுக்கு தந்தை பெரியார்; பொருள்தந்து வரவழைத்து, ஒரு காலைத் தூக்கி ஆடிக் கொண்டிருக்கும் நடராச உருவத்தின் முன் தீப தூப நெய்வேத்தியத்துடன் உட்கார வைத்துப் பல ஆயிரக் கணக்கான மக்களை வரவழைத்துப் பசனைப் பாட்டுக்கள், பாடச் செய்வதும்,—அதன்

மூலம் மக்களுக்கு வேண்டாத பக்தி புகட்டுவதும் தானா தமிழிசை வளர்ச்சி?'' என்றார்.

''நிலை குலைந்து, இழிவடைந்து, தரித்திரர்களாய்,—மடையர்களாய்,—சுரண்டப் பட்டவர்களாய் வாழும் மக்களுக்கு இவை என்ன பயனைத் தரும்'' என இசை மணத்தில் மறுமலர்ச்சிக் குரல் எழுப்பினார்.

தமிழக சிவமாலியத் தரகுக் கூத்தர்கள், ''தமிழிசை'' என்ற பெயரில்—அந்தப் பார்ப்பனப் புராணக் கருத்துள்ள பசனைப் பாடல்களைப் பாட ஆரம்பித்ததைப் பற்றிக் கூட அன்றையப் பார்ப்பனர்கள் சந்தோஷப் படவில்லை. புனிதமான 'தெய்வ லீலைகளைச் சூத்திரத் தமிழ் மொழியில் பாடிவிட்டார்களே' என்று குரல் எழுப்பி—அதுவே முதற்பாவம், தோசம், சாபம் என ஊளையிட்டனர். யார்?

மொழி, பண்பாடு பற்றிய ஆராய்ச்சியே இல்லாத தங்களை முன்னுரிமைப் படுத்தும், ஒரே முனைப்பில் வயிற்றுப் பிழைப் பினைக் காப்பாற்றிக் கொள்ள, வஞ்சமாக—சூத்திரர் தலையில் உட்கார்ந்து, நிரந்தர மூடச் செக்குமாடுகள் என்று நினைத்து அற்ப நிறைவு கொண்ட அந்தப் பார்ப்பனர்களைத் திருத்த முயன்றதிலும் இந்தப் பாரதியாருக்குப் பங்குண்டு.

சுப்ரமண்ய பாரதியார் காலத்தில்—அவர் பட்டினியும் பசியுமாக அலைந்த போது—தீண்டாமை ஒழிப்பு வீரராக—சூத்திரர்கள் வைத்திருந்த சாலையோரத் தேனீர்க் குடிசைகளில்-பஞ்சம சாதியினர் எனப் பிழையாக ஒதுக்கப் பட்டவர்களுக் கென—அந்தக் குடிசைக் கடைமுகப்பின் கொம்புகளில் தீண்டப் படாததாக—தலை கீழாகக் கவிழ்க்கப்பட்டிருக்கும் சிறு கொட்டாங்கச்சிக் கோப்பையில் டீ ஊற்றச் சொல்லிக் குடித்து ரசித்தவர் பாரதியார்.

அப்போதெல்லாம் அவரை முழுமையாகவே தள்ளிவைத் திருந்த அந்தப் பார்ப்பனர்கள்—பாரதியார் சுதந்திர கீதம் பாடியபோது—மேல்மட்டப் பார்ப்பனர்கள்—வெறுப்பினை வெளியே காட்டிக் கொள்ளாமல், தங்களுக்கும் பக்க வலிமை என்று செல்லப் பிள்ளையாகத் தழுவிக்கொண்டனர்.

அவ்வழியினரே இன்றைய சபா விழாக்களில் அந்தப் பாரதியார் பாட்டுக்களையே—அதாவது வேறு வழியின்றி—ஆள் இல்லாமையால்—அன்று வெள்ளையரை எதிர்த்துப் பாடியதை யும், சக்தி மகமாயி, பள்ளித்தளமனைத்தும் கோயில் செய்குவோம் என்று பாடிய அவர் பாடல்களை—உங்களுக்குப் பாவேந்தர்—, எங்களுக்குப் பாரதியார் எனச் சவால் விடுவது

போல, இன்றும் ஆங்காங்கு பாரதியாரின் பாஞ்சாலி சபதம் பாடுகின்றனர்.

ஆனால், தம் இனத்தவரின் வஞ்சகம், சூட்சி, கொள்ளையிடல் போன்ற பல கருத்துக்களை அன்றே பாரதியார் அடையாளம் கண்டு கொண்டவராக, தம் வழிப் பார்ப்பனர்களைப் பற்றி தமது ''மறவன் பாட்டு'' என்ற தலைப்பில்—அவர் வாழ்ந்த காலத்தில்—என்ன பாடினார்?

**''பேராசைக் காரனடா பார்ப்பான்**
**பெரிய துரை எனில் உடல் வேர்ப்பான்**
**கொள்ளைக்கே சென்றாலும் வஞ்சம்''**
**அங்கே—கூசாமல் வாங்கிடுவான் லஞ்சம்''**

என தெளிவாகவே அடையாளங் காட்டினார்.

ஆனாலும் பாரதியார்,

**''பாருக்குள்ளே நல்ல நாடு—பாரதநாடு'' என்றாலும் இந்தியாவையே ஆரிய பூமி எனக் கூறி அவரின் சுய நிறத்தையும் —அவரது பாடல்களிலேயே சொன்னார்.**

**''உன்னத ஆரிய நாடெங்கள் நாடே**
**ஓதுவம் இஃதை எமக்கில்லை ஈடே''**
**''எம்மை ஆண்டருள் செய்பவள்**
**பெற்று வளர்ப்பவள் ஆரியதேவி''**
**''பேரிமய வெற்புமுதல் பெண்குமரி**
**ஈராகும் ஆரியநாடு என்றுஅறி''**
**''முன்னை இலங்கை அரக்கர் அழிய**
**முறிந்த வில் யாருடைய வில்?—எங்கள்**
**அன்னை பயங்கரி பாரத தேவிநல்**
**ஆரிய ராணியின் வில்!''**

என்றார்.

பாரதியாரைப் பற்றி எப்படி மதிப்பிடுவது? என்பதற்கான விடையை அவரது உரை நடையும், பாடற் கருத்துக்களுமே தெளிவாகக் கூறுகின்றன.

இவ்வாறே சமஸ்கிருதமயம் ஆக்கப்பட்ட அனைத்து மொழிக் கருத்து மாற்றுத் திணிப்புக்கள்—மக்களின் மாநில வழக்கு மொழி எதுவோ,—அவைகளில் அங்கும் இங்குமாகச் சொல் எடுத்து,—அதற்கு மதவாதப் பொருளும்—புராணக் கதை, பூசை, மந்திரம் என,—தனித்தனி—தனிமொழி பேசுபவர் இந்தப் பார்ப்பனர்களின் பொறுக்கி சேர்த்த மொழியில் புனிதம் இருப்பதாக நம்பவைத்து மற்றவர்களையும் அடிமைப்படுத்திக் கொண்டனர். ★

# 14

# வேள்வித் திருமணம் என்ற பெயரில் விபசார மந்திரங்கள்

'**சுர**' என்றால் தானியங்களைப் பொடியாக்கி அதில் செய்த ஆரிய வேதபானம் என்றார்கள். அதற்கு அவர் மொழி எதிரிடைச் சொல்லாக '**அ**'வை, 'சுர' என்பதற்கு முன்னர் சேர்த்ததால் '**அசுர**'—என்று வரும்—அதாவது சோமபானக் குடிக்கிகளான '**சுரர்**' என்ற ஆரியருக்குப் பகையாக ''**அசுரர்**' என்ற **திராவிடர்** பகையாளி என வலியுறுத்தப்பட்டது.

விமர்சிக்க முடியாதவாறு புலம்பட்டும்,—தெய்வீக மென்று நம்பி திராவிடரை அடக்கி வைத்த (ஆரியர்) வகையில் **கோமேதகம்** என்ற பெயரில் மாட்டு மூத்திரம்,—இன்னும் ஓமங் களில்—சூத்திரப் பஞ்சாங்கங்களை குடிக்க வைத்து—தலையிலும் அதைத் தெளித்துக் கொள்ள வைத்திருப்பவர்கள் இந்த புரோகிதர்கள்.

அதை மட்டுமா செய்கிறார்கள்? குறிப்பாக கிருத்து மத மணமகள்,—மாப்பிள்ளை, திருச்சபையில் மோதிரம் மாற்றிக் கொள்கிறார்கள். இனிப்பு வழங்கப்படுகிறது. பாதிரியார் கர்த்தர் உங்களைக் காப்பாராக என்று வாழ்த்துகிறார்.

இசுலாமிய மணமகள்,—மாப்பிள்ளை மணமேடையிலிருக்க த் தனித்திருக்கும் மணப்பெண்ணிடம் சம்மதம் கேட்டு—வாங்கி அதை அந்த மணவிழாக் கூட்டத்தில் அறிவித்து, அவர்களைப் போல் வாழ்க! இவர்களைப் போல் வாழ்க! என்று வாழ்த்து கின்றனர். ஞயாயம்,

இவை அனைவரும்--பகுத்தறிவுள்ள அந்தந்த மொழியினர், குருமார்கள் என்ன சொல்கின்றனர் என்பதைப் பொருள் புரிந்து, வரவேற்று,—மணவிழாவிற்கு வந்தவர்களும் நிறைவு பெறுகின்றனர். ஆனால் இந்து (ஆரிய) தர்மம்—இந்து மதச் சட்டச் சடங்கு சம்பிரதாயம் என்ற பெயரில் பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர்,—பஞ்சம சாதியினர் திருமண விழாவில்—இந்தக் கல்யாண ஓமப் புரோகிதர்கள் என்ன சொல்கின்றனர்?—பிழைப்பு—வயிறு வளர்ப்பதற்காக அவர்கள்,—அவர்களின் ஆசான்களிடம் கற்றுக் கொண்டது என்ன? அதன் பொருள் என்ன? ஒரு வேளை மற்றவர் கேட்டாலும், அது தனக்குத் தெரிந்திரா விட்டாலும், அபசாரம்! அபசாரம்! தலையிலே போட்டுக்குங்கோ, கன்னத்திலே போட்டுக்குங்கோ. இந்து—தர்மசாஸ்திரம் சொன்னதைப் பெரியவா சொன்னா! அதை நாம திரும்பச் சொல்றோம். இதோ தீர்த்தம். வாயைக் கொப்புழிங்கோ'' என்று தெய்வ பயம், சாபம் எனக் கூறி பயமுறுத்தி வாயை மூடிவிடுகின்றனர். இன்றும் நடக்கின்ற இந்து மதப் புகோகிதச் சடங்குயென மணமக்கள் அம்மி மிதித்தும், அருந்ததி பார்த்தும், அவர்களைப் புனிதம் பெற்றவர்களாகக் காட்டி இந்தப் புரோகிதர்கள் என்னென்ன மந்திரம் சொல்கிறார்கள் தெரியுமா?

''ஆசனம் சமர்ப்பயாமி''
மனைப் பலகை போட்டேன்.

இங்கே ஒன்றினைத் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும் மணமக்கள் உட்காருவதற்கு மணப்பலகை போட்டேன் என்று சொல்வதை 'வல்'லொற்றுப் புனைந்த சமர்ப்பயாமி'' என்று சமர்ப்பணம்—அதாவது புனிதத்தன்மையுள்ள மணமக்களுக்கு, ஏதோ கடன், காணிக்கை என்பது போல் சமர்ப்பிக்கின்றனர்.

அவ்வாறே;

''தாம்பூலம் சமர்ப்பயாமி''
வெற்றிலை பாக்குப் படைத்தேன்.

''சதலீபலம் நிவேத்யாமி''
வாழைப் பழம் படைத்தேன்.

''அட்ச தன்னமகா''
அரிசி தூவினேன்

''தூபம் சமர்ப்பயாமி''
புகை (வெளிச்சம்) காட்டினேன்''

என்ற மேலே கண்ட சொற்களில் மணமக்கள் அமர மனைப் பலகை, வெற்றிலை பாக்கு, வாழைப்பழம், "புஷ்ப்பம் சமர்ப் பயாமி" என மலர். மஞ்சள் தடவிய அரிசி, தூபம்—புகை' என மரபுவழி மங்களப்பொருள் சொல்லப்பட்டன. பரவாயில்லை. பொருள் புரிந்தது விட்டுவிடலாம்.

ஆரிய புராண இந்தப் பார்ப்பனக் கல்யாணப் புரோகித மந்திரம் என்ன சொல்கிறது?

புரோகிதர்கள் நெய்யூற்றி—ஓமம் வளர்த்து ஒவ்வொரு இந்து மதப் பெண்ணும்—அதாவது அவனுக்கு ஒரு மணமகள் இவள் சூடாதரோசா; கற்புக்கரசி, கன்னிகழிக்கப்படாதவள் என்று அவன் நினைக்கும் அளவிற்கு நாம் தெய்வ பயத்துடன் அந்த சம்பிரதாய மொழியின்—மந்திரங்களின் உள் கருத்துகள் அறியாமல், அந்தத் திருமணச் சடங்கு மந்திரத்தைச் சொல்ல வைத்து, உச்சி குளிர்ந்து விடுகிறோம். அதுதான் தவறு.

திருமணத்திற்குத் தயாரான இந்து மத மணப்பெண்ணை; ஒரு விபசாரியாக அந்த மந்திரம் சொல்கிறது. மானம் உள்ள மனிதன் அந்த மந்திரத்தின் பொருள் புரிந்தால் அதை ஏற்றுக் கொள்வானா? எப்படி? பார்ப்பனக் கடவுள்களான சோமன், கந்தர்வன், அக்நி என்னும் மூன்று தேவர்களும் வரிசையாக ஒவ்வொரு நாள்—ஒவ்வொருவராக அனுபவித்து பிறகு மனிதப் பிறவியான மணமகனுக்கு அந்தப் பெண் கன்னிகழிக்கப்பட்ட வளாக,—கல்யாணம் என்ற பெயரால் தாலி கட்டிய மனைவி யாகிறாள். இந்தக் கொடுமையை எங்கே கொண்டுபோய்த் தொலைப்பது?

"விவாக மந்திரார்த்தபோதினி" என்ற தலைப்பில் கீழாத்தூர் சீனிவாசாச்சாரியார் உரை எழுதி 'லிப்கோ' வெளியிட்டிருக் கிறது. அவற்றில் கண்ட விளக்கமாக :

"ஒவ்வொரு கன்னியும் (மணமகளும்) வரிசையாகச் சோமன் கந்தர்வன், அக்னி என்னும் தேவர்களை முதலில் கணவர்களாக அடைந்த பிறகே, நான்காவதாக மனித சாதியாகப் பிறந்த வனைக் கணவனாக அடைகிறாள்."

1. "ஸோம ப்ரதமோ
விவிதே கந்தர்வோ விவித உத்தர;
த்ருதீயோ அக்னிஷ்டே பதி
துரியஸ்தே மனுஷ்ய ஜா"

அதாவது கல்யாண ஓமப் புரோகிதர் மேற்கண்ட மந்திரத்தைக் சொல்லி—மணமகனைச் சொல்ல வைக்கிறார். எப்படி? "எனக்கு

மனைவியாகப் போகும் பெண்ணே! சோமன் முதலில் உன்னிடம் உறவு கொண்டான். பிறகு கந்தர்வன் பிறகு அக்னி!—உன்னுடைய நான்காவது கணவனாகிய நான் மனித சாதியில் பிறந்தவன்'' என வெட்கங்கெட்டதனமாக மணமகன் சொல்கிறான். இன்றும் இது புரோகிதரை வைத்துச் செய்யும் திருமணங்களில் சொல்லப்படுகிற மூடுமந்திரமாகும்.

2. ஸோமே (அ) தத் தந்தர்வாய
கந்தர்வோ (அ) தத் அக்நயே
ரயிஞ்ச புத்ரா குமச்ச அதாத்
அக்நிர் மஹ்யமதோ இமாம்''

இந்த மந்திரத்தின் பொருள் விளக்கக் கொடுமையைப் பாருங்கள். மணமாகவேண்டிய அந்தக் கன்னிப்பெண்ணை கொச்சையாகச் சொல்லவேண்டுமானால், ஒருவருக்கொருவர் என மாறிமாறி வரிசையாகக் கூட்டிக் கொடுத்து—உடலுறவு கொண்டாடி இருக்கின்றனர். எப்படி? முதலில் சோமன் ஒரு இரவு அனுபவித்து விட்டு' அந்தப் பெண்ணை மறு இரவுக்கு கந்தர்வனுக்குக் கொடுக்கிறான். அவன் உடலுறவு கொண்டு அனுபவித்துவிட்டு அடுத்த இரவுக்கு அக்னிக்குக் கொடுக்கிறான்.

அவன் அந்த மூன்றாம் இரவு உடலுறவு கொண்டு விட்டு சோமனுக்கும் கந்தர்வனுக்கும் சேர்ந்து தானே—அதாவது உத்தேசிக்கப்பட்ட தொகையைப் போல செல்வத்தையும், ஏன் புத்திரபாக்யமென்று வயிற்றில் குழந்தையுடன் அக்னி,—மனிதப் பிறவியான மணமகனுக்கே கொடுக்கிறான். அன்றே பரவி விட்டது எயிட்ஸ் நோய் எனலாம். அத்தோடு விடவில்லை. மண மேடைத் தாலி கட்டி முடிந்த பிறகு அந்தக் கன்னிகழிக்கப்பட்ட மணமகளை பெருமையுடன் ஏற்றுக்கொண்ட மனாமகனும், அந்த மணமகளும் நெருப்புக் குண்டத்தைச் சுற்றி வந்து அமர்ந்து—மணமகள் மணமகனின் வலது கையைத் தொட்டுக் கொண்டிருக்க; இந்தப் புரோகிதர் மந்திரத்தால் மாமா வாக்கப்பட்ட மணமகன்—நெருப்பு—அக்னியில் நெய் ஊற்றி பயபக்தியுடன் சோமன், கந்தர்வன், அக்னி ஆகிய மூவருக்கும், என் மனைவியை நீங்கள் மூவரும் அனுபவித்ததற்கு நன்றிப் பாராட்டும் வகையில் மறுபடியும் மந்திரம் சொல்கிறான். எப்படி?

இதுவே 'பிரதான ஹோமம்' புரோகிதர் சொல்ல மணமகன் சொல்லும் மந்திரம். என்ன?

**"சோமாய ஜநிவிதே ஸ்வாகா**
**கந்தர்வாய ஜநிவிதே ஸ்வாகா**
**அக்நயே ஜநிவிதே ஸ்வாகா**

அதாவது முறையே மேற்கண்ட மந்திரப் பொருளாக 'கன்னியைக் கன்னி கழித்தவனான சோமனுடைய ப்ரீதிக்காக வும், கந்தர்வன், அக்கி ஆகியவர்களுடை ப்ரீதிக்காவும், சேர்த்து மூவருடைய ப்ரீதிக்காகவும் அக்னியில் நெய் ஊற்றப்படுகிறது. கடைசியாக:

**"அவதீட்சா மதாஸ்த்த ஸ்வாகா"**

அதாவது கன்னியாகவே—கற்புள்ளவளாக ஒரு மணமகளை ஒரு மணமகன் கைப்பிடிப்பது தீமை. அப்படிப்பட்ட தீமையை விட்டும் இந்த மணமகள் நால்வருக்கு மனைவியானாள். அதற்காக அக்நியில் நெய் ஊற்றுகிறேன்.'

இப்படி மணமகன் சொல்ல வேண்டும்? விபசாரம் பலர் அறிய கல்யாண மேடையில் சொன்ன மந்திரத்தால்அது உறுதிப் படுத்தப்பட்டிருக்கிறது. பிள்ளைப் பேறு கடவுள் கொடுத்தவரம் என்று நாம் சொல்வதற்கு இதுவே அடிப்படைப் புரட்டு.

சக்கரவர்த்தித் திருமகன் என்ற பெயரில் ராமாயணம் எழுதிய ராசாசி; ராமனுடைய அப்பன் தசரதனுக்கு அறுபதினாயிரம் மனைவிகள் என்று வால்மீகி எழுதியுள்ள தற்கு; அறுபதினாயிரம் என்றால் உண்மையிலேயே உபசாரத் திற்காக அப்படி எழுதி இருக்கிறார் என்று திசை திருப்பிய பொய்ப் பொருள் போல, மேலே சொல்லி வந்த மந்திரங்களுக்கு வேறு பொருள் இருக்க முடியாது. இதைத் தொல்காப்பியப் பொருளகாரத்திற்கு உரை எழுதிய மதுரை, அந்தணர் பரத்வாச கோத்திரமென்று தன்னைச் சொல்லிக்கொண்ட, நச்சினார்க் கினியரே—தொல்காப்பியப் பொருளதிகார கற்பியல் 142—ஆவது பாடலான.

**"கற்பெனப்படுவது கரணமொடு புணர"**
**(கரணம் என்பது இங்கே ஆரியதர்மம்)**
**"மேலோர் மூவர்க்கும் புணர்ந்த கரணங்**
**கீழோர்க காகிய காலமும் உண்டே**

--தொ. பொ, கற்—142

என்பனவற்றிற்கு:

"முதல் நாள் தண்கதிர்ச் செல்வர்க்கும், இடை நாள் கந்தர்வர்க்கும், பின்னாள் அங்கியங் கடவுட்கும் அழித்து நான்காம் நாள் அங்கியங் கடவுள் எனக்கு நின்னை அளிப்ப;யான்

அங்கியக் கடவுள் எனக்கு நின்னை அளிப்ப யான் (உன்னை) நுகர வேண்டியதாயிற்று. அங்ஙனம் வேதங் கூறுதலால்; மதியும், கந்தருவரும், அங்கியும் ஆகிய ஆன்றோருக்கு அமைந்த வகையில் பள்ளி செய்தொழுகி நான்காம் பகல் எல்லைமுடிந்த காலத்து'' என்று, மேலே சொல்லப்பட்ட மந்திரங்களின் உண்மையான பொருள் அறிந்து, அந்த சோமன், கந்தர்வன், அக்னி மூவரும் மணப்பெண்களைப் புணர்ந்த பிறகே மணமேடைக்கு விட்டனர் என்றே கூறுகிறார்.

இவைபற்றிய விரிவான விளக்கத்தை எனது ''தொல்காப்பிய ஐந்திணை'' என்ற நூலில் கூறிஇருக்கிறேன். எந்தச் சூழலிலும் இந்து மத (ஆரிய) நிர்ப்பந்த முரண்பாடுகளை உரசிப் பார்க்கக் கூடாது என்ற குருட்டுத்தனமான கொள்கையுடையவர்களால் தான்--இன்னும் பெண்மை நலம் இழிவுபடுத்தப்படுகிறது. இதை வலியுறுத்தும் மனுதர்ம மறுபதிப்பே—இந்துச் சட்டம். இவை எந்த அடிப்படையிலே பாதுகாக்கப்படுகிறது?

தெய்வீகமென்று கற்பை நிரூபிக்க சீதையைத் தீயில் இறக்கிய ராமனின் நீதி; சூதாட்டத்தில் திரௌபதியைப் பணயப் பொருளாக வைத்த பாண்டவர் நீதி; விலைமாதர் வீட்டிற்கே சென்று உடல் அழுகிய போதும், 'கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்' என்ற பயத்தில் கணவனைக் கூடையில் வைத்து, 'தள்ளுவண்டி மூலம் சுமந்து இழுத்து, அதே விலை மாதர் வீட்டிற்குக் கூட்டிச் சென்ற அநுசுயா, நளாயினிமார்கள் நீதி, ஆகிய புராண இதிகாசக் குப்பைகள் எல்லாம் இந்து தர்மச் சட்டம்—இவற்றையே காட்டுமிராண்டிக்காலத்து அநீதிகள் என —அந்த நூல்களைப் பகுத்தறிவுப் பகலவன்களான தந்தை பெரியாரும். அம்பேத்கரும் முச்சந்தியில் வைத்துக் கொளுத்தினார்கள்.

பெண்கள் விடுதலை, நலம் வாழ்வு எல்லாம் உலகளாவிய அளவிலும், அவை மத அடிப்படையிலேயே அழுத்தப்பட்டிருக்கிறது. கிருஸ்த்து மதத்தில் பிரெஞ்சு நாட்டு 'சோன் ஆப் ஆர்க்' உயிரோடு கொளுத்தப்பட்டதும், இசுலாத்தில் வாக்குரிமை மறுக்கப்பட்டு, முகத்தில் பர்த்தாப் போட்டு பெண்கள் நடத்தப் படுவதும் கறை படிந்த செய்திகள். இந்த இருபதாம் நூற்றாண்டிலும், இந்து என்ற பெயரில் வட மாநிலங்களில் கணவன் இறப்போடு, மனைவி உடன்கட்டை ஏறும் கட்டாய உடன்பாட்டினை பூரிசங்கராச்சாரியும் வரவேற்கிறார் என்றால்—மதச் சடங்கு சம்பிரதாயச் சட்டம் இவைகளை வைத்துக் கொண்டே

ராசவாழ்வு வாழ்ந்து. தெய்வப் பெயரால் மக்களை அடிமைப் படுத்தியே வாழ நினைக்கின்றது ஒரு கூட்டம் என்பது தெளிவு.

அவ்வழிப் புரோகிதர்கள், சாந்தி ஓமத்தரகர்கள், அர்ச்சகர்கள், கோயில் பெருச்சாளிகள், இந்தத் தல புராணக் கோயில் அர்ச்சகர்கள், இவர்களைப் பற்றி தந்தை பெரியாரும் (4-3-1969) ''சில இடங்களில் தங்களுக்கென்று இவர்கள் ஒரு மனைவியும், பக்தர்களுக்கென்று ஒரு மனைவியும் உடையவர்களாக இருக்கிறார்கள், அப்படிப்பட்ட அர்ச்சகர்கள் என்றால் அவர்களைப் பார்ப்பனர்கள் இழிவாய் நினைத்த காலம் ஒன்று இருந்தது. வைணவ அர்ச்சகர்களும், சைவக் குருக்களும் கொஞ்ச காலத்திற்கு முன்பு மலையாளிகளைப் போல முன் குடுமி வைத்துக் கொண்டிருந்தார்கள். இப்போது அந்தப் பேதமே போய் விட்டது. இன்று பார்ப்பனர்களுக்கு எது எப்படிப் போனாலும், தங்களுக்குப் பெரிய சாதி என்கின்ற பட்டம், அந்தஸ்து இருந்தால் போதும், அதற்காக எந்தக் காரியத்தையும் எப்படியும் நடத்திக் கொள்ளலாம் என்பதை உயர் தர்மமாகக் கொண்டிருக்கிறார்கள்'' என்றார்.

தங்களைத் தனிமைப் படுத்திக் கொண்டு; உறவு, கடைப் பிடிப்பு, அணுகுமுறை இவற்றில் மாறுபட்ட பூர்வீக இனவெறி; கீழ்மட்டம், நடுமட்டம் என்ற சமூக மக்களிடம் தோற்றுப் போனதற்கான அறிகுறிகள் உறுதியாகிவிட்டன. அந்தஸ்து மேலாதிக்கம் என்கிற தினாவெட்டில் தங்களை உயர்ந்த சாதிகள் என்று சொல்லிக் கொள்பவர்களாலேயே அந்தப் பழமை, மேல்மட்டத்தில் சலசலப்பினை உருவாக்குகின்றது, ஆனாலும் அவை ஆதிக்கத் தற்காப்பு என்ற மூடத்தனத்தில் விமர்சிக்கப்படுபோது வாயளவில் ஒப்புக்கொள்ளப்படும் ஒற்றுமை ''கழுதை தேய்ந்து கட்டெறும்பு'' ஆன இழிபாடே மிஞ்சுகிறது.



# 15

# பகவத்கீதை என்ற பெயரில் பார்ப்பன சாதிமதம்

சமண சிந்தனைகள், யோகநிபந்தனைச் செயல்களில் கடுமை யான தவமிருந்து சமாதியாக முடிந்த கோட்பாடுகள் பயன் தரக் கூடிய வழிகள் அல்ல எனத் தெளிவான பிறகே யோக திருட்டிகள் சொர்க்கம் கண்டதாக விளம்பிய பார்ப்பனிய துவைத இணக்கங் களின் அடிப்படை வலிமை குறைந்தது.

பௌதிக யோக புத்தரும் (ஆறாண்டு தவத்திற்குப் பிறகே) யோக நிபந்தனைகளில் பார்ப்பனர்கள் கூறும் புனிதம், ஞான உதயம் எதுவுமில்லை—உடல் வனப்பிற்கு மட்டுமே அவை பயன் படும் என; திறந்தவெளி ஞானம்; சூன்யம் என; மக்கள் படும் வர்ணத் துயர்களை உணர்த்த நடை பயணத் தொண்டரானார். லோகாயத,சாங்கிய தரிசனங்கள் இயற்கைத் தத்துவப்பரிணாமம் கூறிய காட்சி வரி நிபந்தனைகள் புத்தரைப் பகுத்தறிவுச் செம்ம லாக்கியது. லோகாயதம் என்பதன் அடிப்படைக் கருத்து விளக்கமாக;

> "பிறப்பாக வந்தது அழியும் போது அந்த உணர் வும், அழிந்து விடுகிறது. அந்த உணர்வுக்கு அடிப்படை யான, அழிந்த உயிர்க் காற்றினைப் பொருட் படுத்த முடியாது. இறந்த உயிர், வேறு உடலில் புகுந்து மறு பிறப்பு இல்லை என்பதால் முற் பிறப்பு—பிற் பிறப்பு இல்லை. இருவினைக் கர்மத்தால் சொர்க்கம்—நரகம் தேவர்—நரர்—கடவுள் என்பதெல்லாம் வெறும் பொய் புரட்டு" எனவாகும் என்றார்.

நாத்திகவாதமென்று பார்ப்பனரால் கூறப்பட்ட இந்த லோகாயதம்—சாங்கியம் அவ்வழி விளக்கச் சார்பான தாவ

இயல் கூறும் வைசேடிகம்—. இவைகள் பூர்வ மீமாஞ்சை வழியில் வேத உபநிடதச் சடங்கு சம்பிரதாயம் கூறுகின்றன. அப்படித் திரித்து எழுதப்பட்ட உத்தர மிமாஞ்சையின் குழப்பமான செய்திகளால் இன்று இந்து மதமென்று அழைக்கப்படும் அன்றையக் கலப்பட மத வாதத்தினை,-சமஸ்கிருத மயமாக்கப் பட்ட காலவரம்பில் குறிப்பாக ஆரிய பாரத பகவத்கீதை, இராமாயணம் வாயிலாக சாதிவர்ணம் திணித்த—பார்ப்பன மதம் என்ற பெயரிலேயே தலைப்பிட்டு: அதற்குரியவற்றை வேறுபடுத்தியும் காட்டி விட்டனர். பகவத் கீதையின் அந்த முரண்பட்ட தத்துவக் கருத்தினைப் பற்றி சமூக இயல் அறிஞரான மேலை அறிஞர் மாக்ஸ் வெபர் என்பவர் தமது ''இந்திய மதம்'' என்ற நூலில் கீழ்க் கண்டவாறு குறிப்பிடுகிறார்.

> ''அண்டம் மாயை என்ற (அழிவுத் தோற்ற முடையது) அத்வைதக் கோட்பாடானது, — வேதாந்தம் என்ற பெயரில் வழங்கப்படுகிறது. அது (அத்வைதம்) ஐயத்திற்கு இடமின்றி வேதாந்தக் கோட்பாடினை விட மூத்ததும், அதற்கு முந்தியதுமாகும். இது யோக முறையுடன்—அது (அத்வைதம்) கொண்டிருந்த தொடர்பின் மூலம் நிரூபிக்கப் படுகிறது. மகாபாரதத்தின் முக்கியமான விபரங்கள் வேதாந்தம் என்ற வகையில் திருத்தப்பட்டன என்பதில் மேலும் சான்று காணப் படுகிறது'' என்றார்.

> பகவத்கீதையில் மேலேகண்ட இந்துத்துவக் கலவை மதத்திலிருந்து பிராமணியத்தை வேறுபடுத்திக் காட்டுகின்ற அறிஞர் எஸ். கே. பாண்டியன் அவர்களும் தனது ''மறைக்கப்பட்ட மரபுச் செல்வங்கள்'' என்ற நூலில்;

''பகவத் கீதையானது ஒருவரைத் தாழ்த்தி மற்றொருவரின் முக்யத்துவத்தைப் பெரிது படுத்திக் காட்டக் கருதி இயற்றப் பட்டது'' சமஸ்கிருதமயமாக்கலின் மூலமாக அவன் அவள்—, அது என்கின்ற இந்து மதத்தின் கருத்துக்கள் ரௌவ ஆகமத்தின் பாவவிமோசனப் படலத்தில்; பசு, பதி, பாசம், ஆக மாற்றப் பட்டன'' என்றார்.

பகவத் கீதையின் பெருமையாக—பிராமணியத்தில் உயர்ந்த வேதப் பொருள் இருப்பதாகக் கூறிய ஆதிசங்கராச்சாரியார், கலவையுள்ள இந்துமதத் தத்துவங்களை சிறப்பாக விமர்சிக்க மாட்டார். மநு நீதியின் மறுபதிப்பான பகவத்கீதையில்—ஓம்—தத்—சத் என்ற சொற்பொருளை; சுவாமி சின்மயானந்தா

விளக்கும் போது கூட; பிரம்மத்தின் மூன்று பதவிப் பெயர்களில் முறையே சாதிகள்—வேதங்கள்—யாகங்கள் தோன்றின என்று மெய்ஞானம் என்ற பெயரில், உலுத்துப் போன கொம்புகளால் பார்ப்பன உபன்யாசத்திற்கு முட்டுக் கொடுப்பார்.

ருக்வேதப் புருட சூத்திரத்தில் ஆரம்பமாகச் சொல்லப்பட்ட வருணம்—மநுநீதியின் வாயிலாக இந்தியச் சட்டமாக இருக்கிறது. ருக்வேதப் புருடச் சூத்திரம்—R.V. X—90 கூறியவாறு—மானுடனின் தலை பிராமணன், கைகள் சத்திரியன்; உடம்பின் இடைப் பகுதி வைசியன்; கால், பாதம், சூத்திரன் என்பதைக் கொண்டே மநுநீதி கூறும் வர்ணசாதி மக்களின் சமுதாய-அந்த இனவாரி விளக்கமாக அவரவர்க்கு;

பிராமணன் : வேத அறிவு, மதச்சடங்கு, புரோகிதம், யாகம் தானம் வாங்குதல், ஓதல், ஓதுவித்தல்.

சத்திரியன் : வீரமும் அதன் செயல்பாடும், பூஜாபரிபாலனம் பகைவர்களை அழிப்பது.

வைசியன் : பற்றுகின்ற விருப்பமான வணிகம்.

சூத்திரன் : குறைந்த அறிவுடையவன். உடல் உழைப்பிற்கு மட்டுமே தகுதியுள்ளவன்.

இவற்றில் மாணவனாகப் பிரம்மச்சாரி—குடும்பத் தலைவனாக

கிரகஸ்தன் : பற்றறுத்தவனாக வானப்பிரஸ்தன், துறவியாகச் சந்நியாசி என நான்கு காலக்கெடு வேறு.

மேலே கண்ட அடிப்படைகளைக் கொண்டுதான்; புரோகிதம், அரசு, வணிகம்—உழவுத் தொழில் செய்வோர் எனப் பிரிக்கப்பட்டு இதற்கு; யாகம், கர்மம், ஞானம், சொர்க்கம், நரகம் என அப்பட்டமான சட்டபூர்வமாக இன்னும் ஏமாற்றப்பட்டு வருகிறது. பார்ப்பன வேத ஆதிக்கத்தை நியாயப்படுத்தித் திணித்தபோதே பகுத்தறிவுக் குரல் எழுப்பியவர் லோகாயத சாருவாக்கர்:

''சொர்க்கமோ, கடைசி முத்தியோ, மேல் உலகில் ஏதேனும் ஆத்மாவோ கிடையாது! நான்கு வருணர்காரர்களின் முறையையும், கர்மாக்களையும் தர்மங்களையும் விதிப்பதால் உண்மையில் பலன் எதுவும் இல்லை'' என்று கூறியதோடு,

''பிராமணர்கள் தங்களுடைய வாழ்க்கை வசதிகளுக்காக ஏற்படுத்தித் திணித்தவையே இறந்தவர்களுக்காகச் செய்கின்ற இந்தக் கிரியைகளெல்லாம்!'' என்று தெளிவுபடுத்தினார். உடல் வளம் காக்கும் யோகப் பயிற்சி—புனிதம் கற்பித்து வேத கர்ம—மீமாஞ்சைக்குப் பக்க வலிமையாக மேலே சொல்லப் பட்ட மாணவன், குடும்பத் தலைவன், பற்றறுத்தவன், (பற்றற்றவன் அல்ல) துறவி, ஆகிய நான்கு நிலைகளுக்கு;

சரியை, கிரியை, பக்தி, ஞானம் என வகுத்து, இல்லத்தில் சொர்க்கம் முத்திபெற சந்நியாசி ஞானத்தில் அவன்—இரண்டு முறை பிறந்தவனாக இருக்க வேண்டும் என, அதற்கும் அவர்கள் தான தர்மக் கடமைகள் சொல்லி பூச்சாண்டி காட்டி இருக்கிறார்கள், பகவத்கீதையில் கொள்ளப்பட்ட மனுநீதியை செயல்படுத்த—அது கடவுளால் சொல்லப்பட்டது என்று மேற் கோள் உரைக்கின்றனர். சூத்திரர் அல்தாத மூவரே இரு பிறவி.

சன்யாசம் பெறவேண்டியவன் இரண்டு பிறப்பெடுத்த வனாக இருக்க வேண்டுமாம். என்ன வேடிக்கை என்று சிந்தியுங் கள். அவ்வாறே பற்றற்றவன் (நிஷ்காம்யகருமம்)சாதிவாரியாகச் சொல்லப்பட்டதைக் கடமை என்று ஏற்று துயரைத் தாங்கிட வேண்டும், அதாவது, அது சொந்தம், பிறப்போடு வந்த வர்ணாசிரம தர்மக் கடமை என்று—கேள்வி கேட்காமலிருக்க வாய்ப்பூட்டும் போடப்படுகிறது, எப்படி?

XVII—XIV—4-44 ஆகிய பகவத் கீதையின் சுலோகங் களில்; வர்ணசாதிப் பிறப்பின் அடிப்படையில்;விட்ணு. பிரம்மா. ருத்திரன் என்ற வகையில் ''சிருட்டி மூலத்தையும் பிண்டத்தை யும் தனிப்பட்டதாக்கி, ருத்திர கோரத்தைச் சூத்திரக் கறுப்புக் கடவுளாக சிவபெருமானாக்கிக் கூறப்பட்டிருக்கிறது.

மீண்டும் அவை கூறியவாறு:

பிராமணன் அறிவாளி. சத்துவ சாத்வீக (தூய்மை) குண முள்ளவன். கடவுள் வழிபாட்டில் அவனுக்கு மக்களிடம் ஓதுதற் பணி, சொர்க்கவாதி.

சத்திரியன், வைசியன்; நிர்வாகம், தொழில் கொண்டவன்,ரசோ குணமுள்ளவன் (உணர்ச்சி), அவன் வழிபாடு யட்ச கானம், இராட்சசர்.

சூத்திரன் : உழவு. பயன் கருதாது பணி செய்து கிடப்பதே. கறுப்பு நிறமுள்ளவன். தமோ குணம். அவன் வழிபாடு பேய் பூதம், இயற்கை ஆவி, பிறப்போதற்குறி.

உலகளாவிய பிறப்பு வளர்ப்பில்; குழந்தை வளர்ப்பு என்பது சூழ்நிலையில் அறிவும், அது இல்லாமையும் பெறுகிறது—பெற்றோர் ஊட்டும்; அவர்கள் தழுவியமதப்பாலால், சுயசிந்தனை முடக்குவாதமாகிறது. எம்மதச் சார்புமில்லாத பொது நோக்கில் அனைத்துக் கல்வி, தொழில் வரலாறு பண்பாடு, ஆகிய வற்றில் மனிதன் சீர்தூக்கும் பகுத்தறிவில் சிந்திக்கும்போது வேண்டாதவற்றால் அழுத்தப்படும் (போது) மாதவாதச் சூட்சிகளை அறிகிறான்—உணர்கிறான்.

இதற்கு நேர்மாறாக ஒவ்வொரு மதவாத ஆரம்ப ஆணையில் அவன் ஞானஸ்தானம் பெறும்போது மதச் சம்பிரதாயச் சடங்கு, கட்டுப்பாட்டு விதி ஆகிய இவைகளுக்கு அடிமையாகிவிடுகிறான். அந்த வரிசையில் இந்து வர்ணசாதி மத பகவத்கீதையில் மநுநீதியின் கட்டாயம் மாட்டடிமையாகத் திணிக்கப்பட்டிருப்பது தெளிவாகிறது.

மனிதனின் சுய சிந்தனை வளர்ச்சியில் பெரியார் அண்ணா, கூறியவாறு; கடமை, கண்ணியம், கட்டுப்பாடு இயல்புகள் எல்லாமே இங்கு பார்ப்பன வர்ண தர்ம அடிப்படையிலே சொல்லப்படுகிறது. இந்த அடிப்படையில் ஆரிய பிராமண வேதங்களால் இந்து மதம் என்ற பெயரில் காட்டாய விதிமுறை ஈடுபாடு, செயல், குணம் தொழில் எனப்பகுக்கப்பட்ட வகையிலே தான் இந்து தத்துவம், ஆன்மீக—சித்தாந்த வேதாந்தம், அத்வைதம், துவைதம், உபநிடதம்; ஆகமம் (வழிகாட்டி என்பவை ஐயமற உணர்த்தப்படுகிறது. யசுர்வேதச் சடங்கு சம்பிரதாயம் ஆகிய விதிகளுக்கு மேலே சொன்ன மீமாஞ்சை மதமாக (இந்து) அந்த மதமும், பார்ப்பன முக்கியத்துவம் வாய்ந்த மநுவின் கட்டளையாக அந்தப் பகவத் கீதை மதமும் முன்னேற்பாடாக ஆங்காங்கு பிரித்தே கூறப்பட்டிருக்கிறது. ஆனாலும் பார்ப்பன விமர்சகர்கள்; நேரம், பேசுபொருள்களுக்கு ஏற்றாற்போல, காலத்திற்கேற்றவாறு இரண்டையுமே பிரித்தும் சேர்த்தும் பொருள்கூறி. அறியாதவர்களை நம்பவைப்பார்கள். இவை ஆரிய புராண சமஸ்கிருமயம் தொட்ட வழக்காகும்.

வேதகாலமும் அதன் முற்பட்ட செய்யுள்களும் ஆரியர்—திராவிடர் ஆளுகையை நாள்ப்பட்ட போராட்டங்களில் எல்லை பிடித்த சூட்சியும் (சாதி வருணம் அப்போது ஏற்படவில்லை) மூடமதித்திணிப்பும் நிறைந்த துதிகளாகவே இருக்கின்றன.

அப்போது மறுபிறப்பு பற்றிய முடக்குவாதங்கள் இல்லை. ஆனாலும் ருக்வேதம் முழுதுமே—முன்னரும் பின்னரும்

இந்திரனை வேண்டித் திராவிடரிடமிருந்து ஆரியர் தங்களைக் காப்பாற்றிக்கொள்ள சோமபானக் கஞ்சா,—சுரபானப் படைப்பு—விலங்குப் பலிகள்—மிருகப் புணர்ச்சியான ஆண் பெண் உறவுகள் அனைத்தும் மலிவாகச் சொல்லப்பட்டிருக் கின்றன. கிரேக்கர்களின் மறுபிறப்பு நம்பிக்கைகளே கி. மு. 325 இல் இந்தியா வந்த அலெக்சாண்டர் படை எடுப்பிற்குப் பிறகே பார்ப்பனத்தரகர்களால்—அந்தப் புரோகிதர்களால் அவை தழுவிக் கொள்ளப்பட்டு செயல் ஆக்கமாக புராண இதிகா சங்களும் எழுதப்பட்டன. தற்காத்தல் பொருட்டு வழி கொள்ளவே பார்ப்பன இனம் திராவிடத் தத்துவ இயல்களை ஒழிக்க முடியாவிட்டாலும் ஒதுக்கி வைத்தே சுயநல மதமாகத் தங்கள் கருத்துக்களுக்குப் பக்கவலிமையாக வேத விதி, மநுநீதி எனப் பலவற்றைத்துணைகொண்டு நிறவெறியிலும்,கொள்கைப் பிரிவிலும் வேறு பட்டுத் தனித்தே அது பார்ப்பன மதமாகவே வளர்ப்பிலும் அவை அவர்களால் பாதுகாக்கப்பட்டு வந்திருக் கின்றன.

திராவிடத் தத்துவ இயற்கை வாதத்தில்: லோகாயத நாத்திகப் புத்தமதம் தவிர சமணமதம், பார்ப்பனமதம் ஆகியவை அனைத்துச் சிறுசிறு பிறமதக்கோட்பாடுகளையும் தம் வயப்படுத்தி பிற்பட்டு சிவனியமாலியங்களுக்கும் முன்னோடி யாக கடவுள் வாதங்களையே ஆதரித்து முத்திரை குத்தி விட்டிருக்கின்றன.

சிறுபான்மை ஆரியர் இந்தியாவில் (கி. மு. 1500) நுழைந்து தந்திரமாகத் திராவிட மக்களிடம் பழகி, மொழி, நடையுடை பண்பாடு, ஆய்வு, அறிவு, திட்டம் செயல்பாடு என அனைத்தை யும் கற்றறிந்த பிறகு எதிர்த்து வேதம் பாடித்தங்களை முன் நிலைப்படுத்திக் கொண்ட சூட்சி, அதை நிரந்தரப்படுத்த கதை, புராணம், கற்சிலை, மந்திரம், சுலோகம் சாதிவர்ணம், அதற்கு நீதிநூல்கள் என அதனிலும் வேறுபாடு தனித்தன்மை என நாமம்போட்டே வந்தது தெளிவாக அறியப்பட்ட வரலாறாகும். ஆரியர்கள், தழுவினார்கள்—மாற்றிக் கொண்டார்களே— தவிர திராவிட பௌதீகத்தின் அடிப்படை மண்வாசனைக் கண்டுபிடிப்புகளை அழிக்க முடியவில்லை.

பிற்பட்ட காலவரையறையில் அந்தத் திராவிடக் கோட்பா களுக்கு, அண்மையில் அமெரிக்கவின் காசின் பல்கலைக் கழகப் பேராசிரியர் இராபர்ட் எரிக் பிரைகென்பர்க் என்பவர் கூறிய வாறு ''இந்தியாவில் பிரிட்டீசாரின் வருகைக்குப் பிறகுதான் ''இந்து த்வம்'' என்ற வார்த்தையே வந்தது'' எனவாக,

திராவிடப் பௌதீக சிந்தனைஎன விமர்சிக்கப்படும் செய்தித் தொகுப்புகளுக்கு தற்பொழுது மொத்தமாக ,இந்து த்வம்' எனக்கலப்பட மொழித் தலைப்பு கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த இந்து தத்துவம் என்பது பார்ப்பன மதத்திற்கு எதிரிடை. யாக வேறுபட்டு நிற்பவையாகும்.

இனம்--சாதி மதம் என்று ஆரியம் நம்மைப் பிரித்தவகை யிலேயே கூறுமிடத்து தந்தை பெரியாரும் ''இந்த நாட்டில் வாழும் ஆரியர் தவிர்த்த மற்ற எல்லா மக்களும் முஸ்லீம்களும், கிறித்தவர்களும் உட்பட எல்லோரும் திராவிடர்கள் தாம். அதாவது ஆரியர்கள் தவிர்த்து என்றுதான் கொள்ளவேண்டும். அவர்களையும் திராவிடர்கள் என்று ஒப்புக்கொள்ளாமைக்குச் காரணம் அவர்களுக்கும் நமக்குமுள்ள பல்வேறு பண்பு கலை ஆசாரம், நடப்பு, ஆகிய பல; வேறுபாடுகள்தாம். பிறவி காரண மாக வேறினத்தவர் என்று ஒதுக்கவில்லை. யாரையும் ரத்தப் பரீட்சை பார்த்து ஒதுக்கவில்லை. பழக்கவழக்கங்களைப் பார்த்துத்தான்.''

''இந்த நாட்டில் சட்டைக்காரர் என்று ஒரு கூட்டமக்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஆங்கிலத் தந்தைக்கும் திராவிடத் தாய்க்கும் பிறந்தவர்கள்தான். அவர்கள் இரண்டு பிரிவான மக்களின் இரத்தக் கலப்பால் தோன்றியவர்கள்தாம் என்றாலும் அவர்கள் பண்பு ஆங்கிலேயர் பண்பைப் பின் பற்றியதாக அமைந்து விட்டதால் அவர்களை நாம் ஆங்கிலேயர் என்று இந்தியர், இந்துக்கள் முஸ்லீம்கள் என்பவர்களுக்கு மாறு பட்டவர்களாகப் பிரித்து அழைத்து வருகிறோமா? இல்லையா? அதேபோல்தான் நாமும்பார்ப்பனர்களை நம்மிலிருந்து பிரித்துப் பார்க்கிறோம். பார்ப்பனர்களின் பண்பு: கலை, ஆசாரம் முதலியன வேறு.''

''பார்பப்னர்கள் எப்போதுமே திராவிடர்களை ஒதுக்கி வைத்துத்தான் வந்திருக்கிறார்கள். அதாவது தாம் உயர்ந்த வர்கள், திராவிடர்கள் தாழ்ந்தவர்கள், இருவரும் தனித்தனிப் பிறப்பு என்கிற உணர்ச்சி அவர்களை விட்டு எப்பொழுதுமே நீங்கியதில்லை!''

—என்றார் (5—10—1948

பார்ப்பனரல்லாதார் கல்வியறிவு பெறுவதைத் தடுத்த வகையில் கடவுள், மதம், சாதி வருணம் என்ற அடிப்படை வேத—மநுவாதப் பார்ப்பனர் தங்களைத் தெய்வீகப் பரம்பரை வாசனையுடையவர்கள் என்று கூறி வரலாற்றில் அழுத்தப்பட்டு அடிமை கொள்ளப்பட்ட சூத்திர மக்களுக்கு படிப்பறிவு வருவ

தென்றால் "கல்வியறிவு பரம்பரையாய் வரவேண்டும், திடீரென்று ஒருவனுக்கு அதைப்புகட்டினால் அவன் விருத்தி யடைய மாட்டான்! என்று கூறிய ஆரிய சமாசவாதிகளுக்கு "விவேகானந்த விசயம்' என்ற தமது நூலில் விவேகானந்தர் "பிராமணர்களுக்குப் பரம்பரை வாசனையின் காரணமாக படிப்பில் பறையனுக் (பஞ்சமசாதி)கிருப்பதைவிட அதிகம் ஊற்றம் இருக்குமாயின், பிராமணன் படிப்புக்காக கொஞ்சம் கூடப் பணம் செலவிட வேண்டாம் அதையெல்லாம் பறைய னுக்கே செலவிடுங்கள்!" —என்றார்.

சுவாமி விவேகானந்தர் ஆரிய சமாசத்தின் தலைப்பாகை என்றாலும், பிராமணரல்லாதவர்களின் துயர் துடைக்க ஆரம்ப முதல் குரல் கொடுத்துக்கொண்டே இருந்தார். உலக அடிப் பலடயில் உடற்கூற்றின் இனவேறுபாடு என ஆரம்ப வரலாற்றில் அதன் ஆராய்ச்சியாளர்கள்; மங்கோலிய இனம், காக்கேயர் (காக்கேசியர்) திராவிடர், நீக்ரோ செவ்விந்தியர், ஆரியர்—என ஆறுவகைப் பிரித்தனர். நிறவேறுபாட்டிலும்; பூமத்திய ரேகையை ஒட்டியுள்ள வெப்பமிகு பகுதியில் வாழும் மக்கள் கறுப்பு நிறமுடையவர்களாகவும். மிதவெப்பம், தட்ப நிலை களில் வாழ்வோர் சிவப்புநிறமுடையவர்களாகவும் உள்ளனர். மேற்கண்ட இன வேறுபாட்டினை அகலாய்வுப் புதைப் பொருள் ஆய்வு வாரியாகவும் தோண்டி எடுக்கப்பட்ட இன்றையக் கண்டு பிடிப்புகளில் கூட; முகம், தாடைஎலும்பு, மண்டையோடு மூக்களவு என்ற உறுப்புகளாலும் அறிய மூடிகிறது.

திராவிட நிலவாரிப் பகுதி மக்களில்; மொழிவாரி—நிறவாரி என ஆரியத்தால் மநுதர்ம அடிப்படையில் கட்டுப்படுத்தப் பட்டதே கீழ் மக்கள்; மேல் மக்கள் என்ற சாதிப் பூச்சு. மொழி வாரி; சமஸ்கிருதம் தேவபாசை, தமிழ் நீச பாசை அல்லது சூத்திர பாசை என்று கேவலப் படுத்திய பார்ப்பனர் ஆரிய திராவிட வாதத்திற்கு முற்றுப் புள்ளி வைக்க—வேத மநு சாதிப் பாடு; அமுலில் சமஸ்கிருதம் என்பதன் வாயிலாக இந்தியாவை இணைக்க முயற்சிப்பது ஆரியமய—சமஸ்கிருதப் புராண மய—சோம, சுரபான மயக்கமாகும். அது பார்ப்பனர்கள் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் சிறுபான்மையினரான தங்களின் பறிக்கப்படும் அந்தஸ்த்து, ஆதிகாரங்களை ஞாயப்படுத்திக் கொள்ள எடுக்கும் விபரீத சூட்சியாகும்.

பார்ப்பனர் கூற்றுப்படி; சமஸ்கிருதமென்பது ஆரிய மொழி என்றால், தமிழ் என்பது திராவிட மொழியே. கி. பி. ஏழாம் நூற்றாண்டுக் காஞ்சி குமரில பட்டரும் தமிழை திராவிட மொழி

என்றார். கி. பி. எட்டாம் நூற்றாண்டு ஆதிசங்கரரும் திருஞான சம்பந்தரை 'திராவிடசிசு' என்றார்.

இந்திய மொழிகளுக்கே தலைமையாக நின்று, முதன் முதலாக மேலே உலகிற்கு பல கிளை மொழிகளுக்குத் தாயாகி நின்றது தமிழ் மொழியே என; ந. சி. கந்தையா பிள்ளை எழுதிய ''திராவிட இந்தியா'' என்ற நூலில் வி. ஆர். இராமச்சந்திரர்;

''இன்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகளின் முன் சிந்து ஆற்று வெளிகளில் திராவிடர் நாகரீகமே பரவி இருந்தது. அங்கு தமிழ் வழங்கிற்று. இம் மக்களின் தொடர்புடையவர்களே ஆப்கானிஸ்தானத்தில் தங்கி வாழ்ந்தார்கள். அவர்களின் சந்ததியினரே திராவிடத்தின் சம்பந்தமுடைய 'பிராகூய்' மொழியை இன்றும் பேசி வருகின்றனர்'' என்றார்.

இன்றும்: ''தமிழ் எழுத்து முறையின் சின்னங்கள்—மாதிரிகள், ஸ்காண்டினேவியா, சப்பான் போன்ற நாடுகளில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. ஆப்பிரிக்க மொழிகள் பலவற்றிலிருந்து தமிழோடு நெருங்கிய உறவு இருப்பதாகக் கண்டு பிடித்திருக்கின்றனர்''—என்ற உண்மையை (1995) தஞ்சையில் எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டில் இந்தியத் துணை குடியரசுத் தலைவர் மாண்புமிகு கே. ஆர். நாராயணன் கூறியதை நினைவு படுத்திக் கொள்ள வேண்டும்.

தமது வணிக அதிகார பேச்சு மொழிச் செயல்பாட்டுக் கலப்பட மொழியாக (சமஸ்கிருதம்) வில்லியம் சோன்ஸ் என்பவர் பயன்படுத்திய அதாவது; லத்தீன், கிரேக்கம் கீப்ரு ஆகிய மொழிகள் போல செத்த காலேகில் இருக்க வேண்டிய சமஸ்கிருதம் என்பதை ஏதோ ஆய்வு செய்பவராக—வேத நூல் பதிப்பிற்கு என வந்த செர்மன் மாக்ஸ் மூலரும் தமது வயதான காலத்தில் தென்னக, இனம், மொழி, நாகரீகம் என்ற ஆய்வில் தமிழே உலக மொழி என்று கூறி அதற்கும் சிறந்த எடுத்துக் காட்டுகளுடன் அதை நிறுவினார்.

இந்து, ஐரோப்பியம் இந்து ஆரியம் என்று பலர் செய்த ஆய்வு வழியில் தமிழ்த் திராவிட மொழி வகைகளை கால்டுவெல் ஒப்பிலக்கணமாகத் தொகுத்தார். வீம்புக்காக—வரலாற்றுக்குப் புராண மேற்கோள் காட்டும் பல தர்ப்பணங்களை, திரை மறைவில் உள்ள சில பார்ப்பன முதலைகள் அவ்வப்போது ஏதோ ஓமம் வளர்க்கப் பயன்படுத்துகின்றனர். இந்தியாவில் மொகலாயர் சாம்ராஜ்யம் ஏற்பட்ட போதும், வெள்ளை ஆளுகை ஏற்பட்ட போதும் இந்து மதம் என்ற பெயரில் பார்ப்பன மத வர்ண மநுதர்ம அடக்கு முறை, அடிமைத் தனச் சட்டம், சம்பிர

தாயம் ஆகிய சடங்குகளில் துயர் தாளாது வாய் விட்டழுத சூத்திர நாலாம் சாதி; பஞ்சமர், அடியோர், வினைவவர், அன்றைய சூழ்நிலைக்கு ஏற்றவாறு காப்பாற்றப்பட்டதாக குர்ரானையும், விவிலியத்தையும் தழுவி ஆறுதல் பெற்றனர். மத விளம்பரம்—ஆரம்பக் கல்வி சுகாதாரம், உணவு, உடை கொடுத்து திருச்சபை மருதி எழுப்பிப் பாடுதற்கு சூத்திர மக்களுக்குப் பயிற்றுவிக்கப்பட்ட—அந்தந்தப் பள்ளிக் குருமார்களால் படிப்பிக்கப்பட்டபோது அவர்களின் பகுத்தறிவுக் கண்களும் திறந்தன.

அன்றையப் பாதிரியார்கள் பலர் ஆய்வு செய்து எழுதி வைத்த உண்மையான வரலாற்றுச் செய்திகள் அடங்கிய நூல்களே பார்ப்பனர்களின் முக மூடியைக் கிழித்தன. மேலை நாட்டினர்,பார்ப்பனர்களின் திட்டமிட்டு நடத்தி அடக்கி ஆண்டு வந்த சூட்சிகளை அவர்கள் சுட்டிக் காட்டியதால்—புராண இதிகாசம், வேதம், தர்மங்கள் என்ற பெயரில் உள்ள பயங்கர இருட்டடிப்புகள் தெரிந்து விட்டதால் பார்ப்பனர்கள் பொருமி வெடித்து ஓளையிட்டதுதான் மிச்சம். ஆனாலும் பார்ப்பன அடிவருடிச் சூத்திரரர்களோ இன்னும் எச்சல் இலைகளாக, எடுபிடிகளாக தங்களையே தாங்கள் அழித்துக் கொள்கின்றனர்.

ஆரியம்—திராவிடம் என்பது அனைத்து இந்தியாவில் அனைத்திலுமுண்டு என்பதறிந்து அதைத் திருத்துவதற்கென ஒருமித்து மக்களை ஒற்றுமைப் படுத்தி பிழவுஏற்படாமல் செய்ய; கடலுக்குச் சிறிய அணை கட்டி நீர் எடுக்க முயன்ற சுவாமி விவேகானந்தர் கூட "ஆரியர்களும் இந்தியாவில் தொன்று தொட்ட ஆதிக்குடி மக்களே!" என்று பேசி வாய் வலித்து பிறகு தாமே சிந்தித்து அதை மாற்றிக் கொண்டார். பார்ப்பன மதவாத நடைமுறைக் கெடுபிடி தாளாமல் அவர்களை எதிர்த்தார்.

"வருங்காலத்தில் சூத்திரர்களே நாடாளுவார்கள்!" என்றார். ஆனால் அம்பேத்காரோ பார்ப்பனத் தீண்டாமையால் அல்லல் பட்டவர். "பார்ப்பன இன வாரிசுகள் அடிப்படை ஒற்றுமையைக் கெடுத்தவர்களாயிற்றே!" எனக்குரல் கொடுத்தார்.

### அறிஞர் அண்ணாவும்

"மேனாட்டாரின் ஆராய்ச்சியின் பயன்களை அனுபவிக்கின்றோமே அப்போதாவது அறிவுக்கு வேலை தருகிறோமா?"

"ஆரியர் வகுத்த சாதிமுறை நான்கினுள், யாரால் சூத்திரராக்கப்பட்டோம் என்பதை எண்ணிப் பாராதது மட்டுமல்ல

தமிழருடை மொழி, கலை, இலக்கியம், சமூக வாழ்வு என்ற அனைத்தும் ஆரியர்களின் உதவியால்த்தான் நிலைபெற்று நிகழ் கின்றன என்றும் நினைக்கின்றோமே?''

என்றார் (21, 29-12-1948)

இன்றும் முரட்டுத்தனமான பெரிய வியாபாரங்களில் தில்லு முல்லுகள் செய்து செல்வந்தர்களாக வாழ்பவர் கூட அந்தப் பார்ப்பனப் புரோகிதங்களை சற்றும் சிந்திக்காது ஆதரித்து நன் கொடையும் அவர்கள் மதசம்பிரதாய வளர்ச்சிக்குப் பாராட்டு, பரிந்துரைகளில் தங்களையே இழந்து அடிமைகளாக—ஆனால் பூச்சு—புனஸ்காரப்பரிவட்டங்களாக; அவை பெருமை என்றும் எண்ணுகின்றனர்.

மனித இனத்தைப் பிரித்துக் காட்டும் அடிப்படையான—காட்டுமிராண்டிக்காலக் கோட்பாடுகளை நாம் விடாப் பிடியாகப் பின்பற்றுவதன் வாயிலாக நிரந்தரத் தற்குறிகளாவ தோடு—ஒற்றுமை விடுதலையைப் பற்றிச் சிறிதும் எண்ண முடியாத முடமதியராகி விடுகின்றோம். வளர்ந்த விஞ்ஞான அறிவியலில்; கூட்டணியான மனித ஒற்றுமை அரிய பெரிய செல்வங்களைப் பெறுக்கி இருக்கின்றன. மதவாத ஏழைமையை நம்மிடமிருந்து விடுவித்தால் ஒழிய நினைவில் சுமையாக உள்ள ஒவ்வாத கற்பனைகள் வாழ்நாள் முடியத் துயரப்படுத்திக் கொண்டேதான் இருக்கும்.



# 16

# விழிப்புணர்ச்சி என்ற பெயரில் விவேகாநந்தர் கருத்துரை

அனைத்து இந்திய மாநிலங்களும் சட்டமாக்கப்பட்டு நிர்வகிக்கப்பட்ட வர்ணசாதி மநுதர்ம வாயிலாக, பன்னெடுங் காலமாக, ஏற்றத்தாழ்வு, ஊழ்வினை, விதி, கர்மம் தோசம், நிவர்த்தி, பல மொழி, பல இனம், மேலாதிக்கம், தீண்டாமை, நாலாஞ்சாதி, பஞ்சமர், வேதாகம குருகுலம், பார்ப்பனிய முன்னுரிமை, சடங்கு, சம்பிரதாய வழிப்பாடு அறங்காவல் கோட்டக் குருக்கள் கூட்டம் எனப்பல அடிமைத்தன அழுத்தங் களால் சிதறுண்டு போனவையாகும்.

பிற மதங்களான—குறிப்பாக கிருத்தவம், இசுலாம், பரவாத, அவை இல்லாத வேத காலத்தில் ஆரியர்களால்—நாத்திகர், தசுயூக்கள், அடிமைகள், கறுப்பர்கள், எனப் பழிக்கப் பட்டு—அவர்களால் வேள்விக்குழிகளின் மூலம் அச்சுருத்தி அடிமைகளாகக் கொள்ளப்பட்ட ஒரே இனமான திராவிடச் சூத்திரர்களே—பார்ப்பன வேதவழி மேலாதிக்கம் அல்லது அந்தப் பிராமண, சத்திரிய, வைசியம் தழுவிய பூர்வீகக் கர்ம நியதி, ஆச்சாரங்களால் ஈர்க்கப் பட்டவர்கள். தேசவிடுதலை, சமதர்மம், சுதந்திரம், ஒற்றுமை, ஒரே மொழி என எழுந்தவர் களில்—கோகலே தியாகி கோபால கிருட்டிணர், பாலகங்காதர திலகர், வழியில் காந்தியும் வருகிறார்.

இந்தியா சுதந்திரம் பெற்றதோ 15-8-1947—இல். காந்தியார் கொல்லப்பட்டதோ 30-1-1948-ல். அதாவது சுதந்திரம் பெற்ற 165—ஆவது நாளில் மராட்டிய ஆர். எஸ். எஸ்—நாதுராம் கோட்சேயால் கொல்லப்பட்டார். ஏன்?—பார்ப்பன தர்மங்களை காந்தியார் ஆதரவாக விமர்சித்த

போது மகாத்மா என்றார்கள். சாதி வர்ணப் பார்ப்பன மேலாதிக்க முனைப்புகளை உணர்ந்தவராக 7-12-47 இல், காந்தியர் "இந்தியா மத சார்பற்ற நாடு" என்றார், அன்று முதல் 53—ஆவது நாள் அதாவது 30-1-48 இல் காந்தியார் கொல்லப் பட்டார். ஏன்? காந்தி பகுத்தறிவாளராகி விட்டால் ஆரிய சமாசத்திற்கு ஆபத்து என்று பார்ப்பனர்கள் கொலை காரார்களாக மாறினார்கள்.

ஆரம்பத்தில் ஆரிய மனுதர்ம வர்ணசாதி இயக்கங்கள் மூலமாக நாட்டின் ஒற்றுமை, முன்னேற்றம், சுதந்திரப் பயன் என்றுபாடுபட்டுத் தோற்றவர்களில் காந்தியுடன் விவேகா னந்தரும் வருகிறார். கல்கத்தா காளீசுவரர், இராமகிருட்ண பரம அம்சரில் சற்று மாறுப்பட்டவரானாலும், அன்றைய மதவாத சமாசங்களுக்கு நேரடியான எதிர்ப்பாளராக வர முடியாவிட்டாலும், தமது ஆய்வில் பார்ப்பனியத்தால் ஒடுக்கப் பட்ட சூத்திரமக்களின் விடுதலைக்காக ஆங்காங்கு குரல் கொடுத்தவர் விவேகானந்தர் என்பதை இங்கே நினைவு கொள்ள வேண்டும்.

வெள்ளையரிடமிருந்து சுதந்திரம் பெற்றபோதே, இந்து இசுலாமிய ஒற்றுமையை வலியுறுத்தி—பிரிவினையை எதிர்த்து உண்ணாவிரதமிருந்த காந்தியை பாகிஸ்தான் முதல்வர் ஜின்னா தேற்றினாலும்—மதவாதப் பிரிவினையில் ஒற்றுமை கைகூட முடியாமல் பல நவகாளி இழப்புகளை அன்றையத் தேசியத் தலைவர்கள் இரத்தக் கண்ணீருடன் சந்திக்கவேண்டியதாயிற்று. இது தேசிய வரலாறு.

ஆனாலும், அவ்வழி வந்த வடமாநிலத் தலைவர்கள் எனக் குருமார்கள். தர்மகர்த்தாக்கள், பஞ்சாயத்து ராசாக்கள், அரசியல்வாதிகள், மடாலயத் தலைவர்கள் அனைவருமே அவரவர் மொழியில்—வர்ண சாதிப்பிரிவில் சூத்திர நாலாந்தர, பஞ்சம சாதியென அடக்கி ஒடுக்கப்பட்டு அடிமைகளாகவே அவர்கள் செத்துமடிந்திருக்கின்றனர். அது அவர்களின் கர்ம வினை—ஊழிவிதி—சாபம் — தோசம், என்றே.— மகாத்மா காந்தி சொன்ன கருத்தையே நன்கு வலிமைப்படுத்தினர்.

ஆன்மீக வாதத்தில் சாதிவாரிக் கடவுள் ஞானத்தைப் புகுத்தி' அவற்றைக் கொண்டு மானியம், மடாலய வாழ்க்கை யுடையவர்கள்'—தங்கள் நலமும்—பொருள் குவிப்பும் போய் விடுமோ என்ற குறுக்கு வழிச் சிந்தனைகளிலேயே அவரவர் காலத்தை, அந்தந்த நிறைவுகளிலேயே கழித்து,—மறுமலர்ச்சி,

பகுத்தறிவு, ஆய்வுச் சிந்தனை ஆகியவற்றைத் தலைதூக்க விடாமல் குண்டாந்தடி கொண்டு அடித்துக் காவல் புரிந்தனர்.

மனுதர்மப் பார்ப்பனர்கள் வர்ணதர்மம் காப்பதற்காக, முனைந்தாலும், தனித்தனியே, ஒட்டாமல் நின்ற அவர்களை ஆன்மிக நெறியும், மதக்கோட்பாடுகளும், உள்ளாழம் என்று சொல்லும், பிதற்றல்களைச் சகித்துக்கொண்டு இந்துலோகாயத சாங்கிய, யோக வழியின் கலப்பட ஆன்மிகத் தத்துவமும்: மத வழி ஆன்மீக வாதமும் எண்ணிக்கை அதிகம் உள்ளவரிடம் உயர்ந்தும், தாழ்ந்ததும் விமர்சிக்கப்படுகின்றன.

மதவாத ஆன்மிக ஞானம் பெற்றவன்—தத்துத ஆன்மிக சிந்தனையாளனிடமிருந்து தனித்தே நிற்கிறான். சிவஞான போதம் கூறும் ஆன்மிக வாதம் கடவுளின் தன்மையில் உலகின் மேம்பாடு கூறி, ஞான அறிவு என்பதை கடவுளோடு ஒன்றுபடும் ஆன்மா என விமச்சிக்கின்றது. இவர்கள் கூறும் ஆன்மநேய ஒருமைப்பாடு எனபதே வர்ணமதவாதமாக இருக்கும்போது—அப்படி வளர்க்கப்பட்டு, மக்களினம் அதை மனப்பாடமாக வைத்து, வாழ்வில் கடைப் பிடிக்கும்போது—அவை ஏற்ற தாழ்வில்லாத சமதர்மத்தையும்—விடுதலையையும் எப்படி அது அங்கிகாரம் செய்யும் என்பதே கேள்வி.

மனுதர்ம ஆரிய வர்ணமுள்ள மேற்கண்ட அடிப்படையில் தான் விவேகானந்தரும், காந்தியாரும், சமதர்மம்: மனிதநேயம் விடுதலை, தீண்டாமை ஒழிப்பு—அனைவருக்கும் அனைத்திலும் பங்கு என்று குரல் கொடுக்கின்றனர்.

மதச்சார்பு இல்லாதனவே பகுத்தறிவுச் சிந்தனை. கட்டுப் பாடுள்ள அறிவுச் சுதந்திரம் அடிமைத்தனமேயாகும். பகுத்தறிவுச் சிந்தனை, விடுதலையுடன் ஆய்வு மேற்கொள்ள—மெய்பொருள் அறிய அதற்கு கடவுள் வாதம் தடையாக நிற்கும் அந்தச் சுயசிந்தனையின் அமைப்புகளாக உள்ள எந்த மதவாதமும், பகுத்தறிவை ஏற்காவிட்டாலும்—அங்கு அவை பெறுகின்ற சுதந்திரம்—புதிய ஆய்வுகளை வலுப்படுத்தும்.

அறம், கடமை: ஆகியவற்றில் ஆன்மீகம் என்ற கடவுள் மதவாதத்தில், தூய்மை, பிறர் நலம் எனக் கூறப்படுவதிலே, வர்ணதர்மம் இருக்கும்போது: சுவாமி விவேகானந்தர் கூறிய,

> ''தூயவராகவும், தன்னல மற்றவராகவும் இருக்கமுயலுங்கள். சமய முழுவதுமே அதுதான்''

என்பதற்குப் பகுத்தறிவுச் சிந்தனை கொள்ளமுடியாது' இந்து மதத்தில் உள்ள முரண்பட்ட சிந்தனைகளை விமர்சித்த

விவேகானந்தர்கூட ஆரம்பத்தில் மனுநீதி கண்ட சுவாமியாகவே விளங்கினார் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

மீண்டும் சுவாமி விவேகானந்தர் கூறுகிறார்.

"இந்தியாவில் உள்ள எல்லா சீர்திருத்தவாதிகளுமே புரோகிதர், ஆட்சிமுறை, மற்றும் இனச்சிதைவு ஆகியவற்றின் பயங்கரங்களும், அனைத்துமே மதத்தையே பொறுப்பாக்கிப் பேசி கடுமையான தவறொன்றினையும் செய்துவிட்டனர். புத்தரிலிருந்து இராஜாராம் மோகன்ராய் வரையிலும், ஒவ்வொருவருமே சாதியை ஒரு மத அமைப்பு எனக் கருதுகின்ற தவற்றைச் செய்து. மதத்தையும் சாதியையும் சேர்த்து இடித்துத் தள்ளமுயன்று அதிலும் தோற்றுப் போயினர்" என்றார்.

ஆன்மீக சிந்தனை —சித்தாந்தத்திலிருந்து, — ஆன்மீகக் கடவுள், ஆன்மாவென்று துவைத வேதாந்தம் ஆகிய பிறகே, அந்த அடிப்படையை வலியுறுத்த மதவாதம். புரோகிதம் அவ் வழிப் பாகுபாடு, இனச்சிதைவு, ஆகிய இவற்றிற்குக் காரணமே மதமாகும். மத அமைப்புகளில் தான் தீண்டாமை, வகுப்புவாதம் சாதிவாரிக் கடைப்பிடிப்புகள் அதற்குச் சம்பிரதாயச் சடங்குகள் நிறைவேற்றப்படுகின்றன. இது புத்தர் முதல் மோகன் ராய் வரை அவர்களின் சீர்த்திருத்தவாதங்கள் இடைப்பட்ட காலங்களில் பல திணிப்புக்களுக்கு, எதிர்ப்பு புகையானாலும் நெருப்புப் பரவியே புகை!—புகையிலிருந்தே நெருப்பாக இருக்கிற தென்பதை விவேகானந்தர் அறியாதவரா?

சமயத்தை பின்பற்றி ஒழுகியவர்களில்: சுதந்திரம் என்பது ஏற்றதாழ்வில் கடைப்பிடிக்கப்படும்போது சிறுபான்மையினர் மீதுபெரும்பான்மையினர் (பிராமண சத்திரிய வைசியர்) எனக் கூறிக்கொள்பவர்கள் கொடுங்கோன்மை செலுத்துவதற்கு வழி வகுக்கும். மதவாத சுதந்திரம், அவற்றில் சமதர்மம் தூய்மை, தன்னலமின்மை ஆகியனவெல்லாம் கண்துடைப்பு, மதச், சார்பின்மை என்கின்ற ஆன்மீக நெறி மட்டுமே மதவெறிக்கும், அதன் விளைவாக ஏற்படும் வகுப்பு வெறிக்கும் மாற்று மருந் தாகும் "என்பர் மறைக்கப்பட்ட மரபுச் செல்வங்கள் என்ற தமது நூலில் அறிஞர் கே எஸ். பாண்டியன் என்பார்.

இந்தியாவில் பாமரமக்கள் (சூத்திரர்கள்] ஆன்மீகக் கருத்துக்கள் என்னவென்பதை ஆழ்ந்து அறிந்து அதிலிருந்து விடுபட்டு வெளியே வரமுடியாமல் முடங்கிய காலம் வரை இந்த நாட்டில் மூடக்கொள்கை, கோட்பாடுகள் நீடித்து

இருந்துகொண்டேதான் இருக்கும் என்பதை நன்கு உணர்ந்த சுவாமி விவேகானந்தர் :

"சாதி என்பது படிகம்போல் ஒரு நிலையான உருவைப் பெற்றுவிட்ட ஒரு சமூக அமைப்பாகவே உள்ளது. தற்போது இந்தியாவின் சூழ்நிலை முழுவதும் அதன்--அந்த முடைநாற்றமே சூழ்ந்ததாக உள்ளது. இதை எவ்வாறு அகற்றமுடியுமென்றால் மக்களுக்கு, 'அவர்கள் இழந்துவிட்ட சமூகத்தனித் தன்மையை மீண்டும் பெற்றுத் தருவதன் மூலமாக மட்டுமே அகற்ற முடியும்'' என்றார்.

சமூகத்தில் சூத்திரர் இழந்துவிட்ட—அவர்களின் சராசரி மனிதத் தன்மையை, சாதிமதவாத அமைப்புகளை வைத்துக் கொண்டு எப்படிக்காப்பாற்ற முடியும் என்பது கூட விவேகானந்தருக்குத் தெரியும்.

"நமது பாமரமக்கள் (சூத்திரர்கள்) உலகியல் விஷயங்களைப் பற்றி எதுவுமே அறியாதவர்களாகக் கிடக்கின்றனர்."

"அவர்களுக்கு வாய்ப்பும் இல்லை; தப்பிக்க வழியுமில்லை. மேலேறவும் வழியில்லை. ஒரு கொடூரமான சமூகத்தால் தங்கள் மீது பொழியப்படும் அடிகள் பற்றி அவர்கள் உணருகின்றனர்."

"அவர்களை மெல்ல உயர்த்துங்கள்! சமத்துவ நிலைக்கு உயர்த்துங்கள்." என்றெல்லாம் வேதனைப்படும் விவேகானந்தர்.

"எல்லா லட்சிய நெறிகளையும் மெதுவாக பாமர மக்களுக்குக் கொண்டுவர வேண்டுமானால் நம் முன்னோர்கள் வகுத்துத் தந்த பாதையை நாம் பின்பற்ற வேண்டும்'' என்றும் கூறுகிறார். பகுத்தறிவுப் பரிணாமங்களைச் சொன்ன சாருவாக்கர், புத்தர், கபிலர் ஆகியோரைச் சொல்கிறாரா? சாதி வர்ண மதவாத மனு, மாந்தாதா, வைசம்பாயனரைச் சொல்கிறாரா?

ஏற்றதாழ்வு என்ற பார்ப்பன மனுவாதியின் மனிதனில் "அடிமை நிலையைச் சீராக்குவதற்கு உள்ள ஒரே வழி உலகின் மிக விழுமிய இந்த மதத்தை நசுக்குவதுதான்'' என்ற விவேகானந்தர், அப்போதே;

"அது மதத்தை அழிப்பதன் மூலமாக அன்று, இந்து மதக் கோட்பாட்டின் சிறந்த போதனைகளைப் பின்பற்றுவதன்

மூலமாகவும், அம்மதத்துடன் இணைவதன் மூலமாகவும் இந்த நிலை (ஏற்றத் தாழ்வு நிலை) நீக்கப்பட வேண்டும்'' என்று கூறி முரண்படுகிறார்.

விவேகானந்தர் கூறும் இந்து மதமென்ற பெயரில் சொல்லப் பட்ட மநுவாதிப் பார்ப்பன தர்ம சாதிவர்ண நாலாஞ் சாதியும் பஞ்சமசாதியும் நாயினும் கீழாய்—அந்த மதத்தின் பெயரால் சாகடிக்கப்பட்ட சூத்திரர்—எப்போது ஏற்றங்கண்டார்? எங்கே வழி கிடைத்தது?

ஏசு, யூதர்களின் ஆச்சார சடங்குகளை எதிர்த்தது போல, சித்தார்த்தரோ; ஏசு, யூதருக்கும் முன்னே 2500-வருடங்களுக்கு முன்னரே—மதவாதிப் பார்ப்பனக் கொடுமைகளால் அழுத்தப் பட்ட அகில இந்திய சூத்திர மக்களின் சுதந்திரம், ஏற்றத்தாழ்வு தீண்டாமை ஒழியப் பாடுபட்டார். மதவாதக் கெடுபிடிகளால் அவல நிலைக்குள்ளான அன்றைய புத்தர் காலத்தில் அவரைச் சூழ்ந்து மொய்த்துக் கொண்டிருந்த அனுதாபத்துக் குரிய சூத்திரத்—திருடர்களையும், ஒட்டாண்டிகளையும், கொள்ளைக் காரர்களையும், அடிமைகளையும், விலை மாதர்களையும், ஜெர்மன் மாக்ஸ்முல்லர் அடையாளங்காட்டுகிறார். புத்தருக்குப் பின் அவர்வழி அசோகர் செய்த பொறுப்புமிக்க சுதந்திரம் அனைவருக்கும் அனைத்தும், சமதர்மம், தீண்டாமை இன்மை, ஆகியவை அவர்களுக்குப் பிறகு தொடரவே இல்லை.

இந்தியாவிற்கு வந்த வெளியுலக மதங்களில் குறிப்பாக இசுலாமியரும், கிருத்துவரும், பிறரும், வகுப்புவாதம், உயர்வு தாழ்வு—தீண்டாமை என்பன போன்ற பாகுபாடுகளைக் கொண்டுவரவில்லை. ஆனால் உள் நோயாகவும், வெளி நோயாகவும் அடுத்து இருந்தே புத்தமதத்தைக் கெடுத்து நாசமாக்கி, பார்ப்பன மேலாதிக்கத்தை மீண்டும் தலை தூக்கச் செய்து நிலை நாட்டியவர்களென சங்கராச்சாரியர், ராமானுசர், நாயன்மார்கள், ஆழ்வார்கள் எனப்பலர் வருகிறார்கள்.

இந்தியாவில் அதன் குடிமகன் என்று சமூகவாரியாகச் சொல்ல வேண்டுமானால் முதலில் தன்னைப் பிராமணன் அல்லது சத்திரியன், வணிகன், சூத்திரன்—பழங்குடி மலைசாதி யினன் என்ற முத்திரை குத்தப்பட்டு அடங்களில் அது உறுதிப் படுத்தப்பட்டிருக்க வேண்டும். புத்த மதத்தின் பரிவு, சமண மதத்தின் அகிம்சை, கிருத்துவத்தின் கருணை, இசுலாத்தின் சமத்துவம் ஆகியவற்றை நன்குணர்ந்த சுவாமி விவேகானந்தர், சைவ போதனைகளில் அடிப்படையாக சாங்கிய யோக ஆன்மீக சித்தாந்த அத்வைதம் கூடிவரப் பெற்றிருக்க; அதன்நடை

முறைப் போதனைத் திணிப்புகளில் மட்டும் இந்து மதம் என்ற பெயரில் பார்ப்பன பகவத்கீதையின் துவைத போதனைகள் வலியுறுத்தப் படுகின்றனவே ஏன்? என்று உணர்ந்து மதத்தின் கொடுமை, சாதியின் கொடுமை, கலப்படத் தத்துவம்... இளைய தலைமுறையின் எதிர்காலம் என அனைத்திற்கும் அனைத்திலும் பார்ப்பனர் திருந்த வேண்டும் என்பதை—தமது முதுமைக் காலத்தில் இறுதி நாட்களில் தெளிவு பெற்றவராகக் கீழ்க் கண்டவாறு கூறினார்:

> ''உலகில் உள்ள எந்த மதமும் இந்து மதத்தைப் போல் கொடுமையான முறையில் வறியவர்களையும், தாழ்ந்தவர்களையும், காலால் மிதித்து நசுக்குவ தில்லை.'' என்றார்.

''சாதி என்கிற கருத்துத்தான் மிகப் பெரிய பிரிவினைக் கூறாகவும் மாயையின் அடிவேராகவும் உள்ளது. எல்லாச் சாதி களுமே— அது பிறப்புக் கோட்பாட்டின் பேரில் ஆயினும் சரி ஓர் அடிமைத் தளைதான் என்கின்ற உறுதியான எண்ணம் நாளுக்கு நாள் என் மனத்தில் ஏறிவருகிறது.'' என்றார்.

''புதிதாகப் பிறக்கும் குழந்தைகள்— தாங்கள் பிறக்கும் போதே— தங்கள் தந்தையரின் உடலமைப்புப் பிணிகளையும் சேர்த்துப் பெறுகின்றன. இவ்வாறு மோசமான இரத்தத்துடன் பிறப்பதால் நுண்வியாதிக் கிருமிகள், அக்குழந்தையின் உடலில் பாய்வதற்கு எப்போதுமே ஆயத்தமாகவுள்ளன. ஒரு புதிய மற்றும் வேறுபட்ட வகை ரத்தத்தை நாம் செலுத்த முடியும். அப்போதுதான் நிகழ்காலப் பிணிகள் மற்றும் அவற்றின் விளைவான பிற தீமைகளில் பலவற்றின் கோரப் பிடிகளிலிருந்து அவர்களைக் காப்பாற்றமுடியும்.'' என்றார்

''இந்தியாவிற்கு வரவிழைந்த ஒவ்வொருவரின் கால்களின் கீழும் ஓராயிரம் ஆண்டு காலம் நாம் மிதிபட்டு நசுங்கி வந்திருக் கின்றோம். அதன் மூலமாகத்தான் நாம் தாழ்ந்தவர்களாக ஆகி விட்டிருக்கிறோம்.'' என்றார்.

''கடித்த பாம்பானது நோயாளியிடமிருந்து தன் நஞ்சைத் தானே உறிஞ்சி எடுத்துவிட்டால்,— அம்மனிதன் பிழைத்தே தீருவான் என்று வங்கத்தில் பழைய நம்பிக்கையொன்று உள்ளது. அங்ஙனமாயின் பிராமணன் தன் நஞ்சினைத் தானே உறிஞ்சி எடுத்துத் தீர வேண்டும்'' என்று ஆணையிட்டே— அழுத்தம், திருத்தமாகக் கூறிவிட்டார். ஆனாலும் ''கடித்த பாம்பே விஷத்தை உறிஞ்சி எடுத்தால் அந்தப் பாம்பே இறந்து

விடும்'' என்று அதர்வண வேதம் (தசம காண்டம் 4—26) கூறிய உண்மை விவேகானந்தர் அறியாததா என்ன? அதுவும் அவருக்குக் தெரியும்.

''கடவுள் இருந்தால் அவரை நாம் பார்க்க வேண்டும். ஆத்மா உண்டு என்றால் அதை உணர வேண்டும். இல்லா விட்டால் இவற்றை நம்பாமல் இருப்பதே மேல்! வேடதாரியாய் இருப்பதைவிட நாத்திகனாக இருப்பதே மேல்''— என்று முழங்கிய சுவாமி விவேகானந்தர் அவர் வாழ்ந்த காலத்துப் பார்ப்பனிய வருணசாதி சமாசங்களுக்கு ஒத்துப் போகாமல் சில ஞாயமான—அதாவது அமுத்தப்பட்ட மக்களின் அறிவு, வாழ்வுச் சுதந்திரங்களை வலியுருத்தும் கருத்துக்களை விமர்சித்தார். அந்த வரிசையில் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் வெளிவந்த தந்தை பெரியாரின் ''இராமயணப் பாத்திரங்கள்'' என்ற நூலுக்கு தடை விதிக்க முடியாது எனத் (UP Govtappeal No : 291—of—1971, D/16/9. 76) தீர்ப்பளித்த பகுத்தறிவு மேதை, நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் கூடஎழுத்துச் சுதந்திரம், உண்மை விமர்சனம், என்பவை பற்றிய கருத்தினை தமது தீர்ப்பில் தெளிவாக் கூறுகின்றார். இதோ:— ''கேரளப் பார்ப்பனர்களைப் பற்றி (விவேகானந்தர்.) அவ்வளவு கடுமை யாகப் பேசி இருக்கிறார் அப்படிப் பார்த்தால் விவேகானந்தர் நூலைக் கூடத்தடை செய்ய வேண்டியிருக்கும்.'' என்று சுட்டிக் காட்டினார்.

இப்படியொரு நீதிபதியுமிருக்கிறார்! அப்படியொரு நீதிபதியு மிருக்கிறார். எப்படி? பிறவியின் அடிப்படையே வர்ண சாதி என்ற ஆர்ய தர்ம வேத, மனு, பராசரர் வழியில்; வைத்தால் குடுமி செறைத்தால் மொட்டை எனும் கீதோபதேச ''சதுர் வர்ணயம் மாய சிருஷ்டம் குணகர்ம விபாகசா'' என்றவாறு குணங்களையும், செயல்பாடுகளையும் கொண்டுதான், வர்ணங்கள் தீர்மானிக்கப்படும் என்பது பிறப்புக்குத் தொடர்புடையதே என்ற காஞ்சி பரமாச்சாரியாருக்கு ஒப்ப; மதவாரிக் கொள்கை அடிப்படையில், சூத்திர ஏகலைவனின் கட்டை விரலை வெட்டி வாங்கிய துரோணாச்சாரியார் வழியில், வெள்ளையர் ஆட்சிக் காலத்தில் பெடரல் கோர்ட்டுத் தீர்ப்பா ளராக இருந்த ஓர் எஸ். வரதாச்சாரி என்பவர் ''சாதி என்பது மத சம்பந்த முடையது. மதநூல்கள் ஒருவன் முற்பிறப்பில் செய்த வினைகளின் பயனாகத்தான் இப்பிறவியில் ஒரு குறிப் பிட்ட சாதியில் பிறக்கிறான் என்கின்றன. எனவே ஒருவன் இந்த ஜென்மத்தில் தன் சாதி அந்தஸ்த்தை உயர்த்திக் கொள்ள

முடியாது!" என இப்படியும் ஒரு வழக்கில் தீர்ப்பளித்திருக்கிறார். நீதிபதிகளில் பழையவரதாச்சாரிக்கும், புதிய கிருஷ்ணய்யருக்கும் இடைவெளிப்பட்ட காலவரையும் மடமையும், திருத்தங்களும் எவ்வாறு விமர்சிக்கப்பட்டிருக்கின்றன என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்! இப்படிப்பட்ட ஆரிய மதவாத இனவெறி முன்னுரிமை மேலாதிக்கச் சூட்சி ஆணவங்கள் அனைத்தும்தான் தேவஸ்தான பொருப்பு வகித்திருந்த தந்தை பெரியாரை "புரட்சி" இதழாசிரியராக்கியது.

திருப்பூரில் தாம் முன் மொழிந்த கோயில் புகும் உரிமைத் தீர்மானத்திற்கு எதிர்ப்பாகப் பார்ப்பனர்கள் தீர்மானம் முன் வைத்தமை,

சேரன்மா தேவியில் ஆசிரமத்தில் பச்சைப் பிள்ளை களிடையே சாதிப்பாகுபாடு கடைப்பிடிக்கப் பட்டமை,

வைக்கம் சத்தியாக்கிரகத்தின் போது காங்கிரசுப் பார்ப்பனர் கடைப் பிடித்த ஒத்துழையாமை,

நெல்லையில் நடந்த தீண்டமை யொழிப்பு மகாநாட்டின் போது விருதுபட்டிக் கோவிந்தசாமி நாடார் பார்ப்பனரின் தனிப் பந்தியில் அமர விடாமல் துரத்தப்பட்டமை,

ஏன்? தாமே ஒரு சினிவாசய்யங்கார் என்பவருடன் உணவருந்திய பார்ப்பனரொருவரின் வீட்டில் காலையிலும் பகலிலும் தாம் சாப்பிடப் பயன் படுத்திய இலைகள் இரவு வரை நீக்கப் பெறாமல் அப்படியே கிடந்ததைப் பார்த்தமை போன்ற பல நிகழ்வுகளால் சிந்தனைச் சீற்றத்தில் பரந்த பட்டறிவு பெற்ற தந்தை பெரியார் எதையும் தாங்கும் இதயமாக என்ன கூறினார்?

"மக்களை அறிவாளிகளாக்கும் துறையில், மூட நம்பிக்கை களை ஒழிக்கும் துறையில் யார்பாடுபட்டாலும் அவர்கள் பொது மக்களால் வெறுக்கப்படவும் நாத்திகர்கள் என்ற கூறப்படவும் தொல்லைகளுக்கு ஆளாக்கப்படவும், கொல்லப்படவுமான தன்மை உலகிலேயே இயற்கையாக இருந்து வருகிறபோது அந் நிலை நம் நாட்டில் இருக்கும் யோக்கியதையில் ஏற்படாமல் இருக்க முடியுமா?" என்றார்.

தந்தை பெரியாரின் நடுநிலைக் கருத்திற்கு ஆதரவாக அடிப்படை முரண்களை வலியுறுத்துபவராக, மீண்டும் நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் அவர்களும்; (16-9-76) தமது தீர்ப்பில் "காட்டுமிராண்டி சமூகத்தில் குற்றமாகக் கருதப்பட்டவைகளை

எல்லாம், முன்னேறிய சமூகத்தினர் அறிந்து நகைப்பார்கள். ஒரு மதத்துக்கோ, ஒரு பிரிவினருக்கோ அல்லது ஒரு நாட்டு மக்களுக்கோ புனிதமானவைகளாகக் கருதப்படுபவை; வேறு சமூகத்துக்கு, மதத்துக்கு புனித மற்றவையாக இருக்கும்'' என்று குறிப்பிடுகிறார்.

மொகலாயர், ஆங்கிலேயர் ஆட்சியில் இந்தியாவில் சமூகநீதி என்ற பெயரில்—இந்து தர்மம் என்ற பெயரில் இந்து அல்லாத பிறமதம் என, அதில் மாறியவர்கள் மீதும், எதிர்ப்பு உண்டாக்கியவர்கள் மீதும் தர்மம், இந்துச் சட்டம் என்ற பெயரில் அறக் காவல் அடக்கு முறை, ஆக்கிரமிப்பு எனத் தொடர்ந்த வழக்குகள் எல்லாமே லண்டன் மாநகரம் போனாலும் மனிதவள மேம்பாட்டுத் தென்னிந்திய நலஉரிமைச் சங்கங்களுக்கே வெற்றி கிடைத்தன. நாலாஞ்சாதி, பஞ்சமசாதி, மலை வாழ்மக்களை. அவர்களை நிரந்தர நிர்வாண அடிமைகளாக வைத்த இந்து தர்மம் என்ற பெயரில் வேட்டையாடிய பார்ப்பன வேதங்கள், மநுதர்மங்கள், புராண, இதிகாசங்கள் அதன் கதை, நாடகம், பாடல்கள் என அனைத்துமே, ஏன், சூத்திரத் திராவிடரை கொடுமைப் படுத்திய அந்த ஆரிய பிராமணர்களின் கொள்ளை, கொலை, கற்பழிப்பு, குடி, சூது, வஞ்சம், கழுத்தறுப்பு—என ஒரு சார்புக் குற்றங்களுடையவை என்பது உலக மறிந்த உண்மை.

அந்தப் பார்ப்பன ஆசான்களின் நூல்கள் மீது யார் வழக்குத் தொடுப்பது? அவர்களுக்கு மரண தண்டனை என்றால் யார் அதை வாங்கிக் கொடுப்பது?

> ''இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
> நன்னயம் செய்து விடல்''

என்ற குறளுக்கு ஒப்பாக கருணை வடிவமான தந்தை பெரியார் கூறுகின்றார்:

''ஆரியன் எழுதும் பத்திரிக்கை பிரசுரிக்கும் புத்தகம், பாடும் பாட்டு, ஆடும் நாடகம் எழுதும் நாடகம் எப்படி இருக்கும்? கடவுளையும், காதலையும் புரிந்து கொள்ளாதவர்களே கொலை செய்கிறார்கள் இவைகளுக்கெல்லாம் காரணம்? இவர்கள் படித்த படிப்பு அப்படிப் பட்டது என்றுதான் நான் சொல்வேனே யொழிய இவர்கள் மேல் குற்றம் சொல்ல வில்லை!'' என்றார்.

மதச்சார்பின்மையை வலியுறுத்தும் வகையில் அமெரிக்காவின் பள்ளிகளில் பைபிள் படிப்பதையும், கடவுள் வணக்கம் கூறு

வதையும் தவிர்க்க வழக்காடி அனுமதி பெற்று இன்றும் அது அமுல் நடத்தப் பட்டுவருவதற்குப் பெரும்பாடுபட்ட நாத்திகப் புரட்சியாளர் திரு மாடலின் முர்ரே ஓ வேறர் வழியினர் மீது அவர்கள் கோரிக்கையை எதிர்த்து யார்? வழக்குத் தொடர்ந்து வெற்றி பெற முயன்றது யார்? முடிந்ததா? இந்தக் கேள்விக்கு யாராலும் "வெற்றிபெற முடியாது"! என்பதை எடுத்துக்காட்டு பவராக நிதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் அவர்கள் வரலாற்றுச் சீர்த்திருத்தவாதிகளை முன் நிறுத்தித் தீர்ப்பு வழங்குகிறார்! இதோ:

"கலிலியோ, டார்வின், ருஸ்கின், காரல் மார்க்கஸ் H. G. வெல்ஸ், பெர்னாட்ஷா, பெர்ட்ரண்ட்ரசல் ஆகியோரின் (மறு மலர்ச்சி) சிந்தனைகளுக்கு எதிர்ப்புகள் வந்த காலம் இருந்தது. அதற்காக அவர்களது நூல்களை இன்று எந்த அரசாங்கமும் பறி முதல் செய்யும் கீழான நிலைக்கு இறங்கி விட முடியாது. ஆயிரம் பூக்கள் மலரட்டும்! நூற்றுக்கணக்கான சிந்தனை கள் தோன்றட்டும் என்ற மா—சே—துங் கருத்தையே சுட்டிக் காட்ட விரும்புகின்றேன்." என்றார்.

"மனித வளர்ச்சிக்கான விதியே (சட்டம்) சுதந்திர சிந்தனை யும், கருத்துக்களையும் சுதத்திரமாக வெளியிடுவதுதான். ஆனால் ஒரு சமூகம் தன்னைக் காத்துக் கொண்டு வாழ்வதற்கு பொது மக்கள் நலம்எனும் கண்ணோட்டத்தில் சில அர்த்தமுள்ள கட்டுப்பாடுகளை வகுத்துக் கொண்டிருக்கிறது. இந்தியா என்பதுபல் வேறு கலாச்சாரங்களைக் கொண்டது. பல மதத்த வர்கள், மத எதிர்ப்பாளர்கள், பொருள் முதல்வாதிகள் போன்ற பல பிரிவினரும் வாழ்கிறார்கள். ஒருவர் மற்றொருவர் விமர்சனத்தை பொறுமையாகச் சகித்துக் கொண்டு வாழ்வது என்பது இந்த சமூகத்தின் வாழ்க்கைக்குத் தேவையான ஒன்றாகும்." என்றார்

"இத்தகைய நூல்களை அரசாங்கம் பறிமுதல் செய்வதற்கு முன்பு இந்த சமூக யதார்த்தத்தை உணர்ந்திருக்க வேண்டும்!"

"சுதந்திரமான கருத்துரையை தடுத்து விட்டால், பிறகு தலை மறைவுப் போராட்டத்திற்கு அவர்களைத் தள்ளி விடும். ஓர் அரசாங்கம் எதிர்ப்பாளர்களின் விமர்சனங்களிலிருந்து ஏராளம் கற்றுக் கொள்ள வேண்டும். அதற்குப் பிறகுதான் ஆதரவாளர்களின் கருத்தைக் கேட்க வேண்டும். எதிர்ப்புக் கருத்துக்களையே அனுமதிக்க மறுத்தால், அனுமதிக்காதவர்கள் தங்களையே அழித்துக் கொள்ளத் தயாராகிவிட்டார்கள் என்பதே பொருள்." என்றார்.

இலக்கியவாதியும், வரலாற்று மக்கள் ஆய்வாளனும் சமூகத்தின் மீது சுமத்தப்படும் கட்டுப்பாடுகளை எடுத்தியம்பத் தயங்குவதில்லை—அரசியல் வாதி சூழ் நிலைக்கேற்றவாறு ''எலும்பில்லா நாக்கு இருபுறமும் பேசும்'' என்ற பழமொழிக் கொப்ப; ஆய்வாளர் பார்வைக்குத் தன்னை நல்லவனாகவும் கெட்டவனாகவும் ஒழுங்கு படுத்திக் கொள்கிறான். அவன் அதிகாரத் தலைவனாக வந்தபோது தன் மீதுள்ள குறையை பிறர் விமர்சிக்கும் போது தனது ஆளும் செல்வாக்கிற்கு பங்கம் வந்து விடுவதாகப் பிறர் மீது பழிக் குற்றம், சுமத்தும் வழக்குகளால் தன்னைப் பறைசாற்றிக் கொள்கிறான். சிந்திக்கும் மக்கள் அவனது சரிவைத்தான் எதிர்பார்க்கின்றனர். பதவியைக் கட்டிக் காக்கும் பக்கவலிமை முரணான முட்டுக் கொடுப்புகளால் நிற்பதில்லை என்பதை அறியவும்.

இன்றையத் தலைவர்கள் என்ற பெயர்களில், அனைத்து இந்தியாவிலும் அரசியல், மொழி, வரலாறு, மருத்துவம், விஞ்ஞானம் என்ற துறையில் வருபவர்கள், பண்பாட்டுப் படைடுயடுப்பு என்ற ஊடுருவலில் பிழைக்க வழி தேடி வந்த ஆதிய சாதிவருண அடிமைத்தனத்தில் வீங்கி தாடை தொங்கியவர்கள் ஆகின்றனர். டாக்டர் அம்பேத்கார் சொல்லும் சமுதாயப் புரட்சி இந்தியாவில் ஏன் ஏற்பட வில்லை என்றால்—மக்கள் அடிமைப்பட்ட கொள்கையுடையவர்கள் ஆகையால் அவர்கள் விழிப்படைய வழியே இல்லை—வலிமையும் இல்லை என்று கொள்ள வேண்டும்.

சதுர்வர்ணியத்தைப் போல மாணக் கேடானது வேறு இல்லவே இல்லை. அது மக்களை முயற்சியற்றவர்களாக்கி விட்டது.'' என்ற அம்பேத்காரின் கருத்து மிகவும் பெருத்தமுடையதே.



# 17

# மொழி என்ற பெயரில் முனைந்த மதவாதம்

நிலவாரி மக்கள் உறவு, பரிமாற்ற நிகழ்வுகளில் மொழிச் சொற்கள் குறியீடு உணர்த்துகின்றன. அவற்றில் பெரும் பான்மையினரால்—அல்லது—சிறுபான்மையினரால் பேசப்படும் தொடர்பு மொழிகளில் சுமையாகவும், திணிப்பாகவும், முன்னுரிமை பெற்ற முரண்பாடுகள் ஆளுகைக்கு வந்துவிடு கின்றன.

அடிப்படையான தமிழ் மொழி—தென் மாநில மொழியி லிருந்து மக்கள் பிரிந்து வாழும் சூழலுக் கேற்று, தெலுங்கு, கன்னடம், மலையாளம் எனவாகி;—அவற்றில் தமிழின் பெரும் பான்மைச் சொற்கள் இருந்தும், இன்றைய மதச் சொற்கலப் படத்தில் அவையும் கூர் மழுங்கி இருக்கின்றன. மேலே சொல்லி வந்த சமய ஆரிய சமற்கிருதமய புராண இதிகாசக் கருத்தின் எடுபிடிச் சொற்கள் மலையாளத்திலும், கன்னடத்திலும், தெலுங்கிலும் மிகையாகப் புகுத்தப் பட்டிருக்கின்றன. தமிழ்—சமஸ்கிருதம் என்ற பெயரில், மணிப் பிரவாள மலையாளம் தன்க்கு அடிப்படை என இன்றைய வழக்கில் கிரந்த சமஸ்கிருத மென்ற பெயரில், ஏதோ தலைப்புவழி விளக்கம் கூறுவதுபோல—தெலுங்கு, கன்னடமென இரு மொழியும் கூட சமஸ்கிருத மயத்தில் பிற்பட்ட கிரந்த இலக்கணமே சொல்கிறது.

ஆனால், அடிப்படையான குறியீட்டுத் தமிழ்த்தாய் வழிச் சொல்லான தமிழ், அது அல்லாத பிற அனைத்திந்திய மொழி களிலும் நிரம்பி இருக்கின்றன. ஆன்மீக மத வாதச் சொற்கள் மிகையாக, குறிப்பாகத் தெலுங்கு, கன்னட, மலையாளம் ஆகியவற்றில், அதாவது பொருள்படுத்துவதற்குப் புலனாகா

வற்றிற்கு; சூழ்நிலை, இடத்திற்குத் தக்கவாறு ஒரு பொருள் பல விளக்கமென கண்துடைப்புச் சொல்லப்பட்டிருக்கிறது.

தமிழில்; நிற்கவை—படுக்கவை என்ற எதிரிடைச் சொல்—பொருள் உணர்த்துதல் போல; ஏவல் வினைப் பொருளாக, குந்தவை,—குத்தவை என்ற சொல் 'நகர' ஒற்று 'த' கர ஒற்று மருவி வந்தன போல; அதே பொருள்—தெலுங்குச் சொல்லாகக் 'கூர்ச்சு—கன்னடம் கூத்துக் கொள்,—மலையாளம் ''இரு'' என்பதிலிருந்து 'இரிக்கு' என்றும் வந்ததறியவும், பார்ப்பன மதவளர்ச்சிக்கு என்று சமஸ்கிருத மயமாக்கப்பட்ட திணிப்பினை தெலுங்கு கன்னட, மலையாள, உருது, இந்தி, வங்காளம் எனப் பல மொழிப் பார்ப்பனர்கள் பரவலாக அனைத்திலும் ஆக்கிரமிப்புச் செய்ய அந்த முயற்சி பெரும் உதவியாக இருந்தது. நெருப்பைத் திண்ணும் கறையான்களாக நினைத்த அவர்கள் தமிழ் அல்லாத பிற மொழிகளில், மொழி அடிப்படையிலும் தங்களை முன் உரிமைப் படுத்திக் கொணடனர்.

இருந்தவற்றை மொழி மாற்றிக் கொள்வது, அழிப்பது என்பதில் ஆரியப் பார்ப்பனர்—தற்காப்பின் பொருட்டு, வேதம் பாடியது போல; சூத்திரர் அல்லாதார், பிற்பட்ட கால வரையில் கலப்படத் தலைப்பான துக்கடா சமஸ்கிருத மயத்தால் அனைத்து மொழிகளும் மதச் சொல், அதன் கருத்து, என தெய்வீக ஏற்பாக நம்ப வைத்து அழுத்தப்பட்டவர்கள் நெஞ்சில், பசுமரத்தாணியாகவே பதிந்திருக்கிறது. இந்த வகையிலேதான் இன்றையப் பார்ப்பனர் தங்களின் பூர்வீகச் சொத்து எனச் சடங்கு சம்பிரதாயமென்ற அடிப்படையில் கிடைக்கும் வாய்ப்புகளில் பதட்டப் படுத்திச் சுலோகம் என்ற பெயரில் கலப்படச் சொல் கொண்டு நுழைகின்றனர்.

பிற்பட்ட கால தெலுங்கு, கன்னடம், மலையாளம், இந்தி ஆகிய நான்கு மொழிக்கும் ஒத்துப் பொருள்புரிந்தனவாக சமஸ்கிருதமய கலப்படத் தலைப்புப் பொருட் சொல்லான—மந்திர்—கோயில் நர்த்தனா நாட்டியம்.-- கலாச் சேத்திரா—கலைக் கோயில், சங்கீத் —இசை எனப் பல வாரித்தலைப்புகள் பெருகி விட்டன.

இரண்டாயிர வருட தஞ்சை மாநிலக் கலப்படத்தில் பிற மாநிலக்காரர்கள் குடியேறிய வழியினரில் பரவிய சமஸ்கிருத, பார்ப்பன மதவாத ஆக்ரமிப்பு, தெலுங்கு, கன்னடம், மலையாம், உருது, இந்தி, மராட்டி, குசராத்தி வங்காளி, ஒரியா என அனைத்திந்திய மொழிகளையும் சிதைத்து, அடிப்படையாகவே தனது முத்திரையைக் குத்திக்கொண்டு விட்டது.

தமிழ்மொழியில் பரவலாக அந்தத் தாக்கம், மதப்புராணக் கதை, பாடல்களில் பிற்பட்ட சமண, பௌத்த, நாயன்மார்கள், ஆழ்வார்களால் கொள்ளப்பட்டாலும் அடிப்படையான தமிழ்—இலக்கியங்களில் அதன் கருத்துப் புகுந்தாலும்,—இலக்கணத் திலும்: இசையிலும், அவைகள் பெரும்பான்மை பெற முடிய வில்லை.

ஏக இந்தியாவில்—நிலவாரிக்கிளை, மொழிவாரிக் கிளை, இனவாரிக்கிளை என எதுவானாலும், கலப்பட மதவாதங்களில் சிவனிய, மானிய, சமண, பௌத்தம்' என இடையூறாகப் புகுந்து நிறங்காட்டிக் கொண்டிருக்கின்றன. ஆனாலும் வட மாநிலம்—தென்மாநிலம் என்ற வகை, மொழிகளில் சமஸ்கிருத மயத்தால் இன்றைய வடமாநில வங்காளம், பீகார், ஒரிசா, மராத்தி, குசராத்தி. ராசஸ்தான், பஞ்சாபி, சிந்தி, முதலான வற்றில் இந்திச் கலப்படச் சொற்களும், ஏன் இந்திக்கும், உருது வுக்கும் எழுத்தினாலன்றி வேறுபாடில்லை. எழுத்தும் பெரும் பாலும் தழுவி இருப்பதுபோல; ஆரம்பத்தில் தென்மாநிலத் தமிழும் அதன் இனமுமான மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளு ஆகியவற்றில் அந்த இந்திமொழியின் ஒலியோ, எழுத்தோ எதுவுமே இல்லை.

அத்துடன் தமிழ் அல்லாது புகுந்த பிறமொழி மதவாத. பொருட் பெயர் தலைப்புகள் அடிப்படைத் தமிழில் இல்லை. தந்தை பெரியாரும் இந்தக் கருத்து விளக்கம் பற்றி (1966) இல்:

> ''நம் நாட்டில் மதசம்பந்தமாக நடமாடும் சொற் களுக்குத் தமிழில் வார்த்தைகள் காண்பது மிக்க கஷ்ட மாகவே இருக்கிறது. மதத்திற்கோ, கடவுளுக்கோ, இவற்றின் ஆதாரங்களுக்கோ சொல்லப்படும் சொற் களுக்கும், செய்யப்படும் காரியங்களுக்கும், அவற்றையே குறிப்பதான சொற்களைக் காண்பதும் மிகச் சிரமமான காரியமாகத்தான் இருக்கிறது'' எனத் தெளிவு படக் கூறினார்.

ஆனாலும் 2000—வருடங்களுக்கும் முன்னரே. இலக்கிய இலக்கணங்களுடன் சீர்திருத்தமாக அமைக்கப் பெற்று, சொல், எழுத்து, பொருள், யாப்பு அலங்காரம், என வகை, கிளைச் சிறப்புப் பெற்ற தமிழ் மொழியின் தொன்மையை அவ்வளவு எளிதாக மறைக்க முடியாது என்பதறிந்தும், மிதவாதத் தலைவர்களான (1915) பீரோஸ் மேத்தா, கோபால கிருஷ்ண கோகலே மறைவுக்குப் பிறகு தேசிய மிதவாத காங்கிரசை தீவிர காங்கிரஸ் ஆக்கினர்.

அவ்வழி தீவிர மதவாதக் காங்கிரஸ் தலைவரான பால கங்காதர திலகரும், அவர் காலத்திலேயே ஆங்கிலத்தை ஒழித்து விட்டு எழுத்துக்களே இல்லாதிருந்த இந்தி மொழிக்கு, கி. பி. 1890க்குப் பிறகும் பேச்சு வழக்கில் இல்லாத சமஸ்கிருத மொழி யான தேவநாகரி எழுத்துக்களை வழங்கி, அதை இந்தியாவின்— மத்திய மாநில அரசுகளின் ஆட்சி மொழியாகக் கொண்டு வருவதையே தனது குறிக்கோளாகக் கொண்டார்.

இந்திமொழியை ஏக இந்தியாவிலும் திணிக்கும் பொருட்டு தீவிரவாதமாகப் பரவச் செய்யும் முயற்சியில் காந்தியாரை திலகர் பயன்படுத்தினார். கோபால கிருஷ்ண கோகலேயை அரசியல் ஆசானாகக் கொண்டகாந்தியார், திலகருக்குக் கட்டுப் பட்டு இந்திமொழியை இந்தியாவின் பொது மொழியாகவும், இணைப்பு மொழியாகவும் மத்திய, மாநில அரசுகளின் நிர்வாக மொழியாகவும், கொண்டுவரப் பெரும்பாடுபட்டார்.

"கல்வியறிவுடையார் இந்தியர் யாவரும் பொதுவாகக் கொள்ளத் தக்கது இந்தி பாசையே என்பது ஆட்சேபிக்கக் கூடியதன்று." என்றார்

"மதம் சமுதாயம் மற்றும் அரசியல் பரிமாற்றங்களுக்கும் இந்தி மொழி எளிதாக்கப்பட வேண்டும்" என்றும் கூறினார் காந்தி (1917)

ஆரம்ப காலத்தில் இந்தியாவின் விடுதலைக்குக் கொடி பிடித்த தலைவர்கள் அனைவருமே ஆரிய; சாதி, சமயம், கோயில் சம்பிரதாயம், சடங்குகளை அப்படியே வைத்து—அது ஆராதிக்கப்பட்டு வந்த கலப்பட மொழியிலேயே அவை அனைத் திந்திய மக்களை ஒன்று படுத்த—வடமாநில முன்னுரிமை ஆக்ரமிப்புகள்,—அவற்றை தர்மம் என மக்கள் கடைப்பிடிக்க வலியுறுத்தப்பட்டனர். சுமத்தப்படுவதை ஏற்காத தென்மாநில மக்கள் திராவிட மொழியாகிய தமிழும்,—ஆரிய கலப்பட மொழியாகிய இந்தியும் இந்தியாவில் பேச்சு வழக்கில் இருந் தாலும்,—தமிழும், இந்தியும் எவ்வாறானாலும் வேறுபட்ட வையே என அன்றே ஒப்புக் கொள்ள மறுத்துவிட்டனர்.

இதை முதன்முதலில் நீதிக்கட்சியின் (ஜஸ்டிஸ்) சார்பாக 1919 ஆகஸ்டு 19—இல் லண்டன் பாராளுமன்றக் குழுவின் முன் சர். கே. வி. ரெட்டி நாயுடு முழக்கமிட்டார். திராவிட மொழி களான மலையாளம், தெலுங்கு கன்னடம் துளுவம், ஆகிய வற்றில் புகுந்த இந்தியின் தாய்மொழியான கலப்பட சமஸ்கிருத மென்ற தமிழின் வல்லொற்றுகள்; தமிழ் உச்சரிப்பில் 'ச'வுக்கு

'ஷா' என்றும், 'க'வுக்கு 'க்கா' என அழுத்த ஒலி--அசட்டு ஒலி களில் கலப்படச் சொற்கள்—மேலே சொல்லப்பட்ட திராவிட இனமொழிகளில் வழங்கினாலும் 'இந்தி' என்ற பெயரில் அதன் எழுத்தும்—உச்சரிப்பும் இன்னும் தமிழைச் சிதைக்க முடிய வில்லை.

தெலுங்கு, மலையாளம், கன்னடமொழியினர் சமஸ்கிருத வல்லொற்றுப் புணர்ந்த சொற்கூட்டணியால் தமிழைச் சுலப மாக,—அதாவது பேச்சு வழக்கிற்கு—தொழிற்துறைக்கு அவசிய மாகக் கற்றுக்கொண்டாலும். ஆழமான இலக்கிய இலக்கண அடிப்படைத் தென்புலத் தமிழர்கள், பிறமொழித் தாக்கத்தால் கலப்பட மொழியே பேசினாலும்,—தமிழின் தனித்தன்மையை சிதைக்கமுடியாது.

இன்றைய சூழலிலும் கன்னடத்தில் அம்மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர் 65 சதவிகிதம், கேரளத்தில் அம் மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர் 95—சதவிகிதம் 6—கோடிமக்கள் கொண்ட தமிழகத்தில் தெலுங்கு, கன்னட, மலையாள--மற்ற பிற மொழியினர் இருந்தாலும் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர் 85—சதவிகிதமிருக்கின்றனர். ஆனாலும் இன்றுவரை சிறுபான்மையனர் தந்திரத் தன்மை ஆதிக்கத்தில் தமிழ்மொழியின் சிறப்பும், வளர்ச்சியும் அது ஆட்சி மொழியாக்கப் படாத இரகசிய எதிர்ப்புக்களில் நாம் உரிமை கொள்ளப்படாதது ஏழ்மையே.



# 18

# தலைவர் என்ற பெயரில் சாதிவர்ணப் புரோகிதர்கள்

வடலூர் இராமலிங்க அடிகளார் கூறியவாறு; இங்கே அடிகளார் என்றதும் ஞாபகத்திற்கு வரும் ஒரு திணிப்பினை அறிந்து கொள்ள வேண்டும்.

> திருநாவுக்கரசர் சூத்திரர்—திருஞான சம்பந்தர் பார்ப்பனர். இவர் நாவுக்கென்ன அரசர்? அப்படி ஒரு புலமையா? அது தன்னைத் தாழ்மைப்படுத்துவதாகும் என்று—அந்த சம்பந்தர் திருநாவுக்கரசரை 'அப்பரே' என்று அழைத்து—நாவுக்கரசர் என்ற பெயரையே மறைத்ததல்லாமல்; வயது முதிர்ந்த நாவுக்கரசரை தனது பல்லக்கை சுமக்க வைத்தவர் சம்பந்தர். சூத்திரக் காவிகளுக்கு அடிகள் என்றும்; பார்ப்பனத் தண்டு களுக்கு சுவாமிகள் என்றும், இதிலும் அவர்கள் முன்னுரிமை பெற்றுக் கொண்டனர்.

வடலூர் இராமலிங்க அடிகளார் கூறியவாறு 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு' என்ற வகையில் கலைஞர் அவையிலும், புரட்சித் தலைவர் அவையிலும் அவ்வப் போது; ஐயா ம. பொ. சிவஞானக் கிராமணியாரையும், வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்ற காமராசரையும் வர்ணாசிரம சத்திரிய குல திலகங்களே என்று வாழ்த்தி என்றும் சமூக நீதியில் தன்னை முன்னுரிமைப் படுத்திக் கொண்ட தவப்புதல்வர் காந்தியாரின் சமபந்தி மகாகனம் இராசகோபாலாச்சாரியார் அந்த கரம் சந்திரமோகன்தாஸ் காந்தியவர்களுக்கு ம. பொ. சி யை அறிமுகப்படுத்தும் போது எப்படிச் சொன்னார் தெரியுமா?

''இவர், 'கள்' இறக்கும் இனத்தைச் சேர்ந்தவர்'' என்று தான் நிறப்படுத்திக் கூறினார். புரிகிறதா உள்ளொன்று வைத்துப் புறம் பேசுபவர்கள் யார் என்று.

இன்றைய மத்திய அரசு (1994) ஒப்புதலுடன் தமிழக மாநில அரசு செயல்படுத்த உரிமை கொண்ட; அன்று பார்ப்பனீயத்தால் —சாதி வர்ணத்தில் பிற்படுத்தப்பட்ட—பின்தங்கிய மக்களுக்கு வேலை வாய்ப்பிற்கு ஒதுக்கப்பட்ட அறுபத்தொன்பது சதவிகித, பகுதி விகுதி உரிமைகளை (அதுவும் 50—சதவிகிதமே)—உழைப் பின்றி உண்டு கொழுத்தே உறங்கியவர்கள் விழித்துக் கொண்ட வர்களாக, நேரடியாகவே பார்ப்பனர், அவர்கள் அல்லாதார் களை இன்று கொச்சைப் படுத்துகின்றனர். ஒற்றுமை என்ற பெயரில்; சமூக நீதி அறுபத்தொன்பது சதவிகிதம் வந்திருப் பதைக்கண்டு (உயர்நீதி மன்றம் அனுமதிக்கவில்லை) இந்து தர்மம் செத்து விட்டதாகப் புலம்புகின்றனர். இந்து தர்மமே பார்ப்பனர் முன்னுரிமைக்காகவே எழுதப்பட்ட தென்பதை புராண நூல் கதைகளும், கோயில் குளங்களும், மடங்களும், வேதம், கீதை என்பனவெல்லாம் காலம் காலமாக ஆதாரச் சுரமின்றி—அபசுரமாகச் சொல்லிக் கொண்டிருக் கின்றனவே. அவை பகுத்தறி வாதிகளுக்குத் தெரியாதா என்ன?

எழுதுவதைவிட அதைச் செயல்படுத்துவதே துரிதப் பயன் என்று, அவர்கள் அறிந்து கொண்டார்கள். பகுத்தறிவுத் தந்தை பெரியாரின் மாணவர் அறிஞர் அண்ணா தமிழகத் தலைமை அமைச்சராகி—மின் மறைந்த போது; தெய்வத்திற்குத் ஒப்பிட்டு யாரோ ஒரு மதவாதி கூறியதை மனதில் கொண்டு

> ''அகால மரணமடைந்தவர்களை எல்லாம் அவதார
> புருஷர்கள் என்று சொல்லலாமா?''

எனப் பொருமினார் இராசகோபாலாச்சாரி.

அண்ணாவைப் பற்றிய 'சிறப்பு' பாடநூலில் இடம் பெற்ற தற்காக பொருமி வெடித்தவர் அண்டே, தமிழ் மக்களை 'படிக் காதவர்கள். எளிதில் உணர்ச்சி வசப்படக் கூடியவர்கள்' (1994) என்ற சனாதனி சேஷன் (பாம்பு) அறிஞர் அண்ணாவையே சி. அய். ஏ. ஏஜண்டு என வாய் கூசாது சொல்லி விட்டார்.

அவரை மட்டுமா கூறினார்? வீரமிகு காமராசர், எம். ஜி. ஆர். ஆகியவரைப் பற்றியும், கூறினார். குடுமிகளுக்குள் குடுமி முடிப்பு என அறிவாளி திரு. சுப்பரமணிய சுவாமியாற் கூட 31-10-94—தினத்தந்தி) ''தலைமைத் தேர்தல் கமிசனர் சேசன்,

தனது புத்தகத்தில் 168—பொய்களை எழுதி இருக்கிறார்'' என்று கூறியவாறு பார்ப்பனரல்லாதாரின் வளர்ச்சி, அவர்களின் முற்போக்குப் பகுத்தறிவு எழுச்சிகளில் சில குறைகள் இருந்தாலும் அவற்றைப் பெரிது படுத்தி, சமயத்தைப் பயன்படுத்தி பானைவயிற்றில் வேங்கடப்பட்டை நாமம் போட்டுக் கொண்ட சங்கரமட அடப்பக்காரர் மாண்புமிகு சேசன் பொறுமி வெடிக்கிறார். அவர்கள் வயிற்றிலிருக்கும் கழிவுப் பொருள்களை சந்தனமென்றே, முகத்தைத் தரையில் புதைத்துக் கொண்டு உடலை மட்டும் வெளியில் காட்டும் நெருப்புக் கோழிகளாக ஆங்காங்கு இருக்கின்றனர்.

ஆழ்ந்த சிந்தனை, முன் எச்சரிக்கை, கடுமையான முயற்சி, உழைப்பு இவைகூட சில சூழ்நிலையில் அதற்குப் பயன் இன்றி இழப்பாகவே முடிகிறது.

அவை எதிர்பாராதவை. அதை வைத்து வெற்றியை அதிர்ஷ்டம் என்றும், தோல்வியை: பூர்வ புண்ணியத்தை மறுப்பதால் ஏற்பட்ட தோசம் என்றும் அதற்குப் பிறரிடம் பொருள் பறிப்புச் செய்யும், சோதிடர் கூற்றுப்படி குரு—என்றால் ஐயர். சுக்கிரன் என்றால் அய்யங்கார் ஆகியவர்கள், கோவில் அர்ச்சகர்களையும் சாதி வர்ணத்தில் கடையராக்கப்பட்டவர்களுடன் சேர்த்து பின்தங்கிய வகுப்பார் என அரசு வேலை வாய்ப்பில் தாழ்த்தப்பட்டவர் வரிசையில் சேர்க்க வேண்டுமென்று ஆண்டி மடத் தீர்மானம் போடுகின்றனர். வாழ்க! அவர்கள் சம்பிரதாயச் சடங்கு, களை எடுப்பு, காடை ஏத்து, கருமாந்தரம் மணியடிப்பு ஓமத் தொழிலை விட்டு மாமனாக, மச்சனாகி எங்களோடு உடல் உழைப்புத் தொழிலுக்கு வாருங்கள்' உறவோடு கை கொடுங்கள்! முடியுமா? வரமாட்டீர்களே! இரட்டிப்பு வருவாய்க்கு இப்படியும் ஒரு தரித்திரக் கூப்பாடா? யார் இனிச்சவாயர்கள்?

ஜனநாயக நாடு என்ற பெயரில் முத்திரை குத்தினாலும் இசுலாம் கிறித்துவம் என்று மக்களினம் பிரிக்கப்பட்டு அதனதன் பற்றாக்குறை, வளர்ச்சி விமர்சிக்கப்பட்டாலும் இந்துமதம் என்ற பெயரில் அறியாத மக்களை சாதிவாரிப் பார்ப்பனர்கள்; இந்தப் பகுத்தறிவுத் தொழில் நுணுக்க இருபதாம் நூற்றாண்டிலும் இந்திய தேசியம் என்ற கண் துடைப்பில் சாதிவாரி அமைப்புகளை கவனமாக அமல்படுத்திக் காப்பாற்றிக் கொண்டே பொதுஉடமை ஒரேஇனம், தேசிய சிந்தனை என்று ஏமாற்றுகின்றனர். விஞ்ஞானம் கண்ட

கம்ப்யூட்டர் கருவிகளில், தொலைக்காட்சி, வானொலியில்கூட செய்தியாகவும், படக்கதையாகவும் விழாக்களாகவும் பழைய காட்டுமிராண்டித்தனமான ஆரியபார்ப்பன ஒரு சார்பு வரிஷ்ட்ட தவளை கத்தும் சுலோகங்களையும் ஏனோ—தானோ என பொருள் புரியாதவர்களிடம் ஒலிப்பேழையாகவு ஏற்றி இன்றும் மக்களிடம் கட்டாயத் திணிப்பாக்கி அவற்றில் பொருள் பறித்துக் கொள்கின்றனர்.

அவர்கள் அவர்களைத் திருத்திக் கொள்வதை, உரிமையை விட்டுக் கொடுத்த இழப் பொன்றே நினைக்கின்றனர், அடிப் படை அறிவு வளர்ச்சி பெறாத பல தான்தோன்றிகள், சில செம்மறியாட்டுக் கூட்டணிகளில் தலைவனாகி நடாளும் மனிதனாகிவிடுகின்றனர். வெளியுலக அறிவுபெற்றும்—அவர்கள் நமது கலாச்சாரம், பண்பாடு என—வரலாற்றுச் சாதிவர்ண வர்க்கச் சுரண்டலை தமது பாதுகாப்பிற்குப் பக்கபலமாக்கிக் கொள்வதில் சுயசிந்தனைத் தெளிவை அடைய விரும்பவில்லை. பிறரால் நாட்டிலே ஒருமித்து வளர்ந்த நல்ல பகுத்தறிவுச் சிந்தனைகளை ஒரு பொருட்டாக உணரவும், மதிப்பிட்டுக் கொள்ளவும் மறுத்து தமது பூர்வீகச் சொத்து என்ற மூடமதியை மக்களிடம் திணித்து அரசியல் பொருள் குவிப்பு ஆகிய வற்றில்—ஞாயமாகக் குரல் கொடுப்பவர்களையும் ஏற்க மாட்டாமல் அவர்களையும், அன்னார் கருத்துக்களையும் தங்கள் பதவி அதிகாரத்தால் பழித்து வாய் திறக்க விடாமல் தடைசெய்து உள்ளவரை சுருட்டிக்கொண்டு போவது என்ற கறைபடிந்த ரகசியத்தில் தவறு செய்வதையே ஞாயம் என்று அமுல் நடத்துகின்றனர். ஆரிய வேதாகம பார்ப்பன சுரண்டல்கள் மலிந்த நிர்வாண மனிதர்கள் அலையும், வட மாநிலங்களில் அங்காங்குள்ள அரசியல் கட்சியினர் பெரிய பெரிய நாடாளு மன்றப் பதவிகளுக்கு அவர்கள் பார்-எட்-லா படித்திருந்தாலும் பட்டை நாமங்களின் யாக வளர்ப்பில், ஏன்? இந்தியாவின் பிரதம மந்திரியாக வருவதற்குக் கூட தங்கள் சுய அறிவை அடகு வைக்கின்றனர். பொய்யாகப் பிழைப்பிற்குச் சொல்லப்பட்ட நித்ய கர்மா, நைத்திய கர்மா, காம்மிய கர்மா—என்ற மூன்று வகையான ஓமத்தில்—பணம் தேவை, பதவி தேவை, விரோதிகள் ஒழிய வேண்டும் என்ற புரோகித யாகமாக 'காம்மிய கர்மம் என்ற மூன்றாவது வகை நெருப்புக் குண்டம் வளர்த்து பதவி என்ற குதிரைகளின் மேல் பணம் கட்டுகின்றனர்.

அந்த வழியினரில் தென்மாநிலத் தெலுங்கு தேசத்தில் மகாகனம் இரண்டு ராவ்கள். ஒருவர் திராவிட மாவீரன் தமிழ்

இரணியனைக்கொன்ற நரசிங்க அவதாரம் என்ற பெயர் கொண்ட மாண்புமிகு திரு. நரசிம்மராவ் அவர்கள்,மற்றொருவர் திராவிட மாவீரன் இராவணனைக் கொன்ற இராமாவதாரம் என தெலுங்கு நிலபுலமிக்க சௌத்திரி வழி வேளிர்க்கம்மா மரண்புமிகு திரு. ராமாராவ் அவர்கள். இரண்டாமவர் தெலுங்குத்திரைப் படங்களில் தசாவதாரங்களையே நடித்து அந்த மக்களிடம் தாரகாராமனாகவே நிரந்தரக் குடி கொண்டவர். இருவருமே அவரவர் கட்சி, தேர்தலில் அமோக வெற்றி பெறவேண்டுமென்று திருப்பதி ஏலுகொண்டலவாடுக்கு மொட்டைபோட்டு மேலே விளக்கம் கூறப்பட்ட காம்ய கர்ம யாகம் நடத்தினர். என்ன கொடுமை? இவர்களை நம்பி, அல்லது இவர்கள் வழி நடத்திச் செல்லும்அந்த மாநில மக்களின் முரண்பட்ட பண்டையக் கடைப்பிடிப்போ, வளர்ச்சி, நாகரீகம் பண்பாடு குறித்தோ அது இந்தியக் கலாச்சாரம் என்று முற்றுப் புள்ளி வைத்து விடுகின்றனர்.

பாபர் மசூதி இடிப்பு வழக்கில்; இந்தியத் தலைமை நீதித் துறையை மீறிய குற்றத்திற்காக ஒரு நாள் சிறைத் தண்டனை யும்,இரண்டாயிரம் ருபாய் அபராதமும் கட்டி வெளியே வந்ததும் அந்த கர்சேவா கடப்பாறையாளர் என்ன பேசினார் தெரியுமா? அந்த மாண்புமிகு பாரத ஜனதா திரு. கல்யாண சிங் என்பவர்; சாமியார்களின் "அயோத்தியில் இராமர் கோயில் கட்டுவதற் காக அமைக்கப்பட்டுள்ள ராமாலயா அறக்கட்டளைக்கு பிரதமர் நரசிம்மராவ் என்ன உறுதிமொழி கொடுத்திருக்கிறார்" என்று கேட்கிறார் (தந்தி 29 10 94) இதற்கு;

"மண்டலக் கமிசன் பெயராலும் இடஒதுக்கீட்டின் பெயரா லும் வி.பி.சிங் முன்னேறிய வகுப்பினருக்கும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கும் இடையே பிளவை ஏற்படுத்தி விட்டார்" என்று தேர்தல் பிரசாரத்திற்காக ஆந்திரா கோதாவரி மாவட்டம் தாடே பள்ளியில் பேசிய மாட்சி மிகு நரசிம்மராவ் அவர்கள்; சாமியர்கள் பற்றி என்ன கூறினார்? இதோ! (தந்தி ?9.10-94 "அரசுக்கும் சாமியார்களுக்கும் இருக்கும் உறவை முறிக்கமுடியாது. சாமியார்களுக்கு ஆட்சியாளர்கள் தலை வணங்கும் ஒரே நாடு இந்தியா தான்" என்றார். எப்படி?

இவர் எந்தக் கருத்தில் எதற்காக இப்படிச் சொல்கிறார்? இஸ்லாமியச் சாமியார், இந்து மதச் சாமியார் கிறிஸ்த்தவச் சாமியார் ஆகிய மூவரில் யாரைச் சொல்கிறார்? ஆனாலும் பிரபல இந்து சமய சந்திரச் சாமியாரின் பிறந்த நாள் விழாவில்

தான் அப்படிப் பேசி இருக்கிறார். கலைஞர் கூட ''நரசிம்மராவ் பேச்சு,மதவெறியைத் தூண்டுகிறது!''என்றுசுட்டிக்காட்டினார்.

வெளிவந்த குற்றப் புலனாய்வுத் துறை வழக்குகளில் கள்ளக்கடத்தல். கற்பழிப்பு எனப்பல பெரும்பான்மை இந்து மதமடச்சாமியார்கள் பிடிபட்டு இன்னும் விசாரணைக் கைதிகளாக நிற்கிறார்கள். பிடிபடாத பல சாமியார்களுக்கு மகா கனம் தலைவர்கள் இப்படித் தலைவணங்கினால் தேசிய இந்தியாவில்—பல மதங்களுள்ள இந்தியக் குடியரசின் இளைய தலை முறையினரின் எதிர்கால ஒற்றுமை—வெளியுலக உதவிகள் என்ன ஆவது?

குறிப்பாக நடந்து முடிந்த தென்மாநில ஆந்திரா, கர்னாடகக் தேர்தலிலும் (12-12-94) தெலுங்கு தேசம், ஜனதாவே வெற்றி பெற்றது. ஏன்? இதற்குப் பதிலை ஒரு சமயம் பட்டம் பதவிக்காக 'காம்ய கர்மம்' என்ற யாகம் வளர்த்த மகாகனம் திரு. அர்சுன் சிங் அவர்கள்;'

''இந்திரா காங்கிரஸ் தோல்விக்கு நரசிம்மராவ் தான் காரணம்''—என்றார்.

2. ''பாபர் மசூதி இடிக்கப்பட்டதைத் தடுத்து நிறுத்தாததால் சிறுபான்மை மக்கள், இ. காங்கிஸை மன்னிக்கவில்லை என்றே தெரிகிறது. பாபர்மசூதி இடிப்புக்கு பகிரங்கமாக மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று நான் ஒரு ஆண்டுக்கு முன் கூறினேன். ஆனால் அதை யாரும் ஏற்றுக்கொள்ளவில்லை.' (செய்தி தந்தி—12-12-94) என்று தெளிவாகவே கூறிவிட்டார். இந்த விழுக்காடுகளை எல்லாம் முப்பது வருடங்களுக்கு முன்னரே கழுதைகத்தியேபொழுது விடிகிறதென்று தமிழ்த்திரைப் படப்பாடல் ஆசிரியர் திரு. தஞ்சைராமய்யாதாஸ் அவர்களும்;

''சாஞ்சா சாயிரபக்கமே சாயிர
செம்மறி ஆடுகளா?—உங்க
சாயம் வேளுத்துப் போச்சு
பழய ஏடுகளா?''

என்று குறிப்பிட்டார்.

இவ்வாறு தொடர்ந்து மேலே சொல்லப்பட்டு வந்த சந்தர்ப்பவாதிகள், மக்கள் சமூகம் என்ற நெருப்பு வளையத்திற்குள் நின்று, பெட்ரோல் ஊற்றி வாய் கொப்பழிக்கின்றனர். ஆச்சாரியாரும், பெரியாரும் நல்ல நண்பர்களாக இருந்தாலும் ஆச்சாரியார் காலத்தில் (50—ஆண்டுகளாக) ஒப்புக் கொள்ளப் படாத

பெரியாரின் சமூகநீதியில்; பின் தங்கியவர்களுக்கு வேலை வாய்ப்பு —ஊதியம்—, அறிவு வளர்ச்சி—, என்ற சுயமரியாதைத் திட்டம்; இன்று 1994—இல் ஏதோ ஒப்புக் கொள்ளப் பட்டதில், பட்டை நாமம் போட்ட இன்றைய பல பாம்புகள் தாங்க முடியாமல் விஷத்தைக் கக்குகின்றன. ஏன்? கொத்த முடியவில்லை. ஆனாலும் கோணல் புத்தியைக் காட்டுகின்றனர். யார்? யார்?.

''இதயம் பேசுகிறது'' மணியன் (9-10-94)

''பெரியாருக்குப் பின்னால் தலைமை ஏற்க வந்தவர்கள், தாங்கள் பிழைப்பு நடத்துவதற்காகவும், ஆட்சிக்கு வருகிறவர் களின் அனுசரணை பெற்றுக் காரியம் சாதித்துக் கொள்வதற் காகவும் அந்த இயக்கத்தை நடத்திக் கொண்டிருக்கிறார்கள்.'' என்றார்.

எப்படி? அன்றையத் தமிழக முதல்வர் மாண்புமிகு எம்.ஜி.ஆர்., மணியத்திற்கு அன்பு உதவியாக இருந்தாலும், பெரியார் கொள்கையில் எம். ஜி. ஆர் அவர்கள் பிடிப்புடன் இருந்தார். இன்றையத் தமிழக முதல்வர் மேதகு ஜெயலலிதாவை மணியம் நெருங்க முடியவில்லை. உரிமைக் குரல் கொடுத்தார் திராவிட இனமானத் தளபதி வீரமணி.—உறவுக்குக் கைகொடுத்தார் மாண்பமை முதல்வர் ஜெயலலிதா. 69—(50) சதவிகித ஒப்புதலில் வெற்றி பெற்ற செல்வியை வீரமணியார் சூட்டிய, சமூக நீதிகாத்த வீராங்கனையை'' இந்தியாவே பாராட்டுகிறது. ஆகவே மணியன் என்ன மணியன்? அவர் சொல்வது போல இங்கே தனிப்பட்டவர் பிழைப்பு நடத்துவதற்கும், காரியம் சாதிப்பதற்கும்—பயன் அடைவதற்கும் மேற்கண்ட இருவரில் ஒருவருக்கொருவர் இளைத்தவரல்ல. இதை பெருமைக்குரிய மணியன் புரிந்து கொள்ள வேண்டும்.

தமிழக முதல்வர் புரட்சித் தலைவியும் (1994), அனைத்துக் கட்சியினரும் சேர்ந்து கொண்டு விட்டார்கள். ஒப்புதல் அளிக்காவிட்டால் புரட்சி வெடிக்கும் என்று—நிராகரிக்க முடியாமல் தமிழக அறுபத்தொன்பது சதவிகித இடஒதுக்கீட்டுக் கோரிக்கைக்கு ஒப்புதல் அளித்தவரும்: அடிக்கடி ஏழுமலை யானுக்கு முடிக்காணிக்க செலுத்தும் இன்றைய இந்தியக் குடியரசு தலைவர் மேதகு சங்கர் தயாள் சர்மா கூட மனச் சுமையை இரக்கிவைத்தவராக; இட ஒதுக்கீட்டில் மனம் திறந்த வராக;

''பார்ப்பனர்களின் வேலைகளை பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் பறித்துக்கொள்ள முடியலாம். ஆனால்

அவர்களின் மூளையைப் பறித்துக் கொள்ள முடியாது''
என்று கூறினார்.

—''உண்மை''—16—10—94

அதற்குப் பதில் அளிப்பவராகத் தமிழக சமூகநீதி மகா நாட்டில் பேசிய சந்திரஜித் யாதவ்,

> ''உங்கள் மூளை எங்களுக்குத் தேவை இல்லை. அது குறும்புத்தனமான மூளை, நாங்கள் நேர் வழியில் மூளையைச் செலுத்தி உழைத்து முன்னேற விரும்பு கிறோம்'' என்றார்,

வேண்டாமென்றாலும் அந்தப் பார்ப்பன வழி இரத்தக் கலப்பின் சூத்திர மூளை ஒட்டிக்கொண்டு காலம் காலமாக நம்மோடு தொடர்ந்து இன்றும் தமிழகத்தில் சினிமாத் துறை யாளரிடம் கூட கொடி பிடித்து நிற்கிறதே! அதற்கு என்ன செய்வது?

> ''காலில்லா நெட்டையன் முட்டிக்கொண்டான்
> கருத்தில்லாக் குட்டையன் கட்டிக்கொண்டான்
> ஈயில்லாத தேனைஎடுத்து உண்டுவிட்டான்
> இனிக்கு தில்லையே ஞானப் பெண்ணே''!

பாடல் : புரட்சிதாசன், படம்: அழகர்மலைக்கள்ளன், குரல் : திருச்சி லோகநாதன். (1958)

சித்தர் கருத்துள்ள மேற்கண்ட என்னுடைய இசைப் பாடல் என் நினைவுக்கு வருகிறது. ஈக்கள் கட்டிய கூட்டுத்தேன் இனிக்கும். அப்படி இல்லாத தேன் கூட இனிக்கலாம். ஆனால் அது தேனல்ல—கலவை. அந்தக் கலவை என்ன?

மேலே கண்ட உவமான உவமேயமாகப் பல வெற்றித் தமிழ்ப் படங்களை எடுத்தவர் நமதுதேவர் சங்கிலி முருகன், ஒரு சமயம் ஆன்மீகம் பற்றிய ஐயத்தைத் தெளிவுபடுத்திக் கொள்வதற்குப் பார்ப்பன சோதிடர் வித்வான் பெருமைக்குரிய லட்சுமணன் அவர்கள்; கவிஞர் நா. காமராசன் கூறியவாறு (15—1—95) தமிழ்த் திரைப்படப் பாடல் எழுதும் ஆசிரியர் களை எடுபிடிகளாகப் பயன்படுத்தும் 'இசைச் சர்வாதிகாரி' என்ற இளையராசாவை பேட்டி எடுக்கச்சென்றபோது ''அதைப் பற்றி எனக்கொன்றும் தெரியாது, நான் புத்தருமல்ல ஏசுவு மல்ல!'' என்றவரும்; சிறந்த ஆர்மோனிஸ்ட் இராசய்யா என்ற இளையராசா ஆகிய இருவரும் ஒரு திரைப் பாடல் ஒலிப்

பதிவுக் கூடத்தில் சந்திக்கின்றனர். (25—10—94 சினிமா கதம்பம் இதழ்)

அப்போது இளையராசா சமஸ்கிருதத்தில் ஒரு பாடல் பாடுகிறாராம், அதைக் கேட்டு ஆச்சரியப்பட்ட சங்கிலி முருகன் "வேற்று மொழிகளிலே கற்பதற்குக் கடினமானது சமஸ்கிருதம் தான். அதை இவர் பாடுகிறாரே" என்று --இவர் சமஸ் கிருதத்தைப் பற்றி அறிந்தவர் போல;

"இராசா! சமஸ்கிருத மொழி எப்போது கற்றீர்கள்?" என்று கேட்கிறார். அதற்கு இளையராசா என்ன சொன்னார் தெரியுமா? கற்றிருந்தால் உண்மையைச் சொல்லி இருக்க வேண்டும். "எங்கே கற்றேன். தன்னாலே வருது!" என்றாரே! இது எப்படி? என்ன வருகிறது? அப்படியொரு கேள்விக்கு இப்படியொரு பதிலா? (தமிழ் இசையைப் பற்றி இளையராசா தாம் சக்தியின் அருள்பெற்றதாகக் கூறுவர்.) என்ன வருகிறது. சட்டியில் இருந்தால் அகப்பையில் வரலாம். இளையராசாவின் நாவில் பிரம்மாவின் மனைவியும் மகளுமான சரசுவதி, ஒருகால் ஒருக்கனித்து மறுகால் குத்தி உட்கார்ந்து விட்டாள் போலும்.

ஐயய்யோ! பெரியார்தொண்டர் ஐயா உடுமலை நாராயண கவி, அவர் காலத்திலேயே ஒரு திரைப்படப் பாடல் எழுதி; அது பரபரப்பாகப் பேசப்படும் வகையில் கலைவாணர் என், எஸ். கே. அவர்களும் அதைப் பாடிவிட்டார். அந்தப் பாடல் வரி இதோ! அப்படியானால்?

"அவள் மலசலம் கழிப்பது
எங்கே? எங்கே"

இதுவும் இளையராசாவுக்குத் தெரியும். இந்த இருபதாம் நூற்றாண்டிலிருக்கும் ஏற்றத்தாழ்வுகளை மதவாரிக் கலை, இசை, மொழி என்ற பெயரில் வழக்கிலிருந்தும் பிழைபட்ட நிகழ்வுகளை எடுத்துச் சொல்வதற்கு ஜனரஞ்சகம் என்ற பெயர் வைத்து பல தொலைகாட்சிகளில் விளம்பரப் படக்காட்சி யாளர்கள் வியாபார விமர்சனம் செய்கின்றனர். கவர்ச்சி பொதுச் சொத்தாகும்போது, அதற்குரிய கன்னியரின் பழக்க வழக்க மொழியறிவு எல்லாம் பிழை, கொச்சையானாலும் வியாபாரத்திற்குக் கடை விரிப்பாகின்றது.

அவ்வாறே திரைப்பட ஒலி, ஒளியைக் காட்டும் மற்றொரு தொலைக்காட்சியில் பட விளம்பரக்காரர்கள்—மத விளம்பரம் அதாவது கிடைத்த வாய்ப்பினை பயன்படுத்துபவர்களாக

வைணவக் கருத்துகளை—சமூக மறுமலர்ச்சிக் கருத்துக்களுக்குத் தடையாக—பிளவு மனப்பான்மையில் ஜெயினக் கருத்துக்களை முடிந்தவரை பாமர மக்களிடம் திணிக்க முயன்று வருகிறார்கள்.

'கொன்றால் பாபம்' என்ற மதக்கருத்தை நம்பியும் அதைத் ''தின்றால் போச்சு'' என்ற விடுதலை மகிழ்ச்சியிலும் ஊர்வன, பறப்பன, நடப்பன, நீந்துவன ஆகிய மானுட மல்லாத உயிர்களைக் கொன்று உயிர்வாழும் வியாபாரம் நடத்தும் உலகளாவிய மனித இன வாழ்வும், மதுவிலக்கு என்ற பெயரில் அதை நிறைவேற்ற முடியாமல் அவ்வப்போது ஒரு அறிக்கையை வெளியிட்டு அதிர்ச்சியுண்டாக்கி, அந்த வியாபாரி களிடம் கையூட்டு வாங்கும் லாபமும் நாட்டில் மிக மலிந்த செய்திகளும், அன்றாடம் நடக்கும் நிகழ்வுகளுமாகும்.

சென்னையையும் அதைச் சுற்றியுள்ள மாவட்டங்களிலும் பணம் போட்டுப் பணம் சம்பாதிக்கும்—பிறமாநில—குறிப்பாக ஜைனமத வழியினர்—பிறதொழில்களையே பாவம் என்ற மதம் பிடித்தவர்கள். தமது மத விளம்பரத் துணுக்குகளில்—தெருவில் அலையும் பைத்தியம் பிடித்த நாய்களை—மாநகராட்சியினர் பிடித்துக் கொல்லுவதையும்—மக்கள் புலால் உண்பதையும் எதிர்த்து வாயைப் பொத்திக் கொண்டு விமர்சிக்கின்றனர்.

உணவுப் பொருட்களை உற்பத்தி செய்பவர்களை பாபம் செய்பவர்கள். அது அவர்களோடு போகட்டும் நாம் பணத்தைக் கொடுத்துத்தான் அதை வாங்குகின்றோம். அது பாபமில்லை என்ற மதவாதக் கொள்கை அழுத்தத்தில் சுயசிந்தனை—இழந்து நிற்கின்றனர்.

தங்களுக்குள்ள உரிமைகள், சலவைக்கல் ஜைனக் கோயில் நெறிகளுக்குப் பங்கம் வந்து விடக்கூடாதே என்பதில் சூழ்நிலை கேற்றவாறு பயன்பட்டு—அரசினர் விமர்சனம் வராதவாறு, தங்கள் அந்தஸ்து—ஆரோக்கியம்,—சுக வாழ்வு—வியாபார வளர்ச்சிகளை—அப்படி அப்படியே காப்பாற்றிக்கொள்ள—சூத்திர இந்துக்களில் சாராயத்துக்கடாக்களுக்கு—புள்ளையார் சதுர்த்தி விழாக்களுக்கு பெரும் பணம்—விழா—எனப் பொருள் கொடுத்து அதைக் கடலில் கரைக்கவிட்டு—சர்தா பீடா போட்டுத் துப்புகின்றனர். பிராமணர் அல்லாதவர்களின் கருத்துக்களை எற்காதவர்களாக சத்திரிய குலத்துச் சந்ததி களைக் காட்டிக் கொள்கின்றனர்—காட்டி ஏமாற்றுகின்றனர்.

★

# 19

# இலக்கணம் மொழி என்ற பெயரில் ஏழ்மைப் படுத்துபவர்கள்

இயற்றமிழ் இலக்கணப்புலமையில்; சீர் தளை, யாப்பு, அணி எனச் செய்யுள் வகைகளில் அதன் தெளிவும்; சொல்; எழுத்து, பொருள் என்பதில் அந்த அதிகார வரம்பும், கட்டுக் கோப்பு களும், வாழ்வியல் நடைமுறை, மக்களின் கால வளர்ச்சி, காதல், களவு கற்பு, மணம், பிரிவு என்பதில் திணை நிலமெனத் தொகுத்துக் கடைப் பிடிக்கப்பட்டு வந்தவை, நம் தமிழ் மரபுணர்த்தும் பொருள், அதிகாரமெனவும்; அது கொண்டு படிப்பிக்கப்பட்டும் வந்திருக்கிறது.

அவற்றில் தேர்வு பெற்ற புலவர் பெருமக்களே அரசவை யில் பாராட்டப் பட்டுள்ளனர். அக்குழுவினரே தமிழ் வளர்ச்சிக்கு ஆசான்களாகவும், பல்வகைத் தேர்வுக்குரிய கணிப்பாளர் களாகவும் விளங்கினர்.

இசைத்தமிழ் இலக்கணப் புலமை என ஐந்திணை குறித்து, குரல். துத்தம், கைக்கிளை உழை, இளி, விளரி, தாரம் என்ற வகையில் ஏழு பிரித்து;—குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என நிலம் பிரித்து; அந்தந்த மக்கள் நலம் வாழ்வியற் பாங்கு பக்குவம்பிரித்து,—பண்கள் அதற்கு நெடில், குறில், சுரங் கள், மாத்திரைகள் (அலகுகள்), கேள்வி பற்று என இத்தனை சுரங்கள் (அளவு) வருவதில்—இந்த இந்த குறிப்பிட்ட சுரங்கள் முன்னர்—பின்னர் வந்தால் இராகத்தின் நிற வேறு பாடுணர்த்தும் படிப்பினைகள் பயிற்றுவிக்கப்பட்டு வந்திருக் கின்றன.

அவ்வழி நரம்புக் கருவிகளின் தோற்றம், வளர்ச்சி; தோல் கருவிகளின் தாள (ஒலி) வேறுபாடுகள்; வாய்ப்பாட்டு, விருத்தம்

தொகை என வகை பிரித்து, செறிவான புலமை இசைத் துறையில் பயிற்றுவிக்கப் பட்டு வந்திருக்கிறது.

இளமை, இயற்கை, உறவு, குடும்பம், குழந்தை, நீதி நெறி, நிலையாமை, பொருள், செல்வம், ஒற்றுமை, அரசு, என நெறி பரந்த வாழ்வியல் ஒழுக்கங்கள் எனப் பாடமாகக் கொண்டும் படிப்பிக்கப்பட்டுள்ளன. அவற்றில் தேரிய ஆசான்களே இசைப் பேரறிஞர்கள் என குறுந்தோகை, புறத்துறைத் தொல்காப்பியத்திலும் எடுத்துக் காட்டப் பட்டிருக்கின்றமை கண்கூடு.

கருவிகள் வைத்துப் பாடிய பல்லியம், ஆமந்திரிகை என்ற (மஸ்ட்ரோ) தலைப்புப் பெயர் அரங்க இசைக்கலை குழுக்கள், தங்கள் இசைப் புலமையை பொது மக்களவையில் உணர்த்திய வரலாற்றுச் செய்திகள், சங்கநூல் செய்யுள்களிலும், சிலப்பதிகாரத்திலும் தெளிவாக அறியப்படுகின்றன.

நாடகத் தமிழ்ப் புலமையில் வாழ்வியல் நிகழ்வுகளை உடை மாற்றி, ஒப்பனை செய்து கூத்து என்ற பெயரில் நடிகை, நடிகர்கள் நடிப்பதும், பாடுவதும், ஆடுவதுமாக இசைப்பாடல், தாளங்கொட்டி ஆடப்பட்டன. கூத்து ஆடியவர்களுக்கு மன்னர் பொன்முடிப்பும், பரிசுகளும் வழங்க, மக்களின் பாராட்டுகளும், மாலைகளும், நினைவுத் தூண்களும், கூத்தர்களின் சிறப்புக்களைப் புலப்படுத்தும்.

நளிநயக் குறியீடுகளை உணர்த்தும், மரம், செடி, கொடிகள், பறப்பன, ஊர்வன, நடப்பன, நீந்துவன கொண்டே தொடங்கு பாடமாகப் படிப்பிக்கப் பட்டுள்ளன.

நட்டுவன், தலைக்கோல் மடந்தையர், நாட்டியத்தை கூத்தினைப் படிப்பித்து வந்த நிறைவான செய்திகளும் மிகத் தெளிவாக அறியக் கிடக்கின்றன.

> மேலே சொல்லப்பட்ட இயல், இசை, நாடகம் என மூன்று பிரிவிற்கும் முன்னரே வகைப்படுத்தப்பட்ட — பல புலவர் பெரு மக்கள் எழுதிய பல்லாயிரம் ஓலைச் சுவடிகளே சங்க நூல்களாகப் பிற்காலத்தில் வழிவழியாகத் தொகுக்கப்பட்டன.

அடிப்படையாகவும், பரவலாகவும், இன்று, ஆய்வுக்கும், தெளிவிற்கும் கொள்ளப்படும் தமிழ் நூல் வரிசையில்; அவற்றில் இலக்கண இலக்கிய நூலாகத் தொல்காப்பியம்; அவ்வழி மரபுணர்த்தும் காப்பிய இசை, நாடகம் என சிலப்பதிகாரம்

அவ்வழி கிளை நூல்களாக, இயலிசை நாடகத் தமிழின் தொன்மையை நமக்குத் தொகுத்துரைக்கின்றன.

நீதி நூலாகத் திருவள்ளுவமும் நிறைவாகத் தமிழர் பெருமையை உலகுக்கு உணர்த்துகின்றன.

நன்கு ஆய்வுப் புலமை பெற்ற நமது அறிவிற் சான்றோர் தொல்காப்பியத்திற்கே முதலிடம் கொடுத்தனர். நமது தமிழ்ப் புலவர்கள் நிலமக்களின் கருப் பொருள், உரிப் பொருள் கொண்டு பாடிய ஐந்திணை—மொழிமாற்றப்பட்டு—வடமொழி ஐந்திரமாகி இருக்கலாம். நமது யாழ்ப்பாணர்களின் பாடல் இலக்கணம் பாணினீய வியாகரணமாகி இருக்கலாம். இதுதான் உண்மை. அதை ஒரு பொருட்டாகி இனிவரும் தமிழர் தலை முறையினர் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமே இல்லை.

அவ்வழியில் மட்டுமா ஏமாற்றுகிறார்கள்? விழாக்குழு, அறிஞர் ஆய்வுக்குழு, எனப் பல பெயரில் சிலரைக் கூலிகளாகக் கொண்டு, விளம்பரப்படுத்தி, பல புராண, இதிகாச மதவிளம்பர நூல்களை, திணிப்புகளை—வியாபார நோக்கம் ஒன்றையே குறிக் கோளாகக் கொண்டு வெளியிடுகிறார்கள். அவர்களின் அறியாமையை மேடைகள் அமைத்து கருத்தரங்கமாக—பட்டி மன்றமாக—விவாதிக்க யாரும் முன் வருவதில்லை.

தமிழ் எழுத்துலகில்; இலக்கண—இலக்கிய நூல்களிலும், தமிழிசை என்ற பெயரில் மேடைக் கச்சேரிகளிலும், திரைப்படங் களிலும் 'எயிட்ஸ்' நோய் போல—அவற்றின் உரிய சிறப்புகளுக்கு இழப்புகள் ஏற்பட்டு—பரவி வருகின்றன.

கலை என்ற பெயரில் பாராட்டப்பட்டாலும், அந்த மரபுக் கூத்தாடிகளுக்கோ வரலாற்றுக் காலந்தொட்டு சமூக அந்தஸ்து கொடுக்கப்படவில்லை. மதவாத அடிப்படையான மனித வாதிகள் அவற்றைக் கீழ்மைப்படுத்தியே ஒதுக்கி வைத்தனர். இசை வேளிர் பெற்றிருந்த அத்தொழில் பிராமணச் சங்கத்தினர் கையில் வந்ததும் புனிதமடைந்து—முன்னுரிமை பெற்றுக் கொண்டதாக அங்கலாய்க்கிறது. காலத்திற்கேற்ற வளர்ச்சி இது எனினும் மாடிழுத்த கட்டை வண்டி, மிதிவண்டியாகலாம். ஆனால் அந்தக் கட்டை வண்டியே மனிதன் இழுக்கும்கைவண்டி யாக இருந்தால், இது முன்னேற்றமாகாது.

தமிழ்க் கச்சேரிப் பாடல் என்றால்—பிராமண சங்கத்தின் தியாகராசக் கீர்த்தனை,—ராகமென்றால் ஏதோ உருப்படி யாகத்தான் இருக்கும் இது. தமிழ்ந் திரைப்படத் துறையிலும்; வெறும் தாளத்திற்கும்—'செக்ஸ்' காமத் துண்டுதலுக்கும் உரிய

பொருள் அழுத்தி மறைக்கப்பட்ட இசை வண்ணப்பாடல் களாகவே ஒலிக்கின்றன.

பாடுபொருள், இசைநிறம், கதை நிகழ்வு, நடிக நடிகையர் தோன்றல், பொருத்தமானாலும் வியாபாரக் கண்ணோட்டத் தில் அவை மதன உற்சவங்களாகவே இருக்கின்றன. தமிழிசை அங்கு வளரவில்லை. இசை அமைப்பாளர் என்ற பெயரிலுள்ள பலருக்கு அந்த ஞானமில்லை. அவர்களில் அடிப்படையான முழுமையான ராகங்களில்,—அதன் கமகமச் சாயல்களில் இசை என்ற பெயரில் அது இன்ன ராகமென்று கூற—முடிவுக்கு வர முடியாத பாடல் வந்தாலும், அவை மக்கள் மனத்தில் அழுத்த மாக இடம் பெறுவது அரிதாகவே இருக்கிறது.

தாளம் தட்டியவர்களும், ஆட்டக்காரர்களும் கலந்த இசைப் பாடல்,—நாட்டியமென்று வரும்போது தாளத்தின் முக்கியத் துவத்திற்கு சுர வரிசையும், வகையுளி இலக்கணப் பாடல் வரியும் பொருள் ஏற்றச் சொற்களும் மிகுந்து, வயதானாலும் நம்மை மறந்திருக்கும் நிலையே ஏற்படுகிறது.

இளையவர்களும் முதியவர்களும் உறவு கொள்வதும், அதை நினைப்பதுமாக,—அதாவது அந்தரங்க நிகழ்வுகளை நினைவு படுத்திக் கொள்வது போன்ற பாடல், இசை. ஆட்டம் என்பதால் அதைப் பழித்துக் கூறாது விருப்பு வெருப்பற்ற வகையில் ஏதோ ஏற்றுக் கொள்கிறார்கள்.

> தமிழிசை என, மேடைதான்—தெலுங்கு, கன்னட,
> சமஸ்கிருதமென்றால்,—திரைப்படத்துறையிலும் கூட
> இப்படி ஒரு நிலை புகுந்து சரிவு தொடர வேண்டுமா?

பலமொழிக் கலப்பட ரசிகர்கள் வாழும் தமிழகத்தில் ''இசைக்கு மொழி தேவையில்லை'' என்று சொல்லும்—(கருதப் பட்டார்) அறியாமை கொண்டவர்களை அடிப்படைத் தமிழ் உணர்வு கொண்டவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

தனியார் தொலைக்காட்சித் தயாரிப்போ—விளம்பரக் காட்சி திணிப்பால்—மிகையான பாலுணர்வு தூண்டும், படம், பேச்சு, பாடல், என அவரவர் முன்னுரிமை, மதவிளம்பர, சொற்பொழிவு எனத் தான்தோன்றித்தனமாக, அரசின் தேசிய தணிக்கைக் கட்டுக்கோப்பிறகு வராமல் செயல்பட்டு வருகின்றன.

ஆடல் பாடல்களில் ஆசியாவைவிட, ஐரோப்பாவிலும் ஆப்பிரிக்க மக்களிடையேயும், அன்னவர் ஆடல்களில் அவைகள் மிகையாகக் கொள்ளப்பட்டிருப்பதை, ஏன் அவர்களின்

இன்றையப் பாடற் தாளங்களிலும் அதற்குப் பெரும் சிறப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அன்றையக் கைத்தாளம், வாய்த் தாளம் என எல்லாம், இன்றையத் தோல் கருவிகளோடு மட்டும் அல்லாது மின்னனு இயக்க நரம்பு (வைபரேசன்)க் கருவிகள் மூலமும் அவை கொள்ளப்படுகின்றன.

ஆசிய சாவா, சுமத்திரா, நிகோபார், ஜப்பான், சீனா, பர்மா ஆகிய கீழ்த்திசை நாடுகளில், ஆண்ட வரலாற்றில், இந்தியத் தென்மாநில அடிப்படைத் தமிழிசையில், படிப்பித்துப் பரவிப் பாதுகாக்கப்பட்டு வந்த இசைப்பண்கள், சுர ராகங்கள் கூட இன்று மேற்றிசைக் கலப்படமாகி, அவையும் வளர்ந்து வரும் உலக நாகரீக மக்களின் இசை வளர்ச்சி என்று பாராட்டப் படுகிறது.

சுமத்தப்பட்ட பிழையை நெறியாகக் கொண்ட ஆரிய சங்கீத சுரங்களால்—அது வாயளவில் சொல்லப்பட்டாலும்.—அடிப் படைத் தமிழிசைகள் ஒழுங்காக இருப்பவை ஆய்வுக்குத் தெரிந் தாலும், மக்களுக்கு அவற்றை வெளிப்படையாக எடுத்துச் சொல்லப்படாத வரை பிழையைத் தக்க வைத்துக்கொண்ட வேண்டாத ஆரிய சங்கீத வாய்முனைப்பில் நம் தமிழிசையை கலப்படமாகவே கொண்டவர்களாவோம்.

இன்றையத் திரைப்படப்பாடற் பொருள் அறியுமிடத்து ''சோளிக்கே பீச்சேக்யாஹே?—ஹிந்தி கல்நாயக் படம். அதா வது ரவிக்கைக்குப் பின் என்ன இருக்கிறது? அது தொடர்ந்து:

''மாராப்புச் சேலைக்குள்ளே
மறைந்து இருக்கிறது என்ன கிளியே''

தமிழ்; இராவணன் படம்,

''தூக்கணும் தூக்கணும்
வைக்கணும் வைக்கணும்''

—தமிழ்; சுப்ரமண்யசாமி

''எப்படி எப்படி
சமைஞ்சது எப்படி?

—தமிழ்—இர்து—படம்

என்றளவில் இன்றைய தமிழ், இந்தி, தெலுங்கு, கன்னடம் ஆகிய திரைப்பட விரசமான பாடல்களின் தன்மை எளப் பச்சை யாகப் பொருள்படும்—பாடல்கள் எழுதும் ஒரு சில நிர்வாணக் கற்பனைத் திரைப்பாடற் கவிஞர்களால்—காலத்திற்கேற்ற

பக்குவப் பாடற்புனைப்பில் அனைத்து மக்களும் விரும்பும் இலக்கியமோ, அதன் சார்பு இசையோ—ஆடல் வகைகளோ உருப்படியாக வளர்ச்சி பெறாது.

மூடி மறைத்து உணர்த்தப்பட வேண்டிய [அவரவர்—துணை—உணர்வுக்கேற்று] காமம்—மேற்கண்டவாறு தூண்டப்படும் கொச்சைப் பொருள்களால் தெருவுக்கே வந்துவிடும். ஒரு பொருளுக்கேற்று பாடல் எழுதினால், அதற்குக் கொள்ளப்படும் இசை, ராகம் ஏற்கனவே மக்கள் ஒருமித்தறிந்தவையாக இருத்தல் அதற்கு வெற்றி எளிது. புதுமையானாலும் வரவேற்பே.

இல்லாவிட்டால் அந்த இசைராகத்தின் துணை, கிளைகளாக அவை இருக்கவேண்டும். உணர்வு, காதல், ஏக்கம், என மெய்ப்பாட்டுக் கருத்துக்களை மனம் கவரும் புதிய மெல்லிசைச் சுரக்கமகங்களில்', அதற்குப் பாடற்பொருள் சொல்லுவதே அருமை. இசைஞர்—அங்கே, அவன்ஞானத்தில் நின்றாலும் மறை பொருளாக மனத்தை மயக்கும் அந்த சுகத்தன்மையுடைய இசைப்பாடல் அனைத்து மக்களையும், கவரும் இயல்புடையது.

சிறுவர், சிறுமியர்க்குப் பால் உணர்வைத் தூண்டும் காமக் காட்சி, ஆடல், பேச்சு, உறுப்பசைவுப் பாடல்களால்—அழுத்தப் பட்ட கட்டாய உணர்வுகள், அவற்றிலிருந்து தன்னை விடுவிக்க வீண்முரண்பாடுகளையே மூச்சாகக் கொண்டு விடுகிறது. நியாயமானவைகள் மறைக்கப்படுவதால்,—ஒழுங்கற்றவைகள் தலை தூக்கி நிற்கின்றன. ஒழுங்குபடுத்திக்கொள்ள முடியவில்லை.

ஒரு நிரந்தர வருவாய் கொண்ட சுயநலம்—அதற்காகத் தங்கள் தலைமையை அப்படியே காப்பாற்றிக் கொள்ள, பிளவுகளால் ஏற்படும் சமூக உணர்வுகளான நியாயமானவைகளையும் அதிகாரத்தால் குழிதோண்டிப் புதைத்து விடுகின்றது.

ஆண்—பெண் உறவு—இன்ப சிந்தனைகள் பற்றிய படிப்பினை மறைவாக, ஏதோ, வழக்கில் இரகசிய நடைமுறையாகப் பின்பற்றப்படுகிறது.—பரவலாக—ஏன் ஆரம்ப முதல், பள்ளிக்கூடப் படிப்பாக, அதன் நன்மை தீமைகளைக் கட்டாயமாக்க கூடாது என்ற எடுத்துக்காட்டுக்களும்—மக்கள் மனவளர்ச்சி கொண்டு சிந்தித்து ஏற்கப்பட வேண்டியவைகளே. ஏகோபித்த மலிவான எந்தப் படிப்பினையும் துரிதகாலத்தின் ஏற்பு எனக் கொள்ளலாமே தவிர; தெளிவாகச் சிந்தித்துச் செயல்பட வேண்டியதாகும்.

தமிழில் மரபுக்கவிதை, புதுக்கவிதை என விமர்சிக்கப்படும் போது கடைப்பிடிக்கப்பட்ட மரபுகள் காலவளர்ச்சியில் ஒட்டு மொத்த இனவாரி—மொழிவாரி மக்களால்—புதிய கண்டு பிடிப்பென, அவைகள் மலிவு எனக் கூறப்பட்டாலும்; அந்த சூழலில் அவை பாராட்டுப் பெற்றே விளங்கி வேகமாக அதன் கிளைகளும் வெடித்து; பழைமை விரும்பிகளை ஊமையர் களாக்கித் தலைமறைவாகி விடுகின்றன.

பிரஞ்சுப் புரட்சியின் விளைவாக—சிக்கலான வாழ்வியலின் குரல்கள் எதிரொலித்த கருத்து விமர்சனங்களில் மனக்குமுறலை வெளிப்படுத்தும், சொற்களாக துணுக்குத் துணுக்குகளாக, வெளிப்பட்டு அதற்கும் சந்தமென்று ஏதோ பாடப்பட்டன. அவ்வகையில்;

பாதலோ, ரம்யோ, மல்லார்மே போன்ற நவீனப் புரட்சிக் கவிஞர்கள் பழைய மரபுக் கவிதையைத் துறந்து, புதிய முறை யென புதுக்கவிதைகளில் இறங்கினர்.

ஈப்ரூ மொழியிலிருந்து ஆங்கிலம் எனப் பிறமொழி களில் சொற்பொருள்கட்டுகள் மொழிபெயர்க்கப்பட்டபோது, புகழ்ச்சியணியென (செலஸ்டியல்) சாலமன் பாடல்கள் உரை நடைக்கவிதையாக—எட்டாம் நூற்றாண்டு முதல் பன்னிரண்டு பதினாங்கு தொடர்ந்தும்—கட்டுரை மொழி பெயர்ப்பாக வளர்ந்தது. அதன் எதிரொலியே பத்தொண்பதாம் நூற்றாண்டில் அமெரிக்க நாட்டு வால்டன் விட்மன் உரைநடைக் கட்டுரையைச் சுருட்டி, சுருக்கி புதுக்கவிதை என்ற பெயரில் பாடினான். நோபல் பரிசு பெற்ற வங்கக் கவிஞர் தாகூரின் ''கீதாஞ்சலி''யே புதுக்கவிதைதான்.

தமிழ்க்கவிதையில் ஆசிரியப்பாக்களில் கூடுதலான அடிகளும் குறைந்த அடிகள் என இரண்டும், மூன்றும் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் அவைகள்—சீர் எண்ணிக்கையும், அடி எண்ணிக்கையும், பொருள் வரிசையும் கொண்டவை. உரைநடைத்திரட்டு என்பதை இலக்கணக் கட்டுக்கோப்புள்ள கவிதை என்று சொல்வதே பிழை.

இவற்றிலிருந்து விலகியும்—பாரதியார் பாடினாலும், பாரதி தாசன் மரபுக்கவிதை இயற்றுவதில் வலிமையாக நின்றார். இன்றையப் பாவேந்தர் விருதுபெறும்—அந்தத் தமிழ்க் கவிஞர்களே,

எதுகையும் மோனையும் வேண்டவே வேண்டாம்
சீரும் கீரும் சுத்த சனியன்கள்
வெண்பாவும் கிண்பாவும் விருத்தமும் கிருத்தமும்
வேண்டாத தொல்லைகள்''

என்று தங்களையே சிறுமைப்படுத்திக் கொள்ளுகின்றனர்— மற்றவர்களையும் துணைக்குக் கொள்கின்றனர்.

புதுக் கவிதைகள் எனத் தலைப்புக் கொடுத்து நல்ல கருத்துகளைச் சொல்லுங்கள். அதற்காகத் தமிழ் மரபுக்கவிதைகளைப் பழிப்பது செறிவான நமது தமிழ் வளர்ச்சிக்கு இடையூறு செய்பவர்களாவோம். மரபுக்குத் தெளிவான இலக்கணம் இருக்கும் போது புதுக்கவிதை அதைவிடச் சிறப்பாகுமா?

கலைஞர் மு. கருணாநிதி அவர்கள்கூட ''கற்பனைகள் உணர்ச்சி பெற்று கவிதைச் சொற்களை பாய்ந்திடும்போது இலக்கணக் கட்டுப்பாடு எனும் கடிவாளத்தை என்னால் பயன்படுத்த முடியவில்லை. அது என் பலவீனம்தான்'' என ஒப்புக் கொள்கிறார்.

மொழி, இலக்கணம், கருத்து, ஆய்வு, என சமஸ்கிருத மய ஆரிய புராணத் திணிப்புக்களை அப்படியே ஒப்புக்கொண்டு, ஒவ்வாத கருத்துரை வழங்குவதிலும்,—தமிழ் இலக்கண இலக்கியங்களில் ''பந்திப் பெருமையில் நொண்டிக் குதிரைகள்'' என்று, ஒட்டத்திற்குத் தகுதியற்றவர்களாக—ஆனால் தகுதி உள்ளவர்களைப்போல அவர்கள் நடிக்கின்றனர். ஏன்? புலமை பெற்றுத் திகழ்வதை சுமையாக நினைக்கின்றனர். சிந்திக்க வேண்டும்.



# 20

# தொல்காப்பியம் என்ற பெயரில் சூடுபோட்டுக் கொண்டவர்கள்

தமிழ்மொழியில் அம்மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களும் வேற்றுமொழி பேசித் தமிழ் மக்களோடு வாழ்ந்தவர்களும், மதம் என்ற சமயக் கோட்டுபாடுகளில்—அதனதன் ஆன்மீக மென்ற கடவுள் வாதக் கருத்துக்களில் கீழாதிக்கம், மேலாதிக்கமென பாகுபாடு கொண்டு முரண்பட்ட பல அறிஞர்களின் எடுத்துக் காட்டுகளோடு ஆய்வுக்கு விமர்சிக்க பட்டதை தெளிவாகவே அறிந்திருப்பீர்கள். குறிப்பாகத் தமிழ் இலக்கிய இலக்கணமான தொல்காப்பியம், சங்ககாலம். அதன் நூல்கள் தொகுக்கப்பட்டு பல அறிஞர்கள் உரை எழுதிப் பதிப் பித்தமையில், முடக்கு வாதங்கள் எங்கெல்லாம் தலைதூக்கி இருக்கின்றன. என்பதையும் அறிவோம்.

தொல்காப்பியம் என்ற தலைப்புக்குரிய நூலில் மதம், தழுவாது, தழுவிய அதாவது இடைச் செருகல் என்று வாதிடும் அளவுக்கு அவற்றில் செய்யுள் வரிகளும்—ஐந்திணை வைப்பு முறைகளுமே மாறி இருக்கின்றன.

காலத்தால் முற்பட்ட தமிழரின் வாழ்வியற் பாங்குகளில் பிற்பட்ட செய்தித் தலைப்பு அதன் பொருள் என்றவாறு பல செய்திகள் திணிக்கப் பட்டிருக்கின்றன—குடும்பம் என்ற தொல்காப்பியப் பொருளியல் கற்பியல்களிலும், புறஇயல் களிலும் குறிப்பாக ஆங்காங்கு கீழ்க்கண்டவாறு.

ஓதலும் தூதும் உயர்ந்தோர்......................

—தொ. பொ. புற 28

என்பதற்கு வேதாந்த மந்திர பொருளுரையாளர் நச்சினார்க் கினியர்;

நாலாவது சாதியான—சூத்திரனைத் தவிர்த்து—இரு பிறப்புள்ளவர்கள் என்று அவர்களால் சொல்லப்படும் **பிராமண, சத்திரிய வைசியன்** என்ற மூவரை மட்டுமே சொல்கிறார்—**ஐயர் அந்தணர்** என்ற தமிழ்ப் பொருள் தலைப்புகளை பிராமணர் களுக்கே சொல்கிறார்.

**அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கம்** —தொ. பொ. புற—74

**தோழிதாயே பார்ப்பான் பாங்கன்** —தொல். பொ. கற்—194

இவ்வாறு வந்துள்ள இடைச்செருகளால் வரி நிரப்பிய செய்யுளில் வந்துள்ள 'பார்ப்பான்' என்ற தமிழ்ச் சொல்லை **நச்சர் பூரணர்** உரைப்படுத்தும்போது, **பிராமணர்** என்றே கூறுகின்றார். பார்ப்பான்'' என்பதைக் கொச்சையாக நினைக்கின்றனர் போலும். ஏனென்றால் **கிரதி, பிரகிருதி, பிரம்மம், பிராமணம், பிராமணியம், பிராமணர்** என்ற வரிசை வந்தவகையில் தங்களைப் பிரம்மாவின் முகத்தில் இருந்து வந்தவர்கள் என்று சொல்வதற்கு ருக்வேதம், மநுதர்மம் ஆகியவற்றை உறுதிப்படுத்துகின்றனர். போகட்டும் விட்டுவிடுவோம்.

தமிழக ஓலைச்சுவடுகளில், ஆங்காங்கிருந்து திருத்தியும் மாற்றியும்—எழுதிப் பாதுகாக்கப்பட்டு வந்த தொல்காப்பியத்தை முதன்முதலில் அச்சேற்றியவர் யார்? 1835—ஆவது வருடம்; திரு. தாண்டவராய முதலியாரால் பதிப்பிக்கப் பட்டது.

அவை தொடர்ந்து தொல்காப்பியத்திற்குப் பிற்பட்ட சங்கத்தமிழ் இலக்கியங்களை அவ்வாறே ஓலைச்சுவடுகளிலிருந்து தமிழ்ச் சான்றோர் பல நூல்களை உரைப்படுத்தியும், அச்சேற்றி பதிப்பித்தும் வெளியிட்டனர். அவற்றில் எட்டுத்தொகையுள் ஒன்றான கலித்தொகையை முதலில் பதிப்பித்தவர் யார்?

| | | |
|---|---|---|
| 1887— | கலித்தொகை—சி. வை. தாமோதரம் பிள்ளை | |
| 1889— | பத்துப்பாட்டுரை—உ. வே. சா | |
| 1894— | புறநானூறு—உ. வே. சா | |
| 1903— | முல்லைப்பாட்டு—மறைமலை அடிகளார் | |
| 1903— | ஐங்குறு நூறு—உ. வே. சா | |
| 1904— | பதிற்றுப்பத்து—உ. வே. சா | |
| 1915— | குறுந்தொகை—தி. சவு. அரங்கனார் | |
| 1920— | ,, | கா. ரா. நமச்சிவாய முதலியார் |
| 1930— | ,, | கலா நிலையம் இராமரத்தினம் |
| 1933— | ,, | அருணாசல தேசிகர் |
| 1937... | ,, | உ. வே. சா. |

ஆக; பேராசிரியர் அறவாணன் தமது தொல்காப்பியக் காஞ்சியம், என்ற நூலில் கூறியவாறும், பேராசிரியர், ப. காளிமுத்து எம். ஏ அவர்கள் எடுத்துக்காட்டியவாறும் சங்க நூல் ஒன்றை முதலில் அச்சேற்றியவர் 'கலித்தொகை' சி·வை. தாமோதரம் பிள்ளை ஆவார். ஓலைச்சுவடுகளைத் தேடி எடுத்து சங்க இலக்கியங்களை பதிப்பித்த முதல் பெருமை உ. வே. சா வைச்சேரும் என்பதும்—அவருக்கு தமிழ்த் தாத்தா என்று முன்னுரிமை கூறுவதும் பிழை என்று கொள்ளவேண்டும்.

உ. வே. சா. பதிப்பித்த 1889—பத்துப்பாட்டு. 1894—புறநானூறு, 1903—ஐங்குறுநூறு, 1904—பதிற்றுப்பத்து, 1937—குறுந்தொகை ஆகியவற்றில்—புறநாறூற்றுரை, குறுந்தொகையுரை ஆகியவற்றில் பிழைபடும் பொருள் திணிப்பினையும் கையாண்டிருக்கிறார்.

புலவர் ஆலந்தூர் கிழார் எழுதிய

"ஆன்முலையறுத்த அறனிலோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத்தோர்க்கும்
பார்ப்பார்த்தப்பிய கொடுமையோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயும் உளவென

புறநானூறு—34

மேலே கண்ட பாடல் மூன்றாவது தலைப்பு வரியை மாற்றி அதற்குப் பார்ப்பனப் பொருள் திணித்த உ. வே, சாமினாதய்யரை மறைமலையடிகளாரும். ஔவை துரைசாமி பிள்ளையும் கண்டு பிடித்தனர்.

மேலே கண்ட பாடற் பொருள் விளக்கமாக;

பால்தரும் பசுவின் காம்புகளை அறுத்தவர்
பெண்ணின் கருவைச் சிதைத்தவர்
பார்ப்பானுக்கு தீங்கு செய்தவர்

ஆகியோர் தண்டனைக்குரிய குற்றவாளிகள்"—என்பதாம். பார்ப்பானை, சூட்சியாக இந்தப் பாடல் வரியில் சேர்க்கப்பட்டிருக்கிறதென்று மறைமலை அடிகளார் கண்டு பிடித்து எழுப்பிய குரல்—ஔவை துரைசாமி பிள்ளையை அந்தப் புறநானூற்றுப் பாடல் உள்ள ஓலைச் சுவடுகளை தேடி எடுத்துப் பார்க்கவைத்து விட்டது. உண்மை என்ன? ஓலைச்சுவடியில் "குரவர் தப்பிய கொடுமையோர்க்கும்".

என்று இருந்த பொருள் வரியில் 'குரவர்'—என்பதை எடுத்துவிட்டு அதற்குப் பதிலாக 'பார்ப்பார்' என்று

உ.வே.சா—கபடமாக அதில் திணித்து தவறு செய்திருக்கிறார். என்பது புரிந்துவிட்டது. குரவர் என்றால்; ஆசிரியர், சான்றோர் எனப்பொருள்படும் அந்த இடத்தில் உ.வே.சா. பார்ப்பனரை வைத்தார். இவர் தமிழுக்குத் தாத்தாவா?
புலவர் அய்யூர் முடவனார் இயற்றிய

**அமிழ்தத் தன்ன வந்தீங் கிளவி**
**அன்ன வினியோள் குணனு மின்ன**
**இன்னா வரும்படர் செய்யுமாயின்**
**உடனுரை வரிதே காமம்**
**குறுகலோம்பு மினறிவுடையீரே**

—குறுந்தொகை—206

இந்தப் பாடலின் பொழிப்புரையாக; ஓர் இளைஞன் தன் (பாங்கன்) தோழனிடம் ''சற்றும் சிந்திக்காமல் ஒரு அழகியிடம் நான் காதல் வயப்பட்டுவிட்டேன். என்ன செய்வது? (இது ஒரு தலைக் காமமான கைக்கிளை) அவள் மனப்பாங்கறியாது பருவத்துடிப்பில் அவசரப்பட்டுவிட்டேன்;— நீங்கள் அதைப் போல நடந்துகொள்ளாதீர்கள்''—என்று கூறுகிறான்.

இதற்கு உ.வே. சா

என்ன பொருளுரை சொன்னார்;

**அறிவுடையீரே—அறிவுள்ளவரே**

**அறிவுரை ஈராகிய—அறிவுரைக்** குரியவர் இருவர் என்ற பொருள்படும்.

ஆனால் மேற்கண்ட பாடல்வரி ஐந்தில் 'அறிவுடையீரே' என்று தான் வருகிறது. இதைப்பன்மையாகக் கொள்ள முடியாது. உ.வே. சா. அதைப் இருவர் என்று பன்மையாகப் பொருள் படுத்துகிறார்

மேலே சொல்லப்பட்ட புறநானூற்றுப் பாடல் வரியில் குரவன்—என்பதை 'பார்ப்பான் என்றே மாற்றித் திணித்தார். குறுந்தொகைப்பாடல் வரியில் இவர் விருப்பம்போல பாடல் வரி மாற்றித் திணிக்காமல் உரைப் பொருளில் அந்த மாற்றத்தைத் திணித்தார். எப்படி?

பாட்டுடைத் தலைவனின் தோழன் பாங்கன் என்ற ஒருவனுக்குப் பதிலாக மற்றொருவனையும், பார்ப்பான் என்ற பெயரில் துணைப்படுத்தி முன்னுரிமையை உறுதிப்படுத்துகிறார். அப்படி என்ன பதட்டம்? இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் குறுந்தொகைப் பாடல்களின் சொற்கள் பொருளின் தரம் கொண்டு சொல்வதில், அது முற்பட்டவை. கி. பி. 10—ஆம்

நூற்றாண்டு 'மாரியம்மன் தாலாட்டு'ப் போன்ற சிறிய நூலான இறையனார் அகப்பொருளுரையோ, பிற்பட்டது.

அதனிலும் வேடிக்கை அதற்கும் திணிப்புரை எழுதியவர். திருச்சியை அடுத்த முசிறி நீலகண்டன் என்ற பார்ப்பனர். உரை எப்படி இருக்கும் என்று சிந்தித்துப் பாருங்கள் உ. வே. சா, அந்த நீலகண்ட உரையை—இவரின் குறுந்தொகை உரைக்கு மேற்கோள் காட்டுகிறார். எப்படி? பொருந்துமா?

"பாங்கனை(தோழனை) பன்மையாற் கூறினார். பார்ப்பனப் பாங்கனைப் பன்மையாற் கூறுவது மரபென்று தெரிகின்றது" (இறையனார் உரை—3) என்று பிழைபடுத்தி இருக்கிறார். இவர் தமிழுக்குத் தாத்தா வா?

............உ. வே. சாமிநாதய்யர்

உரைப்படுத்தியும், பதிப்பித்தும் வெளிவந்த சங்கத்தமிழ் இலக்கிய நூல்களில்—பாடல் வரிகளிலும் பதஉரை, தெளிவுரை, பொழிப்புரைகளிலும் அதில் இருக்கும் மதவாதக் குறும்புகளை யும் மிகைப்படுத்தி இருக்ககூடும் என்ற ஐயுறவே ஏற்படுகிறது. தொல்காப்பியத்திற்கு முன்னே அகத்தியம் என்று சொல்ல வில்லையா? ஐந்திரம், பாணினியம் கற்றே தொல்காப்பிய மென்று சொல்லவில்லையா?

தமிழர்களின் அடிப்படை நூல் என்று மதித்துப் போற்றப் படும் தொல்காப்பியத்தை (1994) அப்படியே மாற்றி எழுதிப் பதிப்பித்து விட்ட இரண்டு மேதாவிகளின் கருத்துக்களையும் அறிவோம்.

தமிழ்ச் சொல், எழுத்து, பொருள் என்பதற்கு அவற்றின் தொடர்பு கொண்டு இலக்கணம் சொல்வது காப்பியம். சிற்றறி வாளர் அந்தத் தொல்காப்பியப்பாவினைத்தை சீர், பொருள், இலக்கணம் பிரித்தல், திணை தெளிவாகிப் பொருள் பிரித்து அறிவதே கடுமை. அவற்றின் கால வரம்பு, வைப்பு முறை உரை விளக்கமென அதே தொல்காப்பியம் என்ற பெயரில் இராம லிங்கம்—பசீரன்—என்ற இரட்டையர்கள் புதிய உரைப்படுத்தி—புது விளக்கமென—அதாவது புதிய தொல்காப்பியமே எழுதி—மற்ற பழைய உரையாசிரியர்களையும் இழிவு படுத்தி இருக் கின்றனர். இது எவ்வளவு பெரிய முரணான துணிவு என்று சிந்தியுங்கள். தொல்காப்பிய வழி நூல் ஆசிரியர்களான

நன்நூல் பவநந்தியார், யாப்பருங்கல அமுதசாகரர், குணசாகரர் அனைவரையுமே பழித்துக் கூறி இருக்கின்றனர்.

கும்பமுனி, குடத்துமுனி, பொதிகைமுனி என்று பலகாலம், பல புராணங்களில் வரும் அப்பட்டமான இடைச் செறுகல் பெயரான அகத்தியரால் தொல்காப்பியம் செய்யப்பட்டது என்று வழுக்கி விழுந்திருக்கிறார்கள். வரலாற்று எடுத்துக் காட்டுகள் இன்றி புராணச் செய்திகளையே வடலூர் இராமலிங்கரையும்—சக்தி மகமாயி பாரதியாரையும் மேற்கோளுக்கு நிறுத்தித் தப்பித்துக் கொள்ள முயல்கின்றனர் பாவம்! அவர்களுக்கு அடிப்படை அறிவிருந்திருந்தால் ஏதாவது புதுநூல் எழுதி இருப்பார்கள். ஆனால், தொல்காப்பியத்தில் வாயை வைத்துப் பற்களை உடைத்துக் கொண்டுள்ளார்கள். பரிதாபம்!

நீட்டோலை வாசிக்கத் தெரியாது நிற்கும் மரங்களான ராமலிங்கப் பகீரதன் என்ற இரட்டையர்கள் தொல்காப்பியத்திற்கு ஆரம்ப முதல் அவ்வப்போது உரை எழுதி வைத்த பெரும் புலமையாளர்களான; இளம் பூரணர், சேனாவரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் தொடங்கி — இந்த இருபதாம் நூற்றாண்டு சுப்ரமண்ய சாஸ்த்திரி, நாவலர் சோம சுந்தர பாரதியார், வெங்கட்ட ராயலு ரெட்டியார், அருணாசலம் பிள்ளை, வெள்ளை வாரணர், மழவை மகாலிங்கய்யர், ஆறுமுக நாவலர், வ. உ. சி, நமச்சிவாய முதலியார், கந்தசாமியார், அழகரடிகள், தேவநேயப் பாவாணர், புலவர் குழந்தை, எனப் பல புலவர் பெருமக்களை வைத்து ஆராய்ந்து மர்ரே ராசம் இரா. ராகவையங்கார், மு ராகவய்யங்கார், அரசண்முகனார், மன்னார்குடி சோமசுந்தரம், வேங்கடசாமி நாட்டார், ஏன்? வையாபுரிப் பிள்ளை எனப் பலரும் உரை எழுதிக் கட்டுரை எழுதிப் படித்துப் பதிப்பித்து—அந்த தொல்காப்பியத்திற்குச் சிறப்புச் செய்தவர்களை எல்லாம்—

''வயிற்றுக்காக வாழ்பவர்கள் விலங்கு வாழ்க்கைக்கே முக்கியத்துவம் அளித்தவர்கள் —அளித்து வருபவர்கள்'' என்றும்,

''வயிற்றுப் பிழைப்பிற்காக தமிழ், தமிழ் என்று சொல்லி வருகிறார்கள். இவர்களில் யாருக்கும் தமிழ்ப் பற்றோ, தமிழுணர்வோ இல்லை. இவர்களிடம் படிக்கும் மாணவர்களிடம் எப்படி ஒழுக்கத்தையும், கட்டுப் பாட்டையும் எதிர் பார்க்க முடியும்'' (பகீரதன்—சத்திய கங்கை—1-12-81) என்று எழுதி இழிவு படுத்தியதோடு, தொல்காப்பிய ஆசிரியருடைய இயற்பெயர் (புராணக் கோமாளி) அகத்தியர் என்பதையும் தெரிந்து கொள்ள முடிகிறது'' எனவும் கூறும் ராமலிங்க

பகீரதன், பவநந்தியாரின் நன்நூல் பாடலில் இல்லாத, 'இவர் கூறும் விளக்கமான 'அகத்தியர்'—யார் எழுதிய உரையில் அவ்வாறு வந்தது? விளக்க வில்லையே ஏன்?

பகீரதன் கூற்றுப்படி "நன்நூல் சமண நூல், சமணத்துக்கு இறை நம்பிக்கை கிடையாது. நன்நூலைத் துணைக் கொண்டு தமிழ் படித்தவர்கள் பெரும்பாலும் இறை நம்பிக்கை அற்றவர் களாகவே இருக்கிறார்கள். தமிழுக்குப் புறம்பானவர்களாக வும் வாழ்கிறார்கள். தமிழைத் திரித்துக் கெடுத்திருப்பவர் களைத் தமிழ் அறிஞர்கள் என்று மௌடீகமாக நம்புகிறார்கள்" (பகீரதன்—சத்திய கங்கை—1-12-81) எனவும் பிதற்றுகிறார்.

இவர்கள் சொல்லும் புராணப் பற்றுத்தான் இறைமை என்றால் அந்த ஆய்வுக்குத் நிறைவான அவர்களே; அவர்கள் தலையை மொட்டை போட்டுக் கொள்ளட்டும்.

வடலூர் இராம அடிகளாரே 'விக்ரக' இறைமை யைப் பற்றிக் கூறும் போது, விவேகானந்தரைப் போல விக்ரக ஆராதனையை வெறுத்து சோதி வடிவமே இறைமை என வழி பட்டாரே! அந்த இராமலிங்கர் பெயருக்குரிய மன்றத்தின் வழிஞர் பகீரதனுக்கு இப்போது என்ன ஆயிற்று?

பவணந்தி முனிவர், சமணர். வீரமா முனிவர் போப் கிருத்துவர். இவர்களுக்கு இவர்சொல்லும் இந்து மதஇறைமைப் பற்று இல்லாததால்—பகீரதன் சொல்வது போல வயிற்றுப் பிழைப்பிற்காகத்தான் அவர்களும் அகத்தியரைச் சொல்கிறார் களா என்ன? இதைச் சிந்திக்க வேண்டும்.

மீண்டும் அந்த கருத்தப்பட்டர் பகீரதன் சொல்லுகிறார்; "வழக்கிலிருக்கும் தொல்காப்பியம் முழுவதும் பிழையாக அச்சிடப்பட்டுள்ளது. ஏராளமான தவறுகள் இருக்கின்றன" என்று.

"தொல்காப்பியம் எப்படி இருக்க வேண்டுமென்பதைப் பற்றிச் சிந்தித்துச் செம்மைப் படுத்திப் பதிப்பித்திருக்கிறோம்" என்று வேறு அவர் நூலில் குறிப்பிடுகிறார். புராண மதவாதப் பட்டர்கள், வரலாற்றுச் செந்தமிழ் இயல், இசை, நாடகங்களை அவரவர் தெய்வப் பாசுரத் தொழுகைகளுக்கே காலங் கால மாகத் திசை திருப்பிப் பயன்படுத்திக் கொண்டு வந்திருக் கின்றனர். பாவம். செம்மறி ஆட்டுப் பக்த ஜன சபையை இந்த கருத்தப்பட்டர்கள்—படை—கூட்டம்—ஏமாற்றுவது ஒரு பெரிய சாதனையல்ல.

ஆரம்பப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி, கல்லூரி, கழகம் என வரிசைப் படுத்தி, காலத்திற்கேற்று மொழி, வரலாறு, இலக்கியம், இலக்கணம், இசை, நாட்டியம், பாடல், விஞ்ஞானம், கணிதம், மருத்துவம், பொறியியல் எனப் பல துறைகள் வகுக்கப் பட்டுள்ளமை நாம் அறிவோம்.

கழகமோ—பல்கலைக் கழகம்; அங்கே பகீரதன் சொல்லும் பார்ப்பன வர்ணதர்ம குருகுல மாணவ வேதாச்சார ஆகமப் பாடம் மட்டும் சொல்லிக் கொடுக்க முடியாது. பல்துறை அறிவு, அனுபவம் பெறுதற்கு, உலகளாவிய வளர்ச்சியடைந்த பிற மொழி அறிவை, "அயல்மொழி அடிமை உணர்விலிருந்து பல்கலைக் கழகங்கள் விடுபட வேண்டும்" என்றும், "ஆங்கில மொழியறிவை வளர்ப்பதற்காக ஏற்பட்ட பழைய அடிமைப் பல்கலைக் கழகங்களாகவே (அவை) இன்றும் செயல்படுகின்றன" என்றும் கூறுகிறார்.

> பகீரதனுக்கு வெளி உலக மொழி, வரலாற்று அறிவு தேவை இல்லாதிருக்கலாம் — அதற்காக இவர் மௌடீகத் தனமாகச் செய்த தொல்காப்பியத்தை திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகத்தில்—அதன் துணை வேந்தர் கருத்தரங்கமாக நிறைவேற்ற அனுமதித்ததே—பாவேந்தர் பெயருக்கு இழுக்குத் தேடித் தருவதாகும். புரட்சிக் கவிஞரே இன்று இருந்திருந்தால் "கொலை வாளினை எடடா—இந்தக் கொடியோர் செயல் அறவே" என்று பாடிக் கொதித்தெழுந்திருப்பார்.

கருத்தப்பட்டர் பகீரதனுக்குள்ள மதவாத வெறியில் வழக்கினுள்ள "தொல்காப்பியம் முழுவதும் பிழையாக அச்சிடப் பட்டுள்ளது" என்று கூறுகிறார். அடுத்து "தொல்காப்பியம் எப்படி இருக்க வேண்டும்?" என்பதையும் இந்தக் குறை குடமான கருத்தப்பட்டர் விளக்குகிறாராம். அந்தோ! இது கொடுமையிலும் கொடுமை இல்லையா?

> தொல்காப்பிய எழுத்ததிகாரம் ஒரு சூத்திரத்திற்கு விருத்தி என 80—பக்கம் எழுதிய சிவஞான முனிவரின் புலமை, நேமிநாதர் உரையும், பிறப்பியல் பாக்களும், நக்கீரர் பெயரால் முசிறி நீலகண்டன் என்ற பிற்பட்ட பார்ப்பனர் ஒருவர் செய்த இறையனார் களவியல் உரை, வீரசோழியம், யாப்பருங்கல விருத்தி ஆகிய இவற்றிலெல்லாம் அவர்கள் எடுத்தாண்ட தொல்காப்பிய எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி

களாகக் கொண்டுதான், தொண்ட மண்டலம் பற்றிய ஆய்வுரையில் வடலூர் இராமலிங்க அருட்பிரகாச வள்ளலார் நூற்பா வரிசை மேற்கோள் விளக்கம் சொல்லி, அனைத்தையுமே, குறிப்பாக 'தொல்காப்பி யர் சூத்திர' மென்றே குறிப்பிடுகிறார். ஆக, பகீரதன் அந்தப் பணி மன்றத்தின் பெயர்த் தலைவரையே பழிச் சொல்லுக்கு ஆளாக்கி விட்டாரே.

மொழி அறிவோ, ஆய்வுத் திறனோ, இலக்கணப் புலமைச் செழுமையோ கிஞ்சித்தும் பெறாத—மத சார்பு அறிவு ஒன்றை மட்டுமே வைத்துக் கொண்டு, அதற்குப் பக்க வலிமை திரட்டி, அந்தத் தைரியத்தில் தொல்காப்பிய உரையாசிரியர்களை இழிமைப் படுத்திய கருத்தப்பட்டர் பகீரதன்—பாவம்—மன, உடல் நோயாளி.

தொல்காப்பிய எழுத்து, சொல், பொருள் யாப்பு ஆகிய வற்றைப் பிரித்து பிய்த்துச் சேர்த்து, வரிசையை முரண்படுத்தி இருப்பதோடல்லாமல், ராமலிங்க பகீரதன்; ''சிலசெய்யுள்களை இலக்கண வரம்பைக் கூடப் பார்க்காமல் பிரித்தும், சிதைத்தும், சேர்த்துத் தவறாக அச்சிட்டுள்ளார்கள்'' எனவும் தொல் காப்பிய ஓலைச் சுவடி உரையாசிரியர்களான பூரணர், நச்சர்—காகிதத்தில் அச்சேற்றிய பிற்பட்ட தமிழ் அறிஞர்களையும் ''ஆடத் தெரியாத குச்சுப்புடி நாட்டியக்காரன் ஒழுங்காக உள்ள தெருவினைப் பார்த்து கோணலாக இருக்கிறது'' என்று பிதற்றியது போல மூடத்தனமாகக் குறை கூறியுள்ளார்.

அகரம், உகரம், இகரம், கிளவியாக்கம், அகம், புறம் பெருந்திணை, கைக்கிளை, மடற்றீரம், கிழத்தி, பரத்தை எனப் பல தலைப்புகளின் பொருள்களுக்கு ஒப்ப முடியாத முரண்பட்ட விளக்கமாக கருத்துகள் கூறி இருக்கிறார்.

''தொல்காப்பியம்'' அனைத்தையும் கூறும் இலக்கண இலக்கிய நூல். தமிழரின் வாழ்வியலை—வளர்ச்சியை, அகம் புற உணர்வு நிகழ்வுத் தன்மைகளை—அக்கால வரையறைகளைக் கணித்துக் கூறுகின்ற நூல்—சமூகப் பொருள் உணர்த்தும் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட நூல். இதை எந்த வரலாற்று ஆசிரியரும் மறுக்க முடியாது'' என்று இறுமாப்புடன் கூறுகிறார் பட்டர்.

வரலாறு என்றால் என்னவென்று பொருள் புரிந்திருந்தால் சக்தி மகமாயி பாரதியாரின்

''ஆதிசிவன் பெற்றுவிட்டான்
ஆரியமைந்தன் அகத்தியன் என்றோர்
வேதியர் கண்டு மகிழ்ந்தே—நிறை
மேவும் இலக்கணம் செய்துகொடுத்தான்''

எனப்பாடி இருக்கிறாரே, இந்தச் சூடு சொரணை இல்லாத பாடலை மேற்கோளாக எடுத்துச் சொல்லி இருப்பாரா?

இந்தப் பட்டர் சிவசேனாபதி பகீரதனுக்கு, சரியாகப் பாரதியாரைப் பற்றியே தெரியாது. எட்டயபுரம் ஜமீனுக்கு எதிராக நடத்ததால் வெளியே அனுப்பப்பட்ட புரட்சிக்காரனாக இருந்த பாரதி—புதுவையில் அரவிந்த ஆசிரமத் தொடர்பில் தான் புராணவாதியாக ஏதோ ருக்வேதம், ஞானரதம், யக்ஞவல்கியர் என்றெல்லாம் பேசவே ஆரம்பித்தார் என முன்னரே கூறி இருக்கிறேன். அவருக்குப் பாடல் இலக்கணத்தைக் கற்றுத் தந்து தெளிவு படுத்தியவரே புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் தான் என்பதை நாவலர் நெடுஞ்செழியனே கூறியிருக்கிறார். இதைப் புரிந்துகொள்ள வேண்டும்,

அகத்தியனை ஆரியன் என்றே சொல்லுகிறார் பாரதி, வாழ்க!—அந்த வேதியன் தமிழ் இலக்கியமான தொல்காப்பியத்தைப் படைத்தானா? அகத்தியன் ஆரியர்களுக்கு உதவியாக ருக்வேதச் செய்திகள் மூலம் உளவாளி என்றல்லவா அறியப்படுகிறான்,

இந்தப் பகீரதக் கருத்தப் பட்டர், அதாவது—ஆரிய அகத்தியனை தொல்காப்பிய ஆசிரியர் எனத் திணித்து வரவேற்கிறார். ஆரியர் திராவிடரை எதிர்த்து நுழைந்த கால அளவே 2500-3000 வருடங்களே என்று கணக்கிடப்பட்டுள்ளது. ஆகவே ஆரியர்கள் என்ன பத்தாயிரம் வருடங்களுக்கு முன்னரே இந்தியாவுக்கு வந்துவிட்டார்களா?

பாரதியாரே பல்கலைக் கழகத்தில் வரலாறு படிக்கவில்லையே! அப்படி இருக்க அவர் சொல்வதை ஏற்றுக்கொண்டு இவர் வரலாற்றையே திசை திருப்பப் பகீரதப் பிரயத்தனம் காட்டுகிறார், இது எவ்வளவு அறியாமை? எண்ணிப் பாருங்கள்.

மேற்கண்ட திணிப்புகளைப்பற்றிப் பக்கம்பக்கமாக எழுதலாம். நாட்கணக்காகப் பேசலாம், ஆனால் அவை வெறும் பேச்சேயாகும். அந்த நடைமுறைப்படுத்த முடியாததை அகத்தியம் என்ற தலைப்பில் 1991இல் வெளியான என் ''சிலப்பதிகாரக் கூத்து'' என்ற நூலில் விளக்கிய செய்தியை சுருக்கமாக இங்கு மீண்டும் நினைவுக்குக் கொண்டு வருகிறேன்.

அலைவாய் (கபாடபுரம்) இரண்டாவது சங்கம்—அதை அடுத்து அந்தக் கடற்கோளால் மிஞ்சிய பகுதியாக மணிமலைச் சங்கம்—இந்த மணிமலையே மகேந்திர மலை எனக் கூறும் அகத்திய சூத்திரமொன்றில் — அகத்தியர் மாகசுவரனைக் கேட்பதாக ஒரு சூத்திரம்.

''திராவிடம் யத்முதா மஹ்யம்
புரா ப்ரோக்தம் புரோரினா''

அதாவது ''திராவிடர்கள் என்னிடமிருந்து திராவிட சூத்திரங்களை அறிய விரும்புகிறார்கள்' அந்தச் சூத்திரங்களை எனக்குத் தெரிவிக்க வேண்டும்'' எனக் கேட்டு, அதற்கு நன்றியாக ''ஆதிமுதலாக எனக்குத் திராவிட சூத்திரங்களை உபதேசித்த அந்த மகேசுவரனை வணங்குகிறேன்''என்று வேறு கூறுகிறார்.

மகேந்திர மலை! (மணிமலை) இந்த அகத்திய சூத்திரத்திற்கு முன்னரே இரண்டாவது கபாட புரச் சங்கம்—பஃறுளி ஆற்று முதற்சங்கம் சொல்லப்படுகிறது. இந்த வரலாறு அறியமாட்டாத வழுக்கைகள் வாயைப் பொத்திக் கொண்டு இருக்க வேண்டும்.

ருக் வேதப் பாடலாசிரியர்கள் வரிசையில் வருகின்ற வசிட்டர்—அவர்களுடன் விசுவாமித்திரரும், அகத்தியரும் இராமாயணத்தில் வருகின்றனர். தென்குமரி ஆய்வுப் பாதையை மூடிவிடலாமென்றோ என்னவோ இலங்கை என்பதே இமய மலைப் பக்கம் உள்ளதென்று ஆய்வு செய்ததாகக் கூறுகின்றனர், அரசியல்த் தலைவர்கள் என்ற பெயரில் உள்ள இந்தும்த ராம ராச்சியத் தலைவர்களோ பாபர் மசூதி ஆய்வாளர்களைத் திசை திருப்பி இராமன் கோயில் அங்கு இருந்ததாகச் சொல்லுங்கள் என்று பயம் காட்டியதுபோல தென்குமரி இலங்கையின் ஆய்வு அப்படி இருக்குமோ என்னவோ? உண்மைக்கு மாறான எந்த ஆய்வும், எழுதி வைப்பும், கட்டுமானமும் சர்வதிகாரத்தை வலுப்படுத்துமே தவிர—சமாதானம் என்று வரும்போது அவை சரிந்து சாய்ந்து படும்,

எழுத்து, சொல், பொருள் கொண்டு தொல் காப்பியக் காலவரையை கி. மு. 700—என்றே ஆய்வாளர் இராகவய்யங்கார், மு வரதராசனார், பா. இராசமாணிக்கனார், இலக்குவனார், தேவநேயப் பாவாணர், வெள்ளை வாரணனார் ஆகியோர் மதிப்பிட்டனர்.

ருக் வேதம் சொல்லும் அரப்பா, மொகஞ்சதாரோ, மன்னன் சம்பரன் வழியினருடைய காலமும் கி. பி, 1920—21 புதைப் பொருள் ஆய்வில் கிடைத்த செய்தி பொருள் தொடர் எழுத்து வடிவங்கொண்டு கால அளவுவரை மதிப்பிடப்பட்டாலும் இன்றுவரை 4000—5000—வருடங்களே நிற்கின்றன,

தமிழ் மொழிக்கு திராவிட இனத்திற்குத் தொன்மைகூற முடியும்; அதை ஆய்வு செய்யலாம். ஆரியர் நுழைவில் வந்த அகத்தியன்—சிவனுக்கு 10 ஆயிரம் வருடங்கள் சொல்வது புராணக் கேலிக் கூத்தாகும்.

வரலாறு, ஆய்வு என்பதற்கு எந்த வகையில் எதைப் புரிந்து [கொண்டாரோ மேதகு பகீரதன்?—ஆனாலும் தமிழ் இலக்கண இலக்கியங்களில் வடலூர் இராமலிங்க அடிகளின் அருட்பாக்களில்—குறட்பாவைச் சொன்னாலும் கேட்கலாம். பிழைபட்ட, இலக்கணமில்லாத மதவாத திணிப்பு—எடுத்துக்காட்டாக, மருப்பாவை அல்லவோ கூறுகிறார். [பாவம் அறியாமை! அல்ல! அறிந்தே செய்யும் கர்சேவை.

தொல்காப்பிய, சொல், எழுத்து, அணி, யாப்பிற்கு (செய்யுள்) வரையறுத்து வளர்த்துக் கொள்ளப்பட்ட இலக்கணங்கள் இருக்கின்றன. புலமையாளர் அவற்றைத் தமிழ் வளர்ச்சியில் வலியுறுத்திப் படிப்பித்துக் கொண்டு வருகின்றனர். தொல்காப்பிய பொருளதிகாரப் பாக்கள் நிலவாரியாக வளர்வன பறப்பன நடப்பன, இயற்கை என, அந்தந்த மக்களின் பருவங்கள் களவு, காமம், உறவு, குடும்பம், பிரிவு, இழப்பு என்று இவற்றின் மெய்ப்பாடுகளைக் கூறுகின்றன. அவற்றில் தமிழினத்தின்—திராவிட—முற்பட்ட வாழ்வியல் சிறப்பு—புறத்துறைச் சிறப்புகளையும் அறிய முடிகிறது. சிறுசொல், பெரிய விளக்கமாக உரைப்படுத்திக்கொள்ள இடம் தருவது தொல்காப்பியம் ஆகும். விலங்கிடமிருந்தும், பறவைகளிடமிருந்தும் மனிதன் அனைத்தையும் கற்றுக்கொண்டே, கால வளர்ச்சியில்—காதல், இன்பம், துயரம், இறப்பு, பிறப்பு, என வாகத் தலைமுறை தலைமுறையாக அனுபவித்து வருகிறான். அவ்வழியில் சோம்பேரிகளும், வந்தேரிகளும், மதத்தரகர்களும், கோவணத்தாண்டிகளாக நடித்து வாழும் இவர்கள், சகல கலா சம்பன்னர்களாக வாழ்பவர்கள். இவர்கள் பொது நோக்கும், புலமையும், உலக அறிவியலும்; நியாயமான சகவாழ்வு

பெற்றவர்களின் நிழலில்கூட நிற்கத் தகுதியற்றவைகளாகும். காமம் இன்றேல் பிறப்பு வளர்ப்பேது? அது பகீரதத்திற்குத் தெரியாததா?

இந்தப் பஞ்ச பூதத் தத்துவமறிந்தும் அதைக்காட்டிக் கொள்ளாத இவர்கள் இல்லறத்தை ஏற்று நடாத்தும் தகுதியில் அச்சமுற்றவர்களாகச்சொல்லும் வரையோட்டு வேதாந்தத்தை அவர்கள் குழுவினர்களுடன் நிறுத்திக்கொள்ள வேண்டும்.

உன்னதத் தமிழ் இலக்கியங்கள் எல்லாம் காம வனவிலங்குகளின் வாழ்க்கையைச் சொல்வதென்றால் இவர்களைப் பற்றி முதலில் நினைத்துப் பார்க்கட்டும்!

"ஒழுக்கத்தை வற்புறுத்தும் தமிழ் இலக்கியங்களைப் படிப்பதில்லை. தவறான சங்க இலக்கியங்களை மட்டுமே அதிகம் படிக்கிறார்கள்." என்று கூறுகிறார் கருத்தப்பட்டர், ஞானப்பழம் பகீரதன்.

வாழ்வியற் செய்திகளைச் சொல்லும் சங்க இலக்கியங்களை ஒழுக்கக் குறைவான படைப்புகள் என்றால் அதை ஒதுக்கிவிட்டு இவர்கள் சொல்லி வழிபடும் நூல்களான ஆரியமைந்தன் அகத்தியனின் ஏட்டையும், சிவமாலியப் புராணத்தையும், வடலூர் அருட்பா, கிரிதாரி பிரசாத்தின் கண்ணன் காட்டிய வழிகளை மட்டுமே படித்து, தலைமொட்டையடித்துக் கொண்டவர்களாக வேண்டுமா?

> இந்த மாண்புமிகு பகீரதனுடைய விளக்கமெல்லாம், திணிப்புகளுக்கு செல்வாக்குத் தேடி நிலைநிறுத்த முயற்சிக்கும் வீம்பாகவே இருக்கிறது. இது வளர்ந்த இலக்கிய இலக்கண சமுதாய விழிப்புணர்வுகளுக்கு முட்டுக்கட்டை போட்டு முடமாக்கும் முயற்சியாகவே தோன்றுகிறது.

"சங்க இல்க்கியப் பாடல்கள் மொத்தம் 2400.—இவற்றுள் சுமார்-150 பாடல்கள்தான் தமிழ் மரபுடன் கூடிய பாடல்கள்" என்கிறார் பரிதாபத்துக்குரிய பட்டர் பகீரதன்.

எட்டயபுரம் பாரதியார் புதுவை வந்து சேர்ந்தபோது தன்னை கர்சேவாக்காரர் என நிறங்காட்டி ஆரிய சமாச அரவிந்தர் ஆசிபெற்று, புத்தர் கொள்கைஇந்தியாவில்பரவினால் மக்கள் அனைவருமே மொட்டை போட்டுக் கொண்ட சந்நியாசி ஆகிவிடுவார்களே!" என்றார்.

சங்கர மகாத்மியம் அந்த மொட்டைகளை விடமாட்டாது என்றும் கூறினார். அதைப்போல ஆடு நனைவது கண்டு ஓநாய் வருந்தியதுபோல இந்தப் பகீரதன் 2400—சங்கப் பாடல்களில்—இவர் சொல்லும் 150 பாடல்கள் மட்டும்—ஓடு தண்ணீரில், அனைத்து சங்கப்பாடல்களையும்—வீசியபோது இவை மட்டும் நீந்தி வந்தவைகளா? இல்லை ஔரங்கசீப்பின் படையெடுப்பில் தமிழகத்தில் இருந்து டெல்லிக்கு அள்ளிக்கொண்டு போய் அவர் தீர்த்த மாடிய சுடுதண்ணீர்ப் பானைகளுக்கு எரித்த ஓலைச் சுவடிகளில் அகத்தியனின் சாகாவரம் பெற்றுத் திரும்பி வந்தவைகளா?

பிற்பட்ட மாறன் பொறையனார் பாடிய ஐந்திணை 50 எல்லாம் பகீரதன் சொல்லும் பக்தி, மத இலக்கியங்கள்! இந்திய ஆரியக் கலப்படங்கள் என்று அறியவும்.

கிருத்துவுக்கு முந்திய தொல்காப்பியம், திருக்குறள் ஆகியவை சொல்வதே காமப்பால்.—விலங்குணர்வு அறியாமலா தேவார நால்வரும், ஆழ்வார், வள்ளலார், ஏன்? பெரிய திருமடல், சிறிய திருமடல் எழுதிய வைணவத் திருமங்கை யாழ்வாரின் மதன உற்சவ சூடிக்கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாள் நாச்சியார் எல்லாம் காமவழியினர் இல்லையா? இவற்றை பற்றி எல்லாம், சிந்திக்காத பகீரதன் என்ன பதில் கூறமுடியும்?

> "தில்லைச் சிற்றம்பலவனே பெண்பால் உவந்த பெரும்பித்தன் எனத் திருவாசகமாணிக்க வாசகர் கூறுகிறாரே!
>
> 'காம மடற்றிறக் கிளவிக் கோவையள்'
>
> "மின்னியல் கண்ணின் வலை கலந்து
> வீசின போதுள்ள மீனிழந்தார்
> வியன்தென் புலியூர்
> ஈசன் சாந்தும் எருக்கும்
> அணிந்தோர் கிழிபிடித்துப்
> பாய்ச்சினமாவென ஏறுவர்
> சீறூர் பனை மடலே''

என்றார் திருக்கோவையார்.

இந்த ராமலிங்கப் பணிவிணைஞர் பகீரதனுக்கு, சிவலீலை, மாயாவதார லீலை, கூறும் தமிழ் மதனக் கதை இலக்கியங்கள், ஏன்? வால்மீகி ராமாயணம், வில்லிபாரதம், அனைத்துமே பக்தி, புனிதம், என்ற பெயரில் காமவெறிகளையும், ஒழுக்கக் கேடுகளையும் பலருக்குக் குழந்தை பெற்ற கற்பின்மையையும்

உணர்த்தி, தொலைக்காட்சிகள் வரை படமாக்கப்பட்டு வந்த அவைகளோ உங்கள் போன்றவர்கள் கசிந்துருக வெளிப்படுத்தப் பட்டதே! அது தெரியாதா? இப்படியும் அப்பட்டமான ஒழுக்கக் கேடான கதைகளா? ஐவருக்குப் படுக்கை விரித்த திரௌபதியை வீரப்பெண் எனப் பாடினாரா பாரதியார்? என்று கேட்டு இளந் தலைமுறையினர் சிரிப்பது காதில் விழவில்லையா?

இந்தக் கருத்தப்பட்டரின் தமிழ் இலக்கிய அறிவே இவ்வாறு தெளிவில்லாத முரண்பாடுகளைச் சிறப்பிக்கின்றது.

புறநானூற்றுப் பாடலின் வரியில்

''பல்சான்றீரே! பல்சான்றீரே!
பயனில் (லாத) மூப்புப் பல்சான்றீரே!''

என்று கூறியவாறு வயதாகியும், குதர்க்கமும், கண் சிவப்பும் கொண்டுள்ள பகீரதன்—யாப்பு இலக்கணத் தில் செறிவோடு பொருள் பொதிந்த; இவர் சொல் வதைப் போல விலங்கின் உணர்வெழுப்பும் காமத்துப் பால் 25—அதிகாரச் (செய்யுள்) செய்திகளைக் கொண்ட திருக்குறளில்— அந்த ஈற்றடிக் குறள் வெண்பாவை குறை சொல்லி—இது இப்படித்தான் இருக்க வேண்டும் என்று, அதுவும் வரலாற்று முறைப் படி என செம்மைப் படுத்தியதாகச் சொல்கிறார், என்ன? எப்படி?

'வரலாற்று முறைப் படுத்திப் பொருளைச் சொல்கிறாரா? குறட்பாவின் இலக்கணம் சொல்கிறாரா?

இவை இரண்டுமே பிழை என்பதை இவர் அறிவாரா?

மகாகணம் ஓம் சக்தி பகீரதருக்கு வரலாறு என்றால் என்ன என்று தெரியாத நிலையினால்,நான் தெரிந்தும் வரலாறு என்பதை புராணம் என்று பிதற்று கிறார். அவர் சொல்லும் அந்த வரலாற்றுப் பொருள்;

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு''

திருக்குறள்—1

இவற்றின் இலக்கணச் சீர் கூறுமிடத்து;

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| அகர | முதல | எழுத்தெலாம் | ஆதி |
| நிரைநேர் | நிரைநேர் | நிரைநிரை | நேர்நேர் |
| புளிமா | புளிமா | கருவிளம் | தேமா |

| 5 | 6 | 7 |
| --- | --- | --- |
| பகவன் | முதற்றே | உலகு |
| நிரைநேர் | நிரைநேர் | நிரைநேர் |
| புளிமா | புளிமா | பிறப்பு |

இரண்டடி கொண்ட குறள் வெண்பாவின் முதல் வரிக்கு நான்கு சீர்களும், இரண்டாமடிக்கு மூன்று சீர்களுமாக ஏழு சீர்களாகக் கொண்டவை குறள் அடி இலக்கணம்.

மேற்கண்ட 'அகர முதல' என்ற குறளின் முதலடியில் நான்காவது சீரில் மோனை, 'ஆதி' என வந்து—இரண்டாமடியில் முதற்சீரான 'பகவன்' என்ற தலைப்பில் 'அகரத்'திற்கு 'பகவன்' என்ற எதுகைத் தலைப்புடன் பொருட்சீர் வந்தமை அறிக.

வெண்பாவில் இயற்சீரானாலும் — வெண் சீரானாலும்

''மாமுன் நிரையும் காய்முன்
விளமும், விளமுன் நேரும்'' (காயும்)

வர வேண்டும் என்பது இலக்கணம். மேற்கண்ட குறளில் 'அகரமுதல்' முதலடி வரிச் சீர்கள் நான்கில் மூன்றாம் சீராக வரும் 'எழுத்தெலாம்' என்பது 'நிரை நிரை' என கருவிளச் சீர்.

'எழுத்தெலாம்' என்பது 'எழுத்தெல்லாம்' என விரிந்தாலும்—'புளிமாங்காய்' என்ற 'நிரை நிரை நேர்' —என்ற காய்ச்சீரே வரும்—ஆனாலும் அதன் தொடர்பான அடுத்த சீர் 'நேர்' என்ற பெயரிலோ, 'காய்'என்ற பெயரிலோ 'ஆதி' என்ற தேமா(நேர்நேர்)ச் சீர் குறளில் ஒழுங்காகக் கொள்ளப்பட்டிருக்கிறது.

இந்த முறை மாறினால்—அது குறள் வெண்பாவிற்குரிய இலக்கணமல்ல. ஆனால் திருவள்ளுவர் குறள் இலக்கண வெண்பா வகை அனைத்தையுமே திருக்குறளில் கொட்டிக் குவித்திருக்கிறார்—இலக்கண மாமேதை.

தமிழாசிரியர் என்று சொல்லப்படும் ராமலிங்கனாருக்கு இலக்கணம் தெரிந்திருக்க வேண்டும். அவருடைய பேச்சு எடுபடவில்லையோ—என்னவோ. இந்த இலக்கணம் அறியாத, நமது அனுதாபத்திற்குரிய பெரியவர் புராணீகர் பகீரதன் வெகு எளிதாக இலக்கணப் பொருள் கூற முன்வந்து விட்டார்.

அதேக் குறளின் முதலடி—நாலாவது சீரில் 'ஆதி' என்பதை முதலில்—முதல் வரிசை வரியில் போட்டு; அதாவது,

"ஆதி அகர முதல எழுத் தெல்லாம்
பகவன் முதற்றே உலகு"

எனத் திருத்திக் காட்டுகிறார். எவ்வளவு அயோக்கியத்தனமான செயல் இது என்பதை இலக்கணமறிந்த தமிழ் மேதைகள் எண்ணிப் பார்க்க வேண்டும். உண்மையில் தமிழ்ப் பற்று மிக்கவர் யாரும் இதைச் சகித்துக் கொள்ள மாட்டார்கள்.

அவர் சொல்லி இருக்கும் மேலே கண்ட அடியமைப்புக்கு என்ன சீர்? எத்தனை சீர்? என்பது அவருக்கே தெரியாது—தெரிந்திருக்க மாட்டார்.

பாரதி சொன்ன 'ஆதிசிவன், ஆரிய மைந்தன் அகத்தியன்' இவரை எங்கெங்கு திணிக்க வேண்டுமோ—அங்கெல்லாம் புகுத்த பெரும்பாடு படுகிறார். பிழைபட்ட நடை, பொருள் திணிக்க 'பா'விலக்கணச் சீர்களையே—சொற்றொடர்களையே—கூட்டியும், குறைத்தும் சீர்பிழை படவும் குழப்பி இருக்கிறார். இது பெரிய தவறானதாகும்.

வழக்கில் சொல்லப்பட்ட ஐம்பெரும் காப்பியங்களில் குண்டலகேசி முழுமையாக இன்றி அழிந்து சிதைந்து போனது. யோகி சுத்தானந்த பாரதியாரும், பெரும் புலவர் மதுரை இளங்குமரனாரும் அதை உருவகப் படுத்தினார்கள். அவர்கள் எழுதிய நூலாகத்தான் அவை கொள்ளப் பெற்றது. பழைய நூல் என யாரும் சொல்லவில்லை.

ஆனால் தொல்காப்பியம் என்பது நெருப்புள்ள அடுப்பாகும். அதில் குளிர் காயலாம்—தொட்டால் சுட்டுவிடும். அலைகள் ஓய்வவதில்லை—வாடைக் காற்று (ஊதக்காற்று) தட்ப, வெட்பம், உணர்ந்து வீசும்—அவ்வளவுதான்.

இடைப்பட்ட தமிழ் மறுமலர்ச்சி ஆய்வில் ஐயா காசுப் பிள்ளை, அதில் அரிய செய்திகளைத் தொகுத்து எடுத்தார். ஆனால் பொய்யா வையாபுரிப் பிள்ளையோ கெடுத்தார்.

மீசைக்காரர் மகாக்கனம் டி. கே. சிதம்பரநாத முதலியார் இரா. சேதுப்பிள்ளை இருவரும் மற்றும் பலரும் ராமாயண மகாபாரதக் கதைகளை பட்டிமன்றம், வழக்காடு மன்றம், என

மேடைக்கு மேடை தொண்டை கிழியக் கத்தினார்கள். (இன்றும் அவை தொடர்கிறது.) அப்போதே இதை தந்தை பெரியார் ஏறிட்டுப் பார்த்தார். அறிஞர் அண்ணா தீப்பந்த மேந்தினார். பெரும்பாலான மதவாதிகளும் தமிழ் என்ற பெயரில் முழக்கம் தொடங்கினார்கள். கடந்த 10 வருடங் களுக்கு முன்னர் இது போன்று—நடந்த ஒரு பகீரதப் பிரயத்தனம் கூட பிசுபிசுத்துப் பிறகு 'சத்திய கங்கையும்' ஓய்ந்து தொல் காப்பியம் என்ற பெயரில் இராமலிங்கம் என்ற ஒருவரை முன் நிறுத்தி பின் குரல் கொடுக்கும் இந்தக் கர்சேவா மனிதரை' முற்பட்டுச் சொல்லி வந்த உண்மை விளக்கங்களின் வரிசையில் இவரை ஒருவராகச் சேர்த்துக் கொள்ள வேண்டியதில்லை. விட்டு விடுவோம். ஆனாலும் முரண்பாடுகளுக்கு என்றே உரை எழுதப்பட்ட இராமலிங்க பகீரதத் தொல்காப்பியம், ''இனியும் இரகசியமாக அது வெளியேறி விமர்சிக்கப்படுமானால் நாம் பாதுகாத்து வந்த தமிழ் இலக்கண இலக்கியம் மாசுபட்டு இவர்களின் பிழையான தொல்காப்பிய உரை மேற்கோளை எடுத்து தமிழர்கள் திசை மாற்றி—மாறி அடிமையாகி விடுவார் களே'' என்று தமது 96 ஆவது வயதில் அந்த விழாவில் 'முத்தமிழ்க் காவலர்' கி. ஆ. பெ. விசுவனாதம், ஏன் அவர் சாகும் தறுவாயிலும் துயரப்பட்டார் என்பதை நாம் விழிப் போடு நினைவு கொள்ள வேண்டும்.



# பிழைத் திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 29 | சுத்த் | சுத்த |
| 10 | 8 | இன்னும் | இன்றும் |
| 12 | 12 | படுகின்தனர் | படுகின்றனர் |
| 28 | 35 | சிந்தனை | நிந்தனை |
| 29 | 11 | மகனென்று | மகளென்று |
| 32 | 27 | திருவள்ளலரிடம் | திருவள்ளுவரிடம் |
| 38 | 16 | கண்ணின் | கண்ணனின் |
| 38 | 32 | அந்தணரோ | அந்தணரே |
| 39 | 3 | பிரபஞ்தம் | பிரபந்தம் |
| 40 | 2 | லிமர்சித்த | விமர்சித்த |
| 40 | 14 | அவை | அதை |
| 42 | 22 | உவச்சர்ன் | உவச்சர்கள் |
| 49 | 27 | 10து | (10) பத்து |
| 51 | 18 | முனமைவும் | முன்மையும் |
| 55 | 25 | எடுகளா? | ஏடுகளா |
| 57 | 27 | என்னும் | என்றும் |
| 58 | 31 | செய்யப்படும் | செய்யப்படட்டும் |
| 59 | 2 | வத்தனா | வந்தனர் |
| 59 | 23 | நிவாகரநிகண்டு | திவாகரநிகண்டு |
| 65 | 20 | சைணம் | சமணம் |
| 69 | 34 | மசுன் | மகன் |
| 72 | 19 | காப்பற்றி | காப்பாற்றி |
| 73 | 32 | கிராதாயுகம் | திரேதாயுகம் |
| 77 | 12 | ருக்திப் பிறந்தவன் | னுக்குப்பிறந்தவர் |
| 80 | 3 | கரை | கதை |
| 80 | 14 | அகராகாரச் | அக்ரகாரச் |
| 80 | 27 | தமிழ் | தமிழ் |
| 81 | 5 | அறித்து | அழித்து |

| | | | |
|---|---|---|---|
| 83 | 9 | மதத்தன் | மதத்தின் |
| 83 | 26 | அண்ண | அண்ணா |
| 63 | 28 | பாவணர் | பாவாணர் |
| 83 | 28 | செயதார் | செய்தார் |
| 83 | 34 | பாவணரைக் | பாவாணரைக் |
| 116 | 6 | முதுமை | இறப்பு |
| ,, | 37 | போதளைகளில் | போதனைகளில் |
| 118 | 16 | தீண்டமை | தீண்டாமை |
| ,, | 19 | சினிவாசய்யங்கார் | சீனிவாசய்யங்கார் |
| 120 | 4 | எதிர்த்து | எதிர்த்தது |
| 123 | 36 | மலையாம் | மளையாளம் |
| 129 | 28 | இனிச்சவாயர்கள் | இளிச்சவாயர்கள் |
| 130 | 5 | ஒலிப்பேழையாகவு | ஒலிப்பேழையாகவும் |
| ,, | 11 | நடானும் | நாடாளும் |
| ,, | 27 | அங்காங்குள்ள | ஆங்காங்குள்ள |
| 131 | 5 | மரண்புமிகு | மாண்புமிகு |
| ,, | 18 | ருபாய் | ரூபாய் |
| 132 | 5 | விசரணைக் | விசாரணைக் |
| ,, | 15 | கர்நாடக | கர்நாடகத் |
| 133 | 33 | முடிக்காணிக்க | முடிக்காணிக்கை |
| 136 | 7 | கோன்று | கொன்று |
| 119 | 11 | பொருட்டாகி | பொருட்டாக |
| 141 | 21 | கவ்நாயக் | கல்நாயக் |
| 147 | 2 | காஞ்சியம் | களஞ்சியம் |
| 149 | 30 | பகிரன் | பகிரதன் |
| 152 | 2 | னுள்ள | னுள்ள |
| 154 | 9 | நடத்ததால் | நடந்ததால் |
| ,, | 11 | புராணவாதிதுயாக | புராணவாதியாக |
| 155 | 5 | மாகசுவரனைக் | மகேசுவரனைக் |
| 156 | 17 | மருப்பாவை | மருட்பாவை |
| 159 | 15 | மகாகணம் | மகாகனம் |
| 160 | 20 | நிரை நிரைநேர் | நிரைநேர்நேர் |

